# மூவர் தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்—முதற் பிரிவு

[பொதுப் பகுதி]

ஆசிரியர்கள் :
வித்துவான் கோ. வில்வபதி
வித்துவான் எம். எஸ். வேங்கடாச்சாரி
டி. ஆர். ஸ்ரீநிவாசன், பி.ஏ., பி. டி. (தமிழ்)
இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி, சென்னை.




வர்தா பதிப்புக் கழகம்
திருவல்லிக்கேணி : : சென்னை

[விலை ரூ. 1-2-0

# முகவுரை

'மூவர் தமிழ் வாசகம்' என்னும் இந்நூல் வரிசை அண்மையில் (26-6-51-இல்) வெளியிட்ட பாடத்திட்ட முறைக்கு ஏற்ப எழுதப் பெற்றதாகும்.

பாடத் திட்டப்படி முதல் மூன்று படிவங்களுக்குத் தாய்மொழிக் கல்விமுறை பொதுப்பகுதி என்றும், சிறப்புப் பகுதி என்றும் இரண்டு பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. இரண்டு பகுதிகளிலும் அமைய வேண்டிய பாடங்களின் இயல்புகளும், செய்யுட்களின் வகைகளும் தரப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதி முதற் பகுதியை விடச் சிறிது உயர்ந்த நடையுடையதாய் மாணவர்க்குத் தமிழ்ச்சுவை ஊட்டக் கூடியதாய் இருத்தல் வேண்டும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அம்முறையை நன்கு உளங்கொண்டு இவ்வாசக வரிசை எழுதப் பெற்றுள்ளது.

இந்நூல் மூன்றும் படிவ மாணவர்க்குரிய பொதுப்பகுதி நூலாகும். இதில் உரைநடையும் செய்யுளும் மாணவர் விரும்பிக் கற்குமாறு எளிய இனிய தமிழ் நடையில் அமைக்கப்பட்டுள்ளன. உரைநடையில் அரசாங்கத்தார் குறிப்பிட்ட அளவுப்படி பாடங்கள் அமைந்துள்ளன. செய்யுட் பகுதியில் சில வரிகள் அதிகமாகத் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் தம் விருப்பத்திற்கு ஏற்றவாறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு இம்முறை உதவியாக இருக்கும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொல் விளக்கம், பயிற்சி வினாக்கள் முதலியன தரப்பட்டுள்ளன. ஆங்கில முறையை யொட்டிச் சிறந்த மொழிப் பயிற்சிகளும், கட்டுரைப் பயிற்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்தாரின் பாடத்

திட்ட முறைக்கு ஏற்ப ஒவ்வொரு பாடத்திலும் சிறந்த இலக்கணப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. உரைநடைப் பாடத்தைக் கற்பிக்கும் போதே இலக்கணப் பகுதியையும் தொடர்பு படுத்திக் கற்பிப்பது சிறந்த நன்மையளிக்கும். மாணவர்கள் இப்பயிற்சிகளைச் செய்து பழகுவதால் அவர்களுடைய தமிழறிவு வளர்ச்சி பெறும்.

செய்யுட் பகுதியிலும் ஆசிரியர் குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், விளுக்கள், பலவிதமான மொழிப் பயிற்சிகள் ஆகியன அளிக்கப்பட்டுள்ளன. இவை தமிழ்ச் செய்யுட்களைக் கற்பதில் மாணவர்க்கு ஆர்வம் ஊட்டும் என்று கருதுகிறோம்.

இந்நூல் மாணவர்க்குப் பெரும்பயன் விளைக்கும் என்பது எங்கள் எண்ணம். அறிஞர்கள் இந்நூலை ஆதரித்து மேலும் எங்கட்கு இத்துறையில் ஊக்கமளிக்குமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்கள்

# எங்கள் நன்றி

கீழே தரப்பட்டுள்ள பாடல்களையும் படங்களையும் இந் நூலில் வெளியிட அருள்கூர்ந்து இசைவு தந்த அறிஞர்கள் அனைவர்க்கும் எம் வணக்கமும் நன்றியும் உரியன :

1. கலைமகள், பாஞ்சாலி சபதம்—(44 வரிகள்) பாரதியார், சென்னை அரசாங்கக் கல்வி இலாகா.
2. தமிழ்மொழி, முழுநிலா—(20 வரிகள்) கவிஞர் பாரதிதாசனர், புதுவை.
3. விடுதலைக்கு உழைத்த வீரர்கள்—(12 வரிகள்) கவிஞர் நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை அவர்கள்.
4. Abraham Lincoln—By Courtesy U. S. I. Service, Madras.
5. Government House, Ooty—By Courtesy Klein & Peyrl, Madras.

—பதிப்பாளர்.

# பொருளடக்கம்

எண் பக்கம்

## செய்யுட் பகுதி

# மூவர் தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்—பொது



## உரைநடைப் பகுதி

---

### 1. உழைப்பும் உயர்வும்

உலகப் பேரறிஞரான வள்ளுவனார் 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்று கூறியுள்ளார். உலகில் வாழ்பவர் அனைவரும் எவ்வகையினாலாவது புகழ்பெற்று வாழவே விரும்புகின்றனர். புகழடைய விரும்பாதவர் ஒருவரும் இலர். அப்புகழை அடைவதற்குரிய வழிகள் பல உள்ளன. அவற்றுள் மிகச் சிறந்தது உழைப்பேயாகும்.

உழைப்பாவது யாது? மேற்கொண்ட நற்செயலில் வெற்றி காணும் வரையில், எத்தகைய இடையூறுகள் நேர்ந்த போதிலும் மனம் தளராமல், உள்ளத்தாலும் உடலாலும் ஓயாது பாடுபடுவதே உழைப்பாகும். உழைப்பின் சிறப்பைப் பற்றி நம் நாட்டு அறிஞர்களும், பிற நாட்டுப் பெரியோர்களும் கூறியுள்ள பொன்மொழிகள் பலவாகும். 'முடியாது என்பது சோம்பேறிகளின் வார்த்தை' என்று உலகப் பெருவீரர் நெப்போலியன் கூறியுள்ளார். 'தன்னம்பிக்கையோடு முயற்சி செய்தால் வாழ்வில் வெற்றிபெறலாம்' என்று ஜேம்ஸ் ஆலன் என்ற பெரியாரும் எடுத்துக் காட்டியுள்ளார்.

> " ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்று பவர்."

என்பது தெய்வப் புலவர் திருவள்ளுவர் வாய்மொழி யாகும். 'சோம்பலின்றி ஒரு செயலில் இடைவிடாமல் முயன்று உழைப்பவன் விதியையும் வென்று விடலாம்,' என்பது இப்பாட்டின் பொருளாகும். விதியையே வென்று

விடலாமெனின் உழைப்பால் பெறக்கூடாதது ஒன்று உண்டோ ?

உழைப்பு என்ற சிறந்த பண்பு தன்னம்பிக்கை, விடா முயற்சி, நுண்ணறிவு, அஞ்சாமை ஆகிய பிற குணங்களை அடிப்படையாகக் கொண்டே உண்டாகின்றது. ஒரு செயலைச் செய்யத் தொடங்கும்போது அச்செயலைத் தான் செய்து முடித்தல் கூடும் என்று தன்னுடைய ஆற்றலில் ஒவ்வொருவரும் நம்பிக்கை கொள்ளல்வேண்டும். இதுவே தன்னம்பிக்கை எனப்படும். தன்னம்பிக்கை மட்டும் இருந்து ஒரு செயலில் விடாமல் முயலும் பண்பு இல்லை யென்றாலும் அச்செயல் வெற்றிபெறாது. ஆகவே ஒரு செயல் வெற்றி பெற உழைத்தற்கு உள்ளக்கிளர்ச்சியும் இன்றியமையாததாம்.

ஒரு செயலைச் செய்யத் துணிந்து ஊக்கத்துடன் உழைத்தாலும் காலம் கருதி, இடமறிந்து செய்யவில்லை என்றால் அச்செயல் முடியாது; உழைத்த உழைப்பும் வீணாகும். ஒருவர் தக்க காலமறிந்து, ஏற்ற இடமறிந்து ஊக்கத்துடன் உழைத்தால் இவ்வுலகையே தமக்குரிமை யாக அடைய நினைத்தாலும் அடையலாம். அதற்கு நுட்பமான அறிவு வேண்டும். அறிவில்லாதவன் காலம், இடம் அறிந்து ஒரு காரியத்தைச் செய்தல் இயலாது.

ஒருவர் தாம் செய்ய எடுத்துக்கொண்ட செயல்களில் வெற்றிபெற எண்ணற்ற இடையூறுகள் ஏற்படலாம்; தோல்வி வந்தடையலாம். அவற்றிற்கெல்லாம் கலங்காத மனவலிமையும் அவர்க்கு வேண்டும். 'தோல்வியே வெற்றிப் பாதையின் முதற்படி' என்ற உண்மையை உணர்ந்து மேலும் மேலும் முயல்வதே வெற்றிக்கு வழி யாகும். திருவள்ளுவர் துன்பம் வந்தபோது சிரிக்கச் சொல்கிறார். ஏன்? அச்சிரிப்பே அத்துன்பத்தை வெல் வதற்கு உதவிபுரியும். தோல்வி கண்டு அஞ்சுபவன் உழைப்பின் பயனை அடையமாட்டான். அஞ்சாமை யோடு அடுத்தடுத்து முயல்பவனே வெற்றி பெறுவான்.

இராபர்ட் ப்ரூஸ் என்ற அரசரின் கதையை மாண

வர்களாகிய நீங்கள் படித்திருப்பீர்கள். அம்மன்னர் ஆறு தடவைகள் பகைவரிடம் தோல்வியுற்ருர். எனினும் அவர் ஒரு சிலந்தியின் விடாமுயற்சியைக் கண்டு தாமும் ஊக்கங்கொண்டு, ஏழாவது தடவையாகப் பகைவருடன் போர் புரிந்து வெற்றி கண்டார். அவர் தம் உழைப்பாலன்ருே இழந்த நாட்டையும் பெற்றுப் புகழடைந்தார்!


தாமஸ் ஆல்வா எடிஸன்

உலகத்திலேயே பெருஞ்செல்வர் என்று போற்றப்பெற்ற **இராக்பெல்லர்** என்ற அமெரிக்க நாட்டுக் கோடீசுவரர் முதலில் ஒருவரிடம் சிறிய பணியாளராக இருந்தவர்; தம் இடைவிடா உழைப்பால் மண்ணெண்ணெயைக் கண்டறிந்து அதன் மூலம் பெருஞ் செல்வம் சேர்த்து உலகப்பெருஞ் செல்வராஞர். **தாமஸ் ஆல்வா எடிஸன்** என்ற பெரிய விஞ்ஞானி இளமையில் பத்திரிகை விற்கும் இளைஞராக வாழ்க்கையைத் தொடங்கித் தம் ஓயா உழைப்பால் நாம்தற்போது அனுபவிக்கும் மின்விளக்கு, படக்காட்சி, கிராமபோன் போன்ற எண்ணற்ற கருவிகளைக் கண்டறிந்து இறவாத பெரும்புகழ் பெற்ருர். எளிய குடும்பத்தில் தோன்றி மரங்களை வெட்டி வாழ்க்கை நடத்தி வந்த **ஆப்ரஹாம் லிங்கன்** அமெரிக்க நாட்டின் ஒப்புயர்வற்ற தலைவராக விளங்கிப் புகழ் பெற்ருர். புதிய புதிய விஞ்ஞானக் கருவிகளைக் கண்


ஆப்ரஹாம் லிங்கன்

டறிந்த விஞ்ஞானிகள் அனைவரும் உழைப்பின் உயர்வை விளக்கும் உத்தமர்களாவர். அவர்கள் பெற்ற வெற்றிக் கெல்லாம் மெய் வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும், கண்ணுறங்காமலும் கருமமே கண்ணாயிருந்து உழைத்த உழைப்பே காரணமாகும் அன்றோ ?

சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி எனப் புகழ்பெற்று விளங்கிய சர் தி. முத்துசாமி ஐயர் இளமையில் கிராமக் கணக்கரிடம் ஒரு ரூபா ஊதியத்தில் வேலை செய்தவர். அவர் தம் பேருழைப்பால் பலர் துணை கொண்டு கல்வி கற்றார்; வீட்டில் படிப்பதற்கு விளக்கும் இல்லாமல் தெருக்களில் எரியும் விளக்குக் கம்பங்களின் கீழிருந்து படித்தார்; அங்ஙனமெல்லாம் கல்வி கற்றுத் தேர்ந்து பல சிறந்த பதவிகளை யெல்லாம் வகித்தார்; முடிவில் அதுவரை எந்த இந்தியரும் வகிக்காத சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாகவும் விளங்கிப் புகழ்பெற்றார். ஒரு ரூபா சம்பாதித்த அவர் திங்கள் ஒன்றுக்கு ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கும் திறமை உற்றார். சென்னை, உயர்நீதி மன்றத்தில் இன்றும் அவருடைய உருவச் சிலையைக் காணலாம். அச்சிலை அவருடைய தகுதி, திறமை, நீதி, நேர்மை ஆகியவைகட்கு மட்டும் அடையாளமன்று; இடைவிடா உழைப்பினால் ஒருவர் அடையக்கூடிய உயர்வை விளக்கும் சின்னமாகவும் அது விளங்குகின்றது.

தற்போது கோயம்புத்தூரில் 'மோட்டார் மன்னர்' என்று புகழ்பெற்று விளங்கும் ஜி. டி. நாயுடு அவர்கள் உழைப்பினாலேயே அவ்வுயர் நிலையை அடைந்தார். எளிய குடும்பத்தில் பிறந்த அவர் ஒரு சமயம் ஆங்கிலேயர் ஒருவர் ஊர்ந்துவந்த மோட்டார் சைகிள் ஒன்றைப் பார்த்து வியப்படைந்தார்; தாமும் அதனை ஓட்ட விரும்பினார். அந்த ஆங்கிலேயர் தக்க விலை தந்தால் அதனை விற்றுவிட இசைந்தார். எளிய குடும்பத்தில் பிறந்த நாயுடு அவர்களிடம் அதனை வாங்கப் பணம் இல்லாமையால் உளம் வருந்தினார். அதற்குரிய பொருளை ஈட்டுவதற்காக அவர் உணவுச்சாலை யொன்றில் எளிய பணி

யாளராக அமர்ந்து உழைத்தார்; உழைப்பால் ஈட்டிய செல்வத்தைக் கொண்டு அந்த மோட்டார் சைகிளை வாங்கி ஓட்டக் கற்றுக் கொண்டதோடன்றி, அதனைப் பிரித்து அதன் இயந்திர அமைப்புக்களை யெல்லாம் ஆராய்ந்து அறிந்து கொண்டார். அங்ஙனம் அவர் பெற்ற அறிவே நாளடைவில் வளர்ச்சியடைந்து அவரை இன்று தென்னிந்தியாவின் தலைசிறந்த விஞ்ஞானிகளில் ஒருவராக உயர்த்தியுள்ளது. அவர் தம் நுண்ணறிவாலும் ஓயா உழைப்பாலும் கண்டறிந்து வெளியிட்டுள்ள—செய்து காட்டியுள்ள—விஞ்ஞான விசித்திரங்கள் மிகப் பலவாகும்.



ஜி. டி. நாயுடு

இங்ஙனம் உழைப்பால் உயர்வடைந்த பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்து நல்லுணர்வு பெறுதல் மாணவர் கடமையாம். இளமைப் பருவம் வாய்ந்த மாணவர்களாகிய உங்கள் மனத்தில் அவ்வெண்ணம் இடம் பெறுமானால் அது தழைத்து வளர்ந்து பயன் தரும் என்பதில் ஐயம் இல்லை. மாணவர்களே! நீங்கள் உங்கள் இளம் பருவத்திலேயே உங்கள் வாழ்வில் கடைப்பிடிக்கக்கூடிய ஒரு குறிக்கோளை வகுத்துக்கொள்ளுங்கள். அதனை அடைய இடைவிடாது பாடுபடுங்கள். குறிக்கோள் இல்லாது உழைக்கும் உழைப்பு இலக்கில்லாது அம்பெய்வது போன்றதாகும். ஆதலால் ‘உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்’ என்பதற்கேற்ப உயர்ந்த எண்ணத்தை எண்ணி அதனைச் செயலில் நிறைவேற்ற ஊக்கங்கொண்டு உழைப்பீர்களாக. அங்ஙனம் உழைத்தால் உங்கள் வாழ்வு வளமடையும். உழைப்பால் உயர்ந்த பெருமக்களைப் போன்று நீங்களும் பேரும் புகழும் பெற்றுப் பெருவாழ்வு வாழலாம்.

## அருஞ்சொல் விளக்கம்

நெப்போலியன் - பிரான்சு நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்டிய பேரரசர்; உப்பக்கம் - பின்பக்கம், முதுகு; உலைவின்றி - சோம்பல் இல்லாமல்; தாழாது - ஓயாமல்; உஞற்றுபவர் - உழைப்பவர்; உள்ளக் கிளர்ச்சி - ஊக்கம்; ஊதியம் - சம்பளம், வருமானம்; திங்கள் - மாதம்; சின்னம் - அடையாளம்; விசித்திரம் - அதிசயம்.

## வினாக்கள்

1. உழைப்பு என்பது யாது? உழைப்பின் சிறப்பைப் பிற நாட்டு அறிஞர் எங்ஙனம் போற்றியுள்ளனர்?

2. உழைப்பின் பெருமையைத் தெய்வப் புலவர் எங்ஙனம் விளக்குகிறார்?

3. உழைப்பு மற்றும் எப்பண்புகளை அடிப்படையாகக் கொண்டது? எங்ஙனம்?

4. உழைப்புக்கும் நுண்ணறிவுக்கும் உள்ள தொடர்பை விளக்குக.

5. 'தோல்வியே வெற்றிப் பாதையின் முதற்படி'—இக்கருத்தை நன்கு விவரிக்க.

6. உழைப்புக்கு உதாரணமாக இராபர்ட் ப்ரூஸ் எங்ஙனம் விளங்கினார்?

7. உழைப்பால் உயர்வடைந்த அயல்நாட்டினர் யாவர்? அவர்கள் எங்ஙனம் உயர்நிலையை அடைந்தனர்?

8. சர் தி. முத்துசாமி ஐயர் எங்ஙனம் மிகவும் உயர்ந்த நிலையை அடைந்தார்?

9. நம் நாட்டில் 'மோட்டார் மன்னர்' என்று போற்றப்படும் பெருமையுடையவர் யார்? அவர் வாழ்க்கையில் எங்ஙனம் உயர்வடைந்தார்?

10. மாணவர்கள் வாழ்வு வளம் பெறுவதற்கு அவர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் யாவை?

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக:—நற்செய்கை, தன்னம்பிக்கை, காலமறிந்து, தனக்குரிமை, மண்ணெண்ணெய், அவ்வெண்ணம், கருத்தான்றி.

II. சேர்த்தெழுதுக:—உ + பக்கம்; உலைவு + இன்றி; தோல்வி + உற்றார்; கண் + உறங்காமல்.

III. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—உள்ளத்தாலும் உடலாலும், ஓயாது, இடைவிடாது, ஏனையவர், குறிக்கோள், விசித்திரம்.

IV. நினைவுபடுத்திக் கொள்க :—வாக்கியங்கள் பொருளை நோக்கி, 1. செய்தி வாக்கியம் 2. வினா வாக்கியம் 3. கட்டளை வாக்கியம் 4. உணர்ச்சி வாக்கியம் என நான்கு வகைப்படும்.

வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகியவற்றின் அமைப்பை நோக்கி அவற்றைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம் :—

1. தனிநிலை வாக்கியம் — ஒரே பயனிலையைக் கொண்டு முடியும் வாக்கியம்.
2. தொடர்நிலை வாக்கியம் — ஓர் எழுவாய் பல பயனிலைகளைக் கொண்டு முடியும் வாக்கியம்.
3. கலவை வாக்கியம் — ஒரு முதல் வாக்கியம், ஒன்றோ பலவோ துணை வாக்கியங்களைக்கொண்டு முடியும்.

## இலக்கணம்

1. தமிழ் மொழியில் சொற்களின் முதலில் எல்லா எழுத்துக்களும் வாரா. சில குறிப்பிட்ட எழுத்துக்களே மொழிக்கு முதலில் வரும்.

அறிஞர், ஆற்றல், இது, ஈகை, உழைப்பு, ஊழ், எவர், ஏது, ஐயம், ஒன்று, ஓலை, ஔவை, கலை, சபை, தந்தை, நகம், படம், மலை, வழி, யவனர், ஞமலி, (அங்)ஙனம்.

இவ்வுதாரணங்களிலிருந்து பன்னிரண்டு உயிரெழுத்துக்களும், க, ச, த, ப எனும் வல்லின வெழுத்துக்கள் நான்கும். ந, ம, ஞ, ங எனும் மெல்லின வெழுத்துக்கள் நான்கும், ய, வ எனும் இடையின எழுத்துக்கள் இரண்டும் ஆகப் பத்து மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரும் என்பதை அறியலாம்.

மொழிக்கு முதலில் வராத மற்றைய எட்டு எழுத்துக்கள் எவை?

2. ‘எ’ என்னும் உயிரெழுத்து நீங்கலாக மற்றைய உயிரெழுத்துக்கள் பதினொன்றும், ஞ, ண, ந, ன, ம என்னும் மெல்லின மெய்களும், இடையின மெய்யெழுத்துக்கள் ஆறும், குற்றியலுகரமும் மொழிக்கு இறுதியில் வரும். ஒவ்வொன்றுக்கும் ஒருதாரணம் தருக.




தலைப்பாகையைக் கழுகு தூக்கிச் செல்லல்

## 2. அற்பம் அற்பமன்று

கதை என்று சொன்னுல் சிறுவர்களுக்கு விருப்பம் அதிகம். சிறுவர்கள் மட்டும் என்ன, பெரியவர்களும் கதை கேட்பதில் விருப்பம் மிக்கவர்களேயாவர். அதனுலேயே நம் முன்னேர்கள் பல அரிய உண்மைகளைக் கதைகள் மூலமாக விளக்கிக் கூறியுள்ளனர். உலகப் புகழ்பெற்ற பல கதைத் தொகுதிகள் பல மொழிகளில் உள்ளன. **அரபிய நாட்டுக் கதைகள்** என வழங்கும் கதைகள் எல்லோரும் விரும்பிப் படிக்கக்கூடிய இனிமையும் அழகும் உடையனவாம். அதனுல் அக்கதைகள் ஆங்கிலம் போன்ற பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அத்தகைய சுவை மிக்க கதைகளில் அரிய உண்மை ஒன்றை விளக்கும் ஒரு கதை இங்கே தரப்பட்டுள்ளது.

**பாக்தாத்** நகரில் **சாத், சாதி** என்னும் இரு நண்பர்கள் இருந்தனர். அவர்களிருவரும் பெருஞ் செல்வர்கள்; அருட்குணம் மிக்கவர்கள். ஒரு நாள் அவர்கள் இருவரும் ஏழை மக்கள் வாழும் நகர்ப்புறமாக உலாவச் சென்றனர். ஆங்கோரிடத்தில் **ஹாசன்** என்னும் ஏழைத் தொழிலாளி தன் குடும்பத்துடன் கயிறு திரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதைக் கண்டனர். அக் குடும்பத்தவரின் வற்றிய உடலும் ஒட்டிய வயிறும் உட்குழிந்த கண்களும் அவர்களுடைய வறுமையை விளக்கின. அவர்களைக் கண்ட சாதி என்னும் செல்வர், “பாவம் இவர்களுக்குச் சிறு தொகை மூலதனமாக இருந்தால் அதைக் கொண்டு தொழில் செய்து இவர்கள் பெரும் பொருளீட்ட முடியும். மூலதனம் இல்லாத குறையே இவர்களுடைய வறுமைக்குக் காரணமாகும்,” என்று வருந்திக் கூறினர். அவ்வுரை கேட்ட அவர் நண்பராகிய சாத் என்னும் செல்வர், “அஃது எப்படி முடியும்? எதற்கும் நல்வினை செய்திருக்க வேண்டாவோ! ஊழ்வினையாலன்றி ஒருவர் செல்வராதல் இயலுமோ!” என்று கூறினர். சாதி அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. “முதற் பொருளில்லாமையே பலர் தொழில் செய்து பொருளீட்ட முடியாமல்

வறியவராயிருப்பதற்குக் காரணம்,'' என்று அவர் உறுதியாய்க் கூறியதுடன், ''நான் அதனைத் தங்கட்கு விளக்கிக் காட்டுகிறேன்,'' என்றார். சாத் அதற்கு இசைந்தார்.

சாதி என்னும் செல்வர் ஏழை ஹாசனை அழைத்து அவனுடன் உரையாடினார். ஹாசன் தம் வறுமையின் கொடுமையை உரைத்து வருந்தினான். மனம் உருகிய சாதி அவனிடம் இருநூறு பொன் கொண்ட ஒரு பண முடிப்பை அளித்து, ''இதனை மூலதனமாகக் கொண்டு சீரிய முறையில் தொழில் புரிந்து வாழ்வாயாக,'' என்று கூறினார். ஹாசன் மிக்க வியப்புக்கொண்டவனாகி அவரை வணங்கி அப்பொருளைப் பெற்றுக்கொண்டான்; அவரை மனமார வாழ்த்தினான். அவர்கள் இருவரும் சென்றபின் ஹாசன் அப்பொருளை என்ன செய்வதென்று சிந்தித்தான்; அவனுக்கு ஒன்றும் தோன்றாமையால் அதிலிருந்து பத்துப் பொன்னை மட்டும் எடுத்துக்கொண்டு எஞ்சிய தொகையைத் தன் தலைப்பாகையில் பத்திரமாக முடிந்து வைத்துக்கொண்டான்.

பின்பு ஹாசன் அப்பத்துப் பொன்னை எடுத்துக் கொண்டு கடை வீதிக்குச் சென்று கயிறு திரிப்பதற்கு வேண்டிய சணலும் வீட்டுக்கு வேண்டிய பொருள்களும் வாங்கினான்; தின்பண்டங்களையே காணாத குழந்தைகட்காகச் சிறிது தின்பண்டங்களையும் வாங்கித் தனது தலைப்பாகைத் துணியில் முடிந்து வைத்துக்கொண்டான். ஹாசன் மகிழ்ச்சியுடன் வீடு திரும்புகையில் வழியில் ஒரு கழுகு தலைப்பாகைத் துணியில் தின்பண்டம் இருப்பதைக் கண்டு விரைந்து வந்து இமைப்பளவில் அத்துணியோடு அதனை தூக்கிக்கொண்டு சென்றுவிட்டது. பாவம்! ஹாசன் திடுக்கிட்டு வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டான். கழுகு தலைப்பாகையைத் தூக்கிச் செல்வதை அறிந்த மக்கள் பலர் கழுகைத் தொடர்ந்தோடிக் கூச்சலிட்டனர்; சிலர் கல்லாலெறிந்தனர். ஒன்றும் பயன்படவில்லை. கழுகு அதைத் தூக்கிக் கொண்டு அருகிலிருந்த மலைப்பக்கமாக நெடுந்தூரம்

பறந்து சென்று விட்டது. ஹாசன் கொண்ட கவலைக்கு அளவே இல்லை. 'கைக் கெட்டியது வாய்க் கெட்ட வில்லையே,' என்று எண்ணி எண்ணி அவன் ஏங்கினான்; உள்ளமும் உடலும் சோர வீடு திரும்பி, முன்போலவே தன் தொழிலைச் செய்து வறுமை நிலையிலேயே வாழ்ந்து வந்தான்.

இங்ஙனம் சில மாதங்கள் சென்றன. ஒரு நாள் தனக்கு உதவி செய்த அப்பிரபுக்கள் இருவரும் அவ்வழி வரக் கண்ட ஹாசன் ஓடிச் சென்று தனக்கு ஏற்பட்ட துன்பத்தைக் கூறி வருந்தித் தன்னை மன்னிக்குமாறு வேண்டிக்கொண்டான். அப்போது சாதிப் பிரபு, "நண்ப! வருந்தாதே. நான் உனக்குப் பொருளீந்தமைக்காகச் சிறிதும் வருந்தவில்லை. உன் நிலையை உயர்த்த என் கடமையைச் செய்தேன்," என்று கூறித் தம் நண்பரைப் பார்த்து, "நான் புரிந்த சோதனையில் தோற்றுவிட்டதாக ஒப்புக்கொள்கின்றேன்; இனி நீர் உம்முடைய கொள்கையை மெய்ப்பியும்," என்று பகர்ந்தார். சாத் பிரபு தம்மிடமிருந்த ஓர் ஈயத்துண்டை ஹாசனிடம் கொடுத்தார். அது கண்டு சாதிப் பிரபு நகைக்கலானார். "என் நண்பர் நகைத்தாலும் என் நம்பிக்கை குன்றாது. இறைவன் திருவருள் இருக்குமானால் இப் பொருளே உன் வாழ்க்கையில் இன்பத்தை உண்டாக்குவதற்குக் காரணமாகலாம்," என்று கூறிக்கொண்டே சாத் பிரபு தம் நண்பரை அழைத்துக் கொண்டு வழி நடந்தார்.

ஈயத்துண்டைப் பெற்ற ஹாசன் அதனை வீட்டு மாடத்தில் போட்டு வைத்தான். அன்றிரவு எதிர் வீட்டிலிருந்து ஹாசனின் நண்பனாகிய ஒரு செம்படவனின் மனைவி அவர்கள் வீட்டுக்கு வந்தாள். அவள் வலையில் கட்டுவதற்கு ஓர் ஈயத்துண்டு வேண்டும் என்று ஹாசனின் மனைவியிடம் கேட்டாள். ஹாசன் மாடத்திலிருந்த ஈயத் துண்டை அவளிடம் கொடுக்கச் செய்தான். அதைப் பெற்றுக்கொண்ட அவள் நன்றி கூறி, அடுத்த நாள்

காலையில் வலையில் முதலில் பிடிக்கும் மீனை அவர்களுக்குப் பரிசாக அளிப்பதாகக் கூறிச் சென்றாள்.

அற்பமேயானாலும் அவ்வீயத் துண்டு அச் செம்படவனுக்குப் பேருதவியாக இருந்தது. மறுநாள் அதிகாலையில் அவன் முதலில் வலை வீசியபோது மூன்றடி நீளமுள்ள ஒரு பெரிய மீன் அவனுக்குக் கிடைத்தது. மாலை நேரம் வரையில் அவன் அளவற்ற மீன்களைப் பிடித்துப் படகில் ஏற்றிக்கொண்டு வீடு திரும்பினான். வீடு திரும்பியதும் நன்றி மறவாத அவ் வலைஞன் தான் அளித்த வாக்குப்படி முதலில் அகப்பட்ட பெரிய மீனை எடுத்துக் கொண்டு சென்று அதனை ஹாசனிடம் மகிழ்ச்சியுடன் கொடுத்தான். "நான் செய்த அற்ப உதவிக்காக இப் பெரிய மீனைப் பெற்றுக்கொள்ள மாட்டேன்," என்று ஹாசன் மறுத்தான். வலைஞன், "இதைப் பெற்றுக் கொண்டாலன்றி என் மனம் மகிழாது," என்று வற்புறுத்தவே ஹாசன் அதனைப் பெற்றுக்கொண்டான். வலைஞனும் மகிழ்ச்சியோடு தன் வீடு சென்றான்.

ஹாசனின் மனைவி அவ்வளவு பெரிய மீனை அதுவரை கண்டதே இல்லை. அதனை அவள் ஆவலுடன் துண்டு துண்டாக நறுக்கினாள். அப்போது அம் மீனின் உடலில் கண்ணாடிபோல் பளபளப்பான கல்லொன்று இருக்கக் கண்டாள். அருகில் இருந்த சிறுவர்கள் அதனைக் கண்டு வியந்தார்கள். ஒருவன் அதனை எடுத்துக்கொண்டு விளையாடுவதற்காகத் தெருப்பக்கம் ஓடினான். மற்றொருவன் அதைப் பிடுங்க முயன்றான். இதனால் அவர்களுக்குள் சண்டை மூண்டது. அச்சண்டை இரவு முழுதும் ஓயவில்லை.

மறு நாட் காலையில் பக்கத்து வீட்டிலிருந்த ஒரு நகை வணிகனின் மனைவி ஹாசன் வீட்டிற்கு வந்து அவன் மனைவியை நோக்கி, இரவு முழுதும் சிறுவர்கள் கூச்சலிட்டதால் தங்களுக்கு உறக்கம் கெட்டு விட்டது என்று கூறி வருந்தினாள். ஹாசனுடைய மனைவி மீன் வயிற்றிலிருந்த அக் கல்லை அவளிடம் காட்டி, "ஒன்றுமில்லையம்மா! இந்த அற்பக் கண்ணாடித் துண்டுக்காகவே

என் மக்கள் மண்டையை உடைத்துக் கொண்டனர்,'' என்றாள். அக் கல்லைக் கண்ட வணிகன் மனைவி அது சாதாரணக் கல்லன்றெனவும், விலை உயர்ந்த வைரக்கல் எனவும் உடனே அறிந்து கொண்டாள். அவள் தன் கணவனிடம் சென்று அச் செய்தியைக் கூறினாள். அவன் எப்படியாவது அக்கல்லை விலைக்கு வாங்குமாறு கூறினான். அவள் திரும்பி வந்து இருபது பொன் தருவதாகவும் அக் கல்லை விலைக்கு விற்று விடுமாறும் கேட்டாள். ஈயத் துண்டு தன் அதிர்ஷ்டத்துக்குக் காரணமாகலாம் என்று சாத் பிரபு கூறியது ஹாசனின் நினைவுக்கு வந்தது. வணி கனின் மனைவி இருபது பொன் தருவதாகக் கூறியதால் அது சாதாரணக் கல் அன்று என்பதனை ஹாசன் அறிந்து கொண்டான். ஆகையால் அவன் அவ்விலைக்குத் தர இயலாது என்று கூறி அவளை அனுப்பிவிட்டான்.

அன்றிரவு அவ்வணிகனே ஹாசனின் வீட்டிற்கு வந்து அக் கல்லைக் காட்டுமாறு கேட்டான்; ஹாசன் அக் கல்லைக் காட்டிய உடன் அது மிக்க விலையுயர்ந்த வைரம் என்பதனை உணர்ந்து அதற்கு இருபத்தையாயிரம் பொன் தருவதாகவும் எவரும் அறியாமல் தனக்கு விற்றுவிடு மாறும் கூறினான். ஹாசன் மிக்க வியப்படைந்தான். இருபது பொன் எங்கே? இருபத்தையாயிரம் எங்கே! அதனால் அக் கல் மேலும் விலை மதிப்புடையதாயிருக் கலாம் என்றுணர்ந்த ஹாசன் நூறாயிரம் பொன் தந்தா லன்றி அதனைத் தர இயலாது என்று கூறி விட்டான். இறுதியில் வணிகன் அதற்கு இயைந்து மறுநாளே முழுத் தொகையும் கொடுத்து வைரத்தை வாங்கிக் கொண்டான். ஹாசன் அற்ப ஈயத் துண்டினால் ஒரே நாளில் கோடீசு வரன் ஆகிவிட்டான்; இறைவனுடைய பெருங்கருணையை எண்ணி வியந்தான்; ஈயத்துண்டை வழங்கிய சாத் பிரபுவை நினைத்து நன்றி செலுத்தினான்; அவர்கள் வாழு மிடம் தெரியாமையால் நேரே சென்று அவர்களுக்கு அச் செய்தியை அறிவிக்க இயலவில்லை.

ஹாசன் மிக்க நேர்மையுடன் நடந்து கொண்டதால் நாளுக்கு நாள் அவன் புரிந்த கயிற்று வாணிகம் வளர்

பிறைபோல் வளரலாயிற்று. தொழிற்சாலைகள் பல நிறுவப்பட்டன. நூற்றுக் கணக்கான தொழிலாளர் அவனிடம் பணிபுரியலாயினர். ஹாசன் அவர்கள் அனைவரையும் அன்புடன் போற்றிக் காத்துவந்தான். பழைய குடிசைக்குப் பதிலாகப் புதிய மாளிகை தோன்றியது. ஊரார் பலரும் அவனைப் பாராட்டினர். ஹாசன் இங்ஙனம் பெருஞ் சிறப்புடன் வாழ்ந்து வந்தான்.

ஹாசனுக்கு உதவி செய்த நண்பர்கள் இருவரும் பல மாதங்கள் கழித்து ஹாசனுடைய நினைவு வரப்பெற்றவராய் அவனுடைய நிலையை அறிந்து கொள்ள அவன் இருப்பிடம் வந்தனர்; ஹாசன் வாழ்ந்த பழைய குடிசையில் வேறு எவரோ குடியிருக்கக் கண்டனர்; அவர்கள் மூலமாக ஹாசன் அடைந்த உயர்வை உணர்ந்து அவன் மாளிகையை நாடிச் சென்றனர். அவர்கள் வரவுணர்ந்த ஹாசன் ஓடோடிச் சென்று அவர்களை எதிர்கொண்டழைத்து உபசரித்தான். நண்பர்கள் இருவரும் ஹாசனுடைய செல்வ நிலையை நேரிற் கண்டு பெரு வியப்பெய்தினர். ஹாசன் அவ்விருவரையும் அன்றிரவு அங்கேயே தங்கியிருக்குமாறு வேண்டி நல்விருந்து நல்கினான். விருந்து முடிந்த பின் ஹாசன் அற்ப ஈயத்துண்டால் தான் பெருஞ் செல்வனான வரலாற்றைக் கூறினான். அது கேட்ட சாத் பிரபு தாம் கூறியது உண்மையானது அறிந்து உவகைக் கடலில் ஆழ்ந்தார். ஆனால் சாதிப் பிரபு ஹாசன் கூறியதை நம்பவில்லை. அவன் பொய் கூறுவதாகவும், தாம் கொடுத்த பொருளைக்கொண்டே அவன் செல்வனாகி யிருக்க முடியும் என்றும் அவர் எண்ணினார்.

மறுநாட் காலையில் ஹாசன் அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு தன் கிராமத்தில் தான் புதிதாக வாங்கிய அழகிய மாளிகைக்குச் சென்றான். அங்குச் சென்றபோது வெயில் கடுமையாக இருந்தது. எனவே ஹாசன் தன் பணியாளர்களை நோக்கிப் புதிய இனிய இளநீர்களைப் பறித்துக் கொணருமாறு பணித்தான். தென்னை மரத்தில் ஏறிய பணியாளன் மரத்தில் கழுகுக் கூடு ஒன்று இருக்கக்

கண்டான். அக்கூட்டில் தலைப்பாகைத் துணியொன்று இருப்பதை அறிந்து, "சுவாமி! இங்குக் கழுகுக் கூட்டில் தலைப்பாகைத் துணி ஒன்று இருக்கின்றது," என்று கூச்சலிட்டான். அது கேட்டு வியப்படைந்த ஹாசன் அக் கூட்டைப் பத்திரமாகக் கீழே கொணருமாறு கூறினன். பணியாளன் அங்ஙனமே அக்கூட்டைக் கொண்டு வந்து அவர்கள் முன் வைத்தான். கூட்டில் தலைப்பாகைத் துணி, பின்னிக்கொண்டு கிடந்தது. அதில் கழுகின் குஞ்சுகள் சில இருந்தன. ஹாசன் அத்தலைப்பாகைத் துணி முன்பு கழுகு தூக்கிச் சென்ற தன்னுடைய துணியே என்றறிந்து மெதுவாக அதனை எடுத்தான். என்ன வியப்பு! அதில் அவன் முடிந்துவைத்த பொன் முடிப்பு அப்படியே இருந்தது. ஹாசன் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டவனகி, "ஐயன்மீர்! இதோ தாங்கள் முதலில் எனக்களித்த பொன் முடிப்பு! முன்பு கூறியபோது ஐயம் கொண்டீர்களல்லவா?" என்று கூறி அதனை அவிழ்த்தான். அதில் ஹாசன் முடித்துவைத்த நூற்றுத்தொண்ணூறு பொற்காசுகளும் குறையாமல் இருக்கக் கண்டு பிரபுக்கள் இருவரும் பெரு வியப்படைந்தனர். சாதிப் பிரபு ஐயம் நீங்கப் பெற்று ஹாசனைப் பற்றித் தவருகத் தாம் கொண்ட கருத்துக்காக வருந்தினர்.

நண்பர்கள் இருவரும் ஹாசனின் அருங்குணத்தை ஐயமற உணர்ந்து அவனையும் அவனுக்கு வந்த அதிருஷ்டத்தையும் பெரிதும் பாராட்டினர். சாதிப் பிரபு தம் நண்பரைப் பார்த்து, "நீரே வெற்றி பெற்றீர்; செல்வம் ஒருவரைப் பணக்காரர் ஆக்குவதற்குக் காரணமாகாது; நல்வினை இருக்குமானல் ஓர் அற்பப் பொருளும் ஒருவரைப் பெருஞ் செல்வராக்குதல் கூடும் என்ற உண்மையை நான் உணர்ந்து கொண்டேன்", என்று கூறினர்.

ஹாசன் அவர்கள் இருவரையும் நோக்கி, "அன்பர்களே! இப்பொருளை இறைவன் இச்சமயத்தில் எனக்குத் திருப்பி யளித்தது என்னை வாய்மையாளன் என்று விளக்குவதற்கே என்று கருதுகின்றேன். இத்தொகையை,

என்னிடமிருந்து திரும்பப் பெறும்பொருட்டுத் தாங்கள் எனக்கு அளிக்க வில்லையாயினும் இப்பொருள் தங்களுடையதேயாம். தாங்கள் இத்தொகையைப் பெற்றுக் கொள்ள விரும்பாவிட்டால் இதனை ஏழை எளியவர்கட்குப் பகிர்ந்தளிக்க எனக்கு அனுமதி தரவேண்டுகின்றேன்," என்று பணிவுடன் கூறினன். அது கேட்ட சாதிப் பிரபு அதற்கு மனமுவந்து இசைந்தார். உண்மையும் எளியவர்பால் அன்பும் கொண்ட ஹாசனின் அருங்குணத்தைப் பாராட்டி அவன் விரும்பியவாறே இருவரும் மேலும் சில நாட்கள் அங்கிருந்து பின்னர் விடைபெற்றுத் தம்மிருப்பிடம் சென்றனர்.

செல்வத்தின் பயன் ஈதல் என்பதனை நன்குணர்ந்த ஹாசன் தான் பெற்ற செல்வத்தை வறியவர்கட்கு வழங்கிப்பலரும் போற்றுமாறு சிறப்புடன் வாழ்ந்து வந்தான்.

## அருஞ்சொல் விளக்கம்

பாக்தாத் - ஆசியாவில் இராக் நாட்டில் டைக்ரிஸ் ஆற்றங்கரையிலுள்ள மிகப் பழமையான நகரம்; அவல நிலை - துன்ப நிலை; மூலதனம்- தொழில் செய்வதற்கு ஒதுக்கி வைக்கப்படும் முதற் பொருள்; இயைந்தார்- சம்மதித்தார்; உரையாடுதல் - பேசுதல்; சிந்தித்தான் - எண்ணினன்; எஞ்சிய - மீதியான; இமைப்பளவில் - கண்ணிமைக்கும் நேரத்தில்; ஈந்தமை - கொடுத்தமை; பகர்ந்தார் - கூறினர்; மூண்டது - வளர்ந்தது; நாடி - தேடி; எய்துதல் - அடைதல்; நல்குதல் - அளித்தல்; உவகை - மகிழ்ச்சி; பணித்தான் - உத்தரவிட்டான்; பணியாளர் - ஏவலாளர்.

## வினாக்கள்

1. ஒருவர் செல்வராவதைப் பற்றி, சாத், சாதி என்னும் நண்பர்கள் கொண்டிருந்த கொள்கைகள் யாவை?

2. சாதிப் பிரபு தனக்கு அளித்த இருநூறு பொன்னையும் ஹாசன் எங்ஙனம் இழந்தான்?

3. ஹாசன் கோடீசுவரன் ஆன வரலாற்றைச் சுருக்கமாக எழுதுக.

4. ஹாசன் வாய்மை தவறாதவன் என்பதை நண்பர்கள் எப்போது எவ்வாறு அறிந்துகொண்டனர்?

5. ஹாசன் எளியவர்களிடத்தில் பேரிரக்கம் படைத்தவன் என்பதற்கு ஒருதாரணம் தருக.

6. 'அற்பம் அற்பமன்று' என்னும் தலைப்பு இப்பாடத்திற்கு எங்ஙனம் பொருந்தும்?

7. 'என் நண்பர் நகைத்தாலும் என் நம்பிக்கை குன்ருது'—சந்தர்ப்பம் கூறி விளக்குக.

## மொழிப் பயிற்சி

I. **பிரித்து எழுதுக :**—பொற்காசு, மனமுவந்து, நூருயிரம், வியப்பெய்தினர், அருட்குணம், பொருளீட்ட.

II. **சேர்த்தெழுதுக :**—அதற்கு + இணங்க; இரண்டு + நூறு; அ + உரை; நன்கு + உணர்ந்த; மெய் + ஆயிற்று.

III. **சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :**—வயிற்றிலும் வாயிலும், உள்ளமும் உடலும் சோர, பரிந்து.

IV. 'கைக் கெட்டியது வாய்க் கெட்டவில்லை' என்பது பண்டைக் காலம் முதல் நம் நாட்டில் வழங்கும் பழமொழியாம். இது போன்ற பழமொழிகளைத் திரட்டிக் குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்துக் கொள்க.

V. தான் செல்வனுன வரலாற்றை ஹாசன் கூறுவதுபோல் ஒரு கட்டுரை எழுதிப் பழகுக.

## இலக்கணம்

**ஐந்து - அஞ்சு; நீந்தினுன் - நீஞ்சினுன்; மனம் - மனன்** இச்சொற்களில் ஓர் எழுத்துக்குப் பதிலாக வேருேர் எழுத்து வந்து பொருள் மாறுபடாமல் இருப்பதைக் கவனியுங்கள். இங்ஙனம் புதிதாக வந்த எழுத்துக்குப் **போலி** எழுத்து என்பது பெயர். (போலி - போன்ற எழுத்து).

புதிய எழுத்துக்கள் சொல்லுக்கு முதலிலும் இடையிலும் கடைசியிலும் வருவதுண்டு. **முதற்போலி, இடைப் போலி, கடைப் போலி** எனப் போலி மூன்று வகைப்படும்.

(உ - ம்.) முதற் போலி : மயல்-மையல்-அகரத்துக்கு ஐகாரம் வந்தது.
இடைப் போலி : அரயன்—அரையன் ,, ,,
கடைப் போலி : வளம்—வளன் —மகரத்துக்கு னகரம் ,,
பந்தல்—பந்தர் —லகரத்துக்கு ரகரம் ,,
வண்டு—வண்டர்— { குற்றிய லுகரத்துக்கு அர் வந்தது

போலி வகைகளுக்கு வேறு சில உதாரணங்கள் சிந்தித்து எழுதுக.



## 3. அரசியல் அறிஞர் சண்முகனர்

அறிவு, ஆற்றல், ஒழுக்கம் முதலிய உயர்ந்த பண்புகளும், நினைத்ததை நினைத்தவாறே செய்து முடிக்கும் திறமையும், பெருஞ் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர்கள் மிகச் சிலரேயாவர். நம் இந்திய நாட்டில் பொருளாதாரத் துறையில் தலைசிறந்த பேரறிஞராய் விளங்கிய டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அத்தகைய பெரியார்களில் ஒருவர். அவர் தமிழன்னையின் தலைசிறந்த மகனுகத் திகழ்ந்தார். இந்தியாவின் பெருமையையும், தமிழரின் அறிவுத் திறமையையும் உலகெல்லாம் பரப்பிய சிறந்த தலைவர்களில் சண்முகம் செட்டியார் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் ஆவர்.

சண்முகம் செட்டியார் கம்பீரமான தோற்றமுடையவர். அவர் கண்கள் அறிவொளி வீசும். அமைதியும் பெருந் தன்மையும் அவர் முகத்தில் பொலிந்து விளங்கும். செட்டியார் சற்றுக் கருமை நிறமுடையவராயினும் மிக்க அழகான உருவமுடையவர்; அன்பும் அருளும் கொண்டவர்; பகைவரையும் வயப்படுத்தும் சொல் வன்மையுடையவர்; ஆங்கிலத்தில் ஆங்கிலேயரும் வியந்து போற்றுமாறு பேசும் திறம் படைத்தவர். இவை எல்லாவற்றிற்கும் மேலாக அவர் தலைசிறந்த தமிழ்ப் பற்றுடையவராகவும், தமிழ்ப் புலவர்களிடம் பேரன்பு கொண்டவராகவும் விளங்கினர்.

இவ்வளவு உயர்குணங்களுக்கு உறைவிடமாக விளங்கிய நம் சண்முகம் செட்டியார் அவர்கள் கோவையிலே பெரு வணிகராகத் திகழ்ந்த **கந்தசாமிச் செட்டியார்** அவர்களுடைய மூத்த திருமகனுக 17—10—1892 அன்று பிறந்தார்; இளமையில் கோவையிலேயே கல்வி கற்ருர். அவர் உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயிலும்போதே அவருடைய அருமைத் தந்தையார் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவருடைய பாட்டனராகிய **இராமசாமிச் செட்டியார்** என்பவரே அவரைக் கண்ணும் கருத்துமாகப் போற்றி வளர்த்து வந்தார். உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடிந்ததும் அவர் 1910-ஆம் ஆண்டில் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் சேர்ந்து B.A. பட்டம் பெற்ருர்; அதன் பின்னர் வழக்கறிஞர் தேர்வுக்குப் பயின்று வெற்றி பெற்று வழக்கறிஞரானர்.

நம் சண்முகனர் மாணவராக இருக்கும் போதே தம் எதிர்கால நல் வாழ்வுக்கேற்ற உயர் குணங்களை எல்லாம் நன்ருக வளர்த்துக் கொண்டார்; தம்முடைய அறிவாற்றல்களாலும் பேச்சுத் திறமையாலும் வகுப்பில் முதல் மாணவராக விளங்கி, ஆசிரியர் முதல் அனைவருடைய உள்ளங்களையும் கவர்ந்தார். கல்வியில் மட்டுமன்றி விளையாட்டு முதலிய ஏனைய துறைகளிலும் அவர் சிறந்து விளங்கினர். அவர் கல்லூரியில் பயின்றபோது சென்னையில் கிறித்தவ இளைஞர் சங்கத்தில் கல்லூரி

மாணவர்களுக்கிடையே ஒரு சொற் பொழிவுப் போட்டி நடைபெற்றது. அப் போட்டியில் நம் சண்முகம் அவர்களே முதற் பரிசைப் பெற்ருர். அதனுல் அவர் புகழ் பரவியது. அறிஞர்கள் நம் சண்முகம் செட்டியார் அவர்கள் எதிர் காலத்தில் ஆற்றல் மிக்க தலைவராக விளங்குவார் என்று போற்றினுர்கள்.

முதன் முதலில் கோவையில் வழக்கறிஞராக வாழ்க்கையைத் துவக்கினுர் நம் சண்முகம் செட்டியார். ஆனுல் அவ்வாழ்வு அவருக்கு இனிக்கவில்லை. விறு விறுப்பான அரசியல் வாழ்வையே அவர் விரும்பினுர். அவருடைய விருப்பமும் உடனே நிறைவேறும் வாய்ப்பு ஏற்பட்டது. 1920-ஆம் ஆண்டில் நடந்த சென்னைச் சட்ட சபைத் தேர்தலில் போட்டியிட்டு நம் சண்முகனுர் வெற்றி பெற்ருர். அப்போது அவருக்கு வயது இருபத்தெட்டே யாகும். அதுவரை அத்தகைய இளைஞர் ஒருவர் சட்ட சபை உறுப்பினராக இருந்ததே இல்லை. அவர் சட்டசபை உறுப்பினராக இருக்கும்போதே கோவை **நகராண்மைக் கழகத் துணைத் தலைவராகவும்** இருந்து தம் நகரத்துக்குச் சிறந்த பணியாற்றினுர். அவருடைய திறமையை அறிந்து அப்போது முதல் மந்திரியாக விளங்கிய **பனகல் அரசர்** அவரைத் தம் செயலாளராகக் கொண்டார். அப் பதவியை வகித்தமையால் நம் செட்டியார் அவர்கள் அரசியல் துறையில் நல்ல அநுபவம் பெற்ருர்.

1923-ஆம் ஆண்டில் நடைபெற்ற மத்திய அரசாங்கச் சட்டசபைத் தேர்தலில் நம் சண்முகனுர் வெற்றிபெற்ருர். இந்தியச் சட்டசபையில் நம் செட்டியார் பேசிய முதற் பேச்சே அனைவரையும் கவர்ந்து விட்டது. அப்போது சுயராஜ்யக் கட்சியின் தலைவராக இருந்த **பண்டித மோதிலால் நேஹ்ரு** அவர்கள் சண்முகம் செட்டியாரின் சொல் வன்மையையும் அறிவாற்றலையும் உணர்ந்து அவரைத் தம் கட்சியின் முக்கிய உறுப்பினராகச் செய்து கொண்டார். அக்கட்சியின் உறுப்பினராக இருந்து கொண்டு நம் செட்டியார் இந்தியச் சட்டசபையில் பேசிய பேச்சுக்களும், விவாதங்களும் அரசாங்கத்தாரைக் கலக்

கின. அப்போது நிதி மந்திரியாக இருந்த வெள்ளையர் ஒருவர் சண்முகனார் பேச எழுந்தாலே, என்ன கூறுவரோ என்று அஞ்சுவாராம். அத்தகைய பேராற்றல் வாய்ந்த சொல்லின் செல்வராக விளங்கினார் நம் அருமைத் தலைவர் சண்முகனார்.

இக்காலத்தில் நம் சண்முகம் செட்டியாருக்கு வெளி நாடுகளுக்குச் சென்று தம் புகழை நிலை நாட்டும் வாய்ப்பு கிடைத்தது. அவர் இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, போன்ற அயல் நாடுகளுக்குச் சென்று பல அரசியல் மாநாடுகளில் கலந்து கொண்டார். அவ்விடங்களில் அவர் தம் சிறந்த சொற் பொழிவுகளால் நம் நாட்டின் புகழைப் பலவகையில் உயர்த்தினார்.

1933-ஆம் ஆண்டில் சண்முகனார் ஒட்டாவாவில் நடந்த 'வாணிக ஒப்பந்த மாநாட்டில்' இந்தியப் பிரதி நிதியாகக் கலந்து கொண்டு இந்தியாவுக்குப் 'பயனளிக் கும் வகையில் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். ஜெனீ வாவில் நடந்த தொழிலாளர் மகாநாட்டிலும் அவர் புரிந்த தொண்டுகள் எண்ணற்றவை.

அறிஞர் சண்முகஞ் செட்டியார் வாழ்க்கையில் குறிப் பிடத்தக்க சிறப்பு வாய்ந்த காலம் அவர் மத்திய சட்ட சபையின் தலைவராக விளங்கிய காலமாகும். அப்போது அவருக்கு வயது நாற்பதேயாம். அவ்விளம் வயதில் எவரும் அப்பதவியை ஏற்றதில்லை. அவருடைய பொரு ளாதார அறிவும், சட்ட சபையை நடத்துவதில் அவர் பெற்றிருந்த திறமையுமே அவரை எல்லாக் கட்சியினரும் போற்றுவதற்குக் காரணமாயிருந்தன. தலைவராக இருந்து அவர் ஆற்றிய பணிகளும் அளித்த தீர்ப்புக்களும் இன்றும் உதாரணங்களாகத் திகழ்கின்றன. சண்முகனாரால் அப் பதவியே உயர்வு பெற்றது என்னலாம். அவருடைய அருஞ் செயல்களைப் பாராட்டிய அரசியலார் அவருக்கு 'நைட்' (K. C. I. E.) என்னும் பட்டத்தை வழங்கினர்.

1934-ஆம் ஆண்டில் நடைபெற்ற மத்திய சட்ட சபைத் தேர்தலில் நம் சண்முகம் செட்டியார் தோல்வி

யடைய நேரிட்டது. அதனல் அவருடைய தொண்டுகளை இந்தியா இழந்து விட்டது. ஆயினும் கொச்சி சமஸ்தானம் அவரால் நன்மை பெற்றது. 1935-ஆம் ஆண்டு முதல் 1941-ஆம் ஆண்டுவரை அவர் கொச்சி சமஸ்தான திவாஞக இருந்து அந்நாட்டிற்கும் மக்களுக்கும் அருந் தொண்டாற்றினர். அவர் பணிகளைப் பாராட்டி அவரிடம் பேரன்பு கொண்ட கொச்சி அரசர், அவருக்கு ‘மகாவீரர்’ என்ற சிறந்த பட்டப் பெயரை வழங்கிச் சிறப்பித்தனர்.

நம் சண்முகம் செட்டியார் சுதந்திர இந்தியாவின் முதல் நிதி மந்திரியாக விளங்கும் பேறு பெற்றவராவர். அவர் ஓராண்டு வரை நிதிமந்திரியாக அமர்ந்து இந்தியாவிற்குப் பல சிறந்த சேவைகளைச் செய்து, பின்னர் விலகிக் கொண்டார். அறிஞர் சண்முகம் செட்டியார் நிதிமந்திரியாயிருந்த போது அந்நிய நாட்டு அரசாங்கத்தார் வழங்கிய பட்டத்தைத் துறந்தார். நெடு நாட்களாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியாவிற்குத் தரவேண்டிய பெருங்கடன் தொகையை அவர்கள் கொடுக்க மறுத்து வந்தனர். நம் செட்டியார் அவர்கள் இங்கிலாந்து சென்று தக்க முறையில் வாதித்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அக் கடனை இந்தியாவுக்குத் திருப்பித் தரவேண்டும் என்று முடிவு செய்து வந்தார். இதனல் சுதந்திர இந்தியா பெற்ற நன்மை அளவற்றதாகும்.

நம் சண்முகம் செட்டியார் அவர்கள் அரசியல் வாழ்வைத் துறந்தவுடன் தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் தொண்டு செய்யும் அரிய பணியில் ஈடுபட்டார். தமிழின் இனிமை அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. எனவே தக்க துணைவர்களுடன் சங்க இலக்கியம் முதல் எல்லா நூல்களையும் இனிது கற்ருர். இளங்கோவடிகள் இயற்றிய நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் அவர் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. அவர் அந்நூலின் ஒரு பிரிவாகிய புகார்க் காண்டத்திற்கு எளிய இனிய நடையில் தாமே உரை எழுதி அழகிய நூலாக வெளியிட்டார். மற்றும் பல கட்டுரைகளும் உரைநடை நூல்களும் அவர் எழுதினர்.

ஆங்கிலத்தில் பேசுவது போலவே தமிழிலும் சிறந்த முறையில் பேசும் பெரும் நாவலராக அவர் விளங்கினர்.

அவர் தமிழுக்குச் செய்த சிறந்த சேவைகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது **தமிழிசை** வளர்ச்சிக்குச் செய்த பெருந் தொண்டேயாகும். **இராஜா சர் அண்ணுமலைச் செட்டியாருடன்** கலந்து கொண்டு அவர் தமிழிசை இயக்கத்தைத் தொடங்கினர். தமிழ் நாட்டில் தமிழிலேயே இசை பாடவேண்டும் என்பதே அவர்கள் கொள்கை. அக் கொள்கையைப் பரப்பத் '**தமிழிசைச் சங்கம்**' என்னும் ஒரு சங்கத்தை இருவரும் தோற்றுவித்துத் தொண்டாற்றி வந்தனர். சென்னையில் உள்ள தமிழிசை வளர்க்கும் **அண்ணுமலை மன்றம்**, அண்ணுமலைச் செட்டியார், சண்முகம் செட்டியார் ஆகிய இருவரும் தமிழிசை வளர்ச்சிக்குச் செய்த அருந் தொண்டின் நினைவுச் சின்னமாக விளங்குகின்றது.

நம் சண்முகம் செட்டியார் அவர்கள் 1951-ஆம் ஆண்டில் **அண்ணுமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராகப்** பதவி ஏற்ருர். தமிழ் நாடே அவரை வாழ்த்தியது. அப்பதவி வகிப்பதன் மூலம் அவர் தமிழ் மொழிக்கு எண்ணற்ற சேவைகளைச் செய்வார் என்று அனைவரும் எதிர் பார்த்தனர். அவரும் அதற்கான திட்டங்கள் பலவற்றை வகுத்தார். எதிர்பாராதவாறு அவர் உடல் நலக் குறைவால் அப் பதவியிலிருந்து ஓய்வு பெற நேர்ந்தது. அவர் ஓய்வு பெற்றுக் கோவையில் விளங்கும், புகழ் பெற்ற 'ஹவார்டன்' என்ற தம் மாளிகையில் வாழ்ந்து வந்தார். 17–10–1952-இல் அவருடைய அறுபதாவது ஆண்டு **மணி விழா** மிகச் சிறந்த முறையில் கொண்டாடப்பட்டது.

இங்ஙனம் எல்லாத் துறையிலும் பேரும் புகழும் பெற்றுப் பெருஞ் செல்வராக விளங்கிய நம் தலைவர் சண்முகனர் அவர்கள் 5-5-1953-இல் தமிழ் மக்கள் வருந்துமாறு இவ்வுலக வாழ்வை நீத்தார். தமிழர் தம் தலைவரை இழந்தனர்; இந்திய நாடு ஒப்பற்ற அரசியல் ஞானியை- பொருளாதாரப் பேரறிஞரை இழந்தது. இவர் பிரிவு

தமிழ் நாட்டிற்கும் இந்தியாவுக்கும் மட்டும் இழப்பன்று; உலகிற்கே ஈடு செய்ய முடியாத இழப்பு என்று கூறலாம்.

உயர் திரு டாக்டர் சண்முகம் செட்டியார் அவர்கள் வாழ்வு நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் எதிர்கால இளைஞர் கட்குத் தக்க வழி காட்டுவதாகும். செட்டியாரவர்கள் பெருஞ் செல்வரேயாயினும் ஆடம்பரமற்ற எளிய நிலையிலேயே வாழ்ந்து வந்தார். அவர் மிக உயர்ந்த பதவிகள் வகித்த போதும் அவரை யாவரும் சென்று எளிதாகக் கண்டு பழகலாம். மற்றும் அவர் எதனையும் ஆராய்ந்தே சொல்வார்; சொன்னதை எங்ஙனமேனும் நிறைவேற்றியே முடிப்பார். சொல்வன்மை, தமிழ்ப்பற்று, நாட்டுப் பற்று என்ற உயர் குணங்களுக்கு உறைவிடமாக விளங்கியவர் நம் பெரியார்.

நம் அறிஞர் சண்முகனரிடம் கண்ட இந்த உயர்ந்த பண்புகளையெல்லாம் இளைஞர்கள் கடைப்பிடித்து அவரைப்போலப் பேரும் புகழும் பெற்று வாழ முயல்வதே அவருக்குச் செய்யும் கைம்மாருகும்.

## அருஞ்சொல் விளக்கம்

தலைசிறந்த - மிகச் சிறந்த; பொருளாதாரத் துறை - நாட்டின் வரவு செலவுகளைப் பற்றி ஆராயும் துறை; பொலிந்து - அழகுடன் விளங்கி; வயப்படுத்தல் - கவர்தல்; கோவை - கோயம்புத்தூர்; வழக்கறிஞர் - வக்கீல்; கல்லூரி - காலேஜ்; உறுப்பினர் - அங்கத்தினர்; நகராண்மைக் கழகம் - முனிசிபாலிடி; கலக்கின - அச்சம் கொள்ளுமாறு செய்தன; வெள்ளையர் - ஆங்கிலேயர்; வழங்கினர் - அளித்தனர்.

## வினாக்கள்

1. ரா. க. சண்முகஞ் செட்டியாரின் சிறப்பியல்பு யாது?
2. செட்டியாரவர்களின் பிறப்பையும் கல்வியையும் பற்றி எழுதுக.
3. சண்முகனர் மாணவராக இருக்கையில் அவரிடம் காணப்பட்ட சிறந்த பண்புகள் யாவை?
4. மத்திய அரசாங்கத்தில் சண்முகனர் எக்கட்சியில் சேர்ந்து எங்ஙனம் பணியாற்றினர்?

5. செட்டியாரவர்கள் இந்திய நாட்டின் பெருமையை எங்ஙனம் உலகமெங்கும் பரவச் செய்தார்?

6. அவர் ஒட்டாவாவுக்குச் சென்றது ஏன்?

7. சண்முகனரின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க காலம் எது? ஏன்?

8. 'மகாவீரர்' என்ற பட்டம் செட்டியாருக்கு யாரால் எக்காரணம் பற்றி வழங்கப்பட்டது?

9. நிதி மந்திரியாக இருந்தபோது சண்முகம் செட்டியார் நம் நாட்டுக்குப் புரிந்த அரும்பணி யாது?

10. செட்டியாரவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு யாது?

11. தமிழிசையை வளர்ப்பதற்குச் சண்முகனர் செய்த முயற்சி எவ்வாறு வெற்றி பெற்றுள்ளது?

12. சண்முகனரின் அருங் குணங்களில் மூன்றினைக் குறிப்பிடுக.

## மொழிப் பயிற்சி

**I. பிரித்து எழுதுக:**—பேரறிஞர், அறிவொளி, அறிவாற்றல்கள், முதற் பரிசு, ஏற்றதில்லை, ஓராண்டு, அருந்தொண்டு.

**II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:**—ஒருங்கே, தலைசிறந்த, கண்ணும் கருத்துமாக, அறிவாற்றல்கள், எண்ணற்றவை, திகழ், பேறு, கடைப்பிடித்து, கைம்மாறு.

**III. எதிர்ப் பதங்கள் தருக:**—வெற்றி, இனிக்கும், விரும்பு, இளைஞர், மறுத்தல், பகைவர்.

IV. 1. தாய் நாட்டுக்காகச் சண்முகனர் புரிந்த பணிகள் எண்ணற்றவை.

2. 'பெற்றோரைப் பணி' என்று ஆசிரியர் கூறினர்.

இவற்றில் முதல் வாக்கியத்தில் உள்ள 'பணி' என்னும் சொல் பெயர்ச் சொல்லாகும். இரண்டாம் வாக்கியத்திலுள்ள 'பணி' என்னும் சொல் வினைச் சொல்லாகும்.

இவ்வாறே ஒரே சொல் பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் வெவ்வேறு பொருள்களில் வழங்கி வருதல் உண்டு. அதனை நன்கு அறிந்து கொள்க.

அணி, கல்—இச் சொற்களைப் பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் வெவ்வேறு வாக்கியங்களில் பயன்படுத்துக.

## இலக்கணம்

**கல், மண்**—இப்பெயர்கள் எக்காரணம் பற்றி வந்தன என்று கூற இயலாது. இவை நம் முன்னோரால் இடப் பெற்றவை. இவை போன்ற பெயர்கள் **இடுகுறிப் பெயர்** எனப்படும்.

பறவை, அணி—இப் பெயர்கள் ஒரு காரணம் பற்றி வந்தன. எனவே இவை போன்ற பெயர்கள் **காரணப் பெயர்**களாம்.

**மரம்**—இச் சொல் எல்லா வகை மரங்கட்கும் பொதுவாகி ஒரு காரணமும் இன்றி வழங்குகிறது. இது போன்ற பெயர்கள் **இடுகுறிப் பொதுப் பெயர்**களாம்.

**தென்னை**—இச்சொல் ஒரு வகை மரத்தையே சிறப்பாக உணர்த்துவதாய் ஒரு காரணமும் இன்றி வழங்குகிறது. இது போன்ற பெயர்கள் **இடுகுறிச் சிறப்புப் பெயர்**களாம்.

**அணி**—இஃது அணியப்படும் காரணம்பற்றி எல்லா அணிகட்கும் பொதுவாக வழங்குகிறது. இது போன்றவை **காரணப் பொதுப் பெயர்**களாம்.

**வளை**—இது வளைந்திருக்கும் காரணம் பற்றி வழங்குவதாயினும் ஒரு வகை அணியையே சிறப்பாகக் குறிக்கிறது. இது போன்றவை **காரணச் சிறப்புப் பெயர்**களாம்.

**நாற்காலி**—இது நான்கு கால்களையுடைய எல்லாப் பொருள்களையும் உணர்த்தாமல் ஒரு வகையான பொருளையே உணர்த்துகிறது. இது போன்ற சில பெயர்கள் காரணத்தால் வந்தனவேனும் இடுகுறி போல் ஒருவகைப் பொருளையே உணர்த்தும். அவை **காரண இடுகுறிப் பெயர்**கள் எனப்படும்.

கீழே தரப்பட்டுள்ள பெயர்களில் இடுகுறி, காரணம், காரண இடுகுறிப் பெயர்கள் எவையெனக் கூறுக:—

பனை, கிளி, இலை, முடி, சிலம்பு, முள்ளி, பூ, கூனி, காற்ருடி, துணி, எறும்பு, யானை.

# 4. நெசவுத் தொழில்

'செய்யும் தொழிலனைத்தும் சீர்தூக்கிப் பார்க்குங் கால், நெய்யுந் தொழிலுக்கு நிகரில்லை' எனப் பெருமை பெற்ற தொழில் நெசவுத் தொழிலாகும். நம் நாடு கிராமங்கள் நிறைந்த நாடு. கிராமங்களில் உள்ள மக்கள் பல் வேறு வகையான சிறு சிறு கைத்தொழில்களைச் செய்து அவற்றின் மூலம் கிடைக்கும் சிறு வருவாயைக் கொண்டே வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் செய்யும் அவ்வகைச் சிறு கைத்தொழில்களுக்குக் குடிசைத் தொழில்கள் என்று பெயர் வழங்குகின்றது. குடிசைத் தொழில்களில் மிகச் சிறந்தது நெசவுத் தொழிலாகும். இத்தொழிலைத் தம் பரம்பரைத் தொழிலாகக் கொண்டு இலட்சக் கணக்கான குடும்பங்கள் நம் நாட்டில் வாழ்ந்து வருகின்றன. இங்ஙனம் பலருக்கு வாழ்வளிக்கும் நெசவுத் தொழில் பழங் காலத்தில் நம் நாட்டில் சீரிய முறையில் செழித்தோங்கி வளர்ந்திருந்தது.

பசியை நீக்கும் உணவும் மானத்தைக் காக்கும் ஆடையும் மக்களுக்கு மிகவும் இன்றியமையாதன. 'உண்டி முதற்றே உணவின் பிண்டம்' 'உண்டி கொடுத் தோர் உயிர் கொடுத்தோரே' என உயிர் வாழ்க்கைக்கு உணவின் இன்றியமையாமையை விளக்கியுள்ளனர் நம் சான்றோர். 'ஆடையில்லாதவன் அரை மனிதன்' என்பது நம் நாட்டில் வழங்கும் பழமொழி யாகும்.

"மேலாடை இன்றிச் சவைபுகுந் தாலிந்த மேதினியோர்
நூலா யிரம்படித் தாலுமெண் ணார்நுவல் பாற்கடலோ
மாலா னவர்அணி பொன்னுடை கண்டு மகளைத்தந்தே
ஆலாலம் ஈந்தது தோலாடை சுற்றும் அரன்தனக்கே."

என்று புலவர் ஒருவர் ஆடையின் பெருமையையும் இன்றியமையாமையையும் விளக்கிப் பாடியுள்ளார். "மேலாடையில்லாமல் சபைக்குச் சென்றால் அவர்கள் எவ்வளவு நூல்களைக் கற்றவராயிருப்பினும் உலகத்தார் அவர்களை மதிக்கமாட்டார்கள். பாற்கடலானது பொன்

ணுடை அணிந்த திருமாலுக்குத் தன்மகளாகிய இலட்சுமியைத் தந்தது; ஆனல் தோலாடை அணிந்த சிவபெருமானுக்குத் தன்னிடம் தோன்றிய ஆலகால விடத்தையே ஈந்தது,'' என்பது இச்செய்யுளின் கருத்து. இச்செய்யுள் வேடிக்கையாக ஆடையின் இன்றியமையாமையை விளக்குகிறதன்றோ?

இங்ஙனம் யாவர்க்கும் இன்றியமையாத ஆடையை நெய்யும் தொழில் நெசவுத் தொழில் எனப்படும். நம் முன்னேர்கள் நெசவுத் தொழிலில் மிகவும் வல்லவராக விளங்கினர். பண்டைக் காலத்தில் நம் நாட்டில் மிக மென்மையும் தூய்மையும் வாய்ந்த, விலை மதிப்புடைய ஆடைகள் நெய்யப்பட்டன என்பதை நம் பண்டைத் தமிழிலக்கியங்களின் வாயிலாக அறியலாம். அரவுரியன்ன துகில், ஆவியந்துகில், புகைமுகந்தன்ன மாசில் தூவுடை என்றெல்லாம் இலக்கியங்களில் ஆடையின் மென்மை பாராட்டப் பட்டுள்ளது. மாலைப்பனி, பாலாவி, ஓடு நீர் என்பன போன்ற பெயர்கள் ஆடைக்கு வழங்கி வந்தன. பட்டினுலும் பருத்தியினுலும் ஆடைகள் நெய்யப்பட்டதுடன் எலி மயிராலும் விலையுயர்ந்த கம்பளங்கள் நெய்யப்பட்டன. நம் நாட்டில் நெய்யப்பட்ட மிக மெல்லிய மஸ்லின் ஆடை உலகம் போற்றும் பெருமையுடையதாக விளங்கியது.

ஆடை உடுத்துவதில் நம் நாட்டார் உயர்ந்த நாகரிகம் உடையவராக விளங்கினர்; காலத்துக்கேற்ற ஆடையைத் தேர்ந்து அணிந்து வந்தனர்; வெப்பம் மிகுந்த வேனிற் காலத்தில் காற்று எளிதாக உட்செல்லக் கூடிய பருத்தி ஆடையை அணிந்தனர்; குளிர் காலத்தில் காற்றைத் தடுத்துக் குளிரைத் தாங்க வல்ல பட்டாடை யணிந்தனர். பருத்தியாடையே நம் நாட்டுத் தட்ப வெப்ப நிலைக்கு மிகவும் ஏற்றதாகும். அதுவே ஏழை மக்களும் அணிந்து கொள்ளும் வகையில் விலை மலிவானதும் ஆகும். ஆதலால் பருத்தி ஆடையே பண்டுமுதல் நம் நாட்டில் அதிகமாக நெய்யப்பட்டு வந்தது.

நெசவுத் தொழில் பருத்தியை எடுத்துப் பக்குவப்

படுத்தல், நூல்நூற்றல், நெசவு செய்தல் என்ற மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்ட குடிசைத் தொழிலாகும். இம்மூன்று வகைத் தொழில்களாலும் மக்கள் பலர் வேலையும் கூலியும் பெற்று வாழ்ந்து வருகின்றனர்.

நம் நாட்டில் பம்பாய், பஞ்சாப், ஐதராபாத், சென்னை என்ற பகுதிகளில் பருத்தி நன்ருக விளைகின்றது. பருத்தியில் பல வகைகள் உள்ளன. அவற்றில் **கம்போடியா, கருங்கண்ணி** என்ற பருத்தி வகைகள் மிகவும் சிறந்தனவாம். நம் சென்னை இராச்சியத்தில் கோயம்புத்தூர், மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களில் சிறந்த வகைப் பருத்தி விளைகின்றது. ஆனுல் அதன் துய் குட்டையானது. உயர்தரப் பருத்தி நீளமான துய்களை உடையதாய் அதிகக் கொட்டை இல்லாததாக இருக்கும். இவ்வகைப் பருத்தியை **அமெரிக்கன் பருத்தி** என்பர். இது பஞ்சாபில் பயிராக்கப்படுகிறது. பருத்தி கரிசல் நிலங்களில் செழித்து வளரக் கூடிய பயிராகும். பருத்திக் காய்கள் நன்கு முற்றி வெடிக்கும் தறுவாயில் அவற்றை எடுத்து மேலேயுள்ள ஓடுகளை நீக்கிப் பருத்தியை அப்புறப்படுத்துவர். பின்பு கொட்டையுடன் உள்ள அப்பஞ்சைச் சீப்புப்போன்ற ஒரு கருவியால் மெதுவாகச் சீவி, கொட்டை நீக்கும் **அரைமணை** என்னும் கருவியில் கொடுத்துக் கொட்டைகளை நீக்கித் தூய்மை செய்வர். இங்ஙனம் கொட்டை நீக்கப்பட்ட பருத்தியை வில்லால் அடித்து மெல்லிய நூலிழைகளைத் தனித்தனியே பிரியுமாறு செய்வர். பின்பு அதனை நூற்பதற் கேற்றவாறு சிறு சிறு திரிகளாகத் திரிப்பர். அத்தொழில் '**பட்டைபோடுதல்**' எனப் பெயர் பெறும்.

பஞ்சை நூலாக நூற்பதற்குப் பல முறைகள் உள்ளன. பலவகைக் கருவிகளும் உள்ளன. கையால் நூற்கும் நூல் **கதர்நூல்** எனப்படும். ஆதியில் தக்களி என்ற கருவியைக் கொண்டே நூல் நூற்கப்பட்டது. அவ்வாறு நூற்பதால் மெல்லிய நூலாக நூற்க முடியாமையாலும், அதிகமாகவும் நூற்க இயலாமையாலும் இராட்டினத்தைக் கொண்டு நூற்கும் முறை ஏற்பட்டது.

தற்காலத்தில் மற்றும் பல வசதியான கருவிகளும் ஏற்பட்டுள்ளன. எவ்வளவு வசதியான கருவிகள் இருந்தாலும் மிகச் சிறந்த நூல் நூற்பது நூற்பவரின் திறமையையே பொறுத்ததாகும். பண்டைக் காலத்தில் நூல் நூற்கும் தொழில் பெண்களுக்குரிய சிறந்த தொழில்களில் ஒன்ருய் இருந்ததாக நம் நாட்டு நூல்களின் வாயிலாய்த் தெரிகின்றது.

தற்காலத்தில் நெசவுத் தொழிலுக்கு வேண்டிய நூல் முழுவதையும் கையால் நூற்றுப் பெற முடியாமையால் இயந்திரங்களின் மூலம் நூற்கும் நூலேயே அதிகமாக நெசவுக்குப் பயன்படுத்துகின்றனர். அதனுல் எண்ணற்ற ஏழை மக்கள் தொழிலில்லாமல்—வாழ வழியில்லாமல்—அல்லல் உறுகின்றனர். அதனுலேயே காந்தியடிகள் நம் நாட்டு ஏழை மக்களின் வறுமையைப் போக்கும் தொழிலாக உதவக் கூடிய கதர் நூற்றலேயும், கதர் ஆடை நெய்தலேயும், கதர் ஆடை உடுத்துவதையும் காங்கிரஸ் இயக்கத்தின் முக்கிய நோக்கங்களாக வகுத்து உழைத்து வந்தார்.

நூலேப் பல நிறச் சாயம் தோய்த்து நெசவுக்குப் பயன் படுத்துகின்றனர். சாயம் தோய்ப்பதும் தனியே நடத்தக் கூடியதும், இதனேடு சம்பந்தப்பட்டதுமாகிய மற்ெருரு குடிசைத் தொழிலாகும். நூலேத் தமக்கு வேண்டிய இழைகளும் நீளமும் கொண்டதாக அமைத்துக் கொள்வர். பின்னர் அதனேப் பசையிட்டு உலரச்செய்வர். அங்ஙனம் செய்யப்பட்ட நூலுக்குப் ‘**பாவு**’ என்பது பெயர். பாவைத் தறியில் பூட்டிக் குறுக்கே நூலிட்டு நெசவு செய்வர். குறுக்கு நூலுக்கு **ஊடை** என்பது பெயர். பாவை ஓர் இழை மேலும் மற்ரோர் இழை கீழுமாக வருமாறு இரண்டு விழுதுச் சட்டங்களில் கோத்துப் **படைமரத்தில்** பிணிப்பர். விழுதுச் சட்டங்களின் கீழே மிதி கட்டப்பட்டிருக்கும். ஒரு மிதியை மிதித்தால் ஒரு சட்டம் கீழிறங்கும்; மற்ெருரு சட்டம் மேலே செல்லும். இடையில் **நாடா** என்ற கருவியினுல் ஊடை நூலேயிட்டுக் காலே மாற்றி மிதித்தால் அது

பின்னிக் கொள்ளும். அப்போது அச்சுமரம் என்ற கருவியால் அந்நூலை அழுந்தத் தட்டுவர். இங்ஙனம் மேலும்



கைத்தறி : புதிய அமைப்பு

மேலும் செய்வதால் ஆடை உண்டாகின்றது. இத்தொழிலுக்கு நெசவு என்பது பெயர்.

கைத்தறி நெசவின் மூலம் விரைவாக ஆடை நெய்ய இயலாது; நம் நாட்டுக்குத் தேவையான அளவு ஆடைகளை உற்பத்தி செய்யவும் இயலாது. ஆதலால் தற்காலத்தில் நெசவு இயந்திரங்கள் பல ஏற்பட்டுள்ளன. அவைகளின் மூலம் ஒரு நாளில் ஆயிரக்கணக்கான ஆடைகளை நெய்ய முடியும். நம் நாட்டில் பம்பாய், ஆமதாபாத், ஷோலாப்பூர் போன்ற இடங்களில் இயந்திர நெசவுத் தொழிற்சாலைகள் மிகுதியாக உள்ளன. சென்னையில் உள்ள பக்கிங்காம் கர்நாடிக் நெசவுத் தொழிற்சாலையும் மேட்டூரில் உள்ள நெசவுத் தொழிற்சாலையும் சிறந்தனவாகும். கோயம்புத்தூர், மதுரை போன்ற இடங்களிலும்

பல இயந்திரத் தொழிற்சாலைகள் உள்ளன. அவை யாவும் நூல்நூற்கும் தொழிற் சாலைகளேயாம். இயந்தி




கோயம்புத்தூரிலுள்ள ஒரு மில்லில் நூல் நூற்கும் இயந்திரங்கள்

ரங்களின் மூலம் மெல்லிய நயமான உறுதியான நூல் நூற்கப்படுகின்றது. அந்நூலைக் கொண்டு மிகவும் அழகான கண் கவர் நிறமுடைய மெல்லிய ஆடைகளையும் நெசவாலைகள் தயாரிக்கின்றன. நம் நாட்டின் தேவைக்கு வேண்டிய எல்லா வகையான ஆடை வகைகளையும் ஏராளமாக நெசவாலைகள் உற்பத்தி செய்வதனாலும், அவற்றின் விலையும் குறைவாக உள்ளமையாலும் கைத்தறி நெசவுத் தொழில் கவனிப்பாரற்றுச் சிறிது சிறிதாக அழிந்து வருகின்றது. அதனால் அதனையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட இலட்சக்கணக்கான குடும்பங்கள் வேறு தொழிலில்லாமல் வறுமையால் வாடி நலிகின்றன. நம் நாட்டின் முதன்மையான உயரிய கைத்தொழில் தன் பெருமை குன்றி அழியும் நிலையை அடைந்தது மிகவும் வருந்தத்தக்க தொன்றாகும்.

இயந்திரத் தொழில் வளம் பெற்றுள்ள இக்காலத்

திலும் இயந்திரங்களைக் கொண்டு தயாரிக்க முடியாத பல அற்புத வேலைப்பாடமைந்த ஆடைகளைக் கைத்தறிகளின் மூலம் நெய்யவல்ல உயரிய தொழிலாளர் பலர் உள்ளனர்.



கைத்தறி : பழைய அமைப்பு

நெசவுத் தொழில் பிழைப்புக்குரிய தொழிலாக மட்டுமல்லாமல் உயரிய கலைத்திறம் மிக்க தொழிலாகவும் விளங்கி வந்துள்ளது. அத்தகைய கைத்தொழில் அழிந்து போனால் நம் நாட்டில் வறுமை மிகுவதுடன் உலகம் போற்றும் அரிய கலையும் அழிந்துவிடும். ஆதலால் அரசாங்கத்தார் கைத்தறித் தொழில் வளர வேண்டிய உதவிகள் செய்து அத்தொழிலைக் காக்கக் கடமைப் பட்டுள்ளனர். நெசவாலைகளின் போட்டியால் கைத்தறித் தொழில் நசித்து விடாமல் இருக்க வேண்டுமானால் கைத் தறிகளில் உற்பத்தி செய்யக்கூடிய சிலவகை ஆடைகளை நெசவாலைகளில் உற்பத்தி செய்தலாகாது என்று தடுத்தல் வேண்டும். அங்ஙனம் செய்தால் கைத்தறித் தொழிலும் செழிக்கும். அதேசமயத்தில் நெசவாலைகள் ஏனைய வகை ஆடைகளை உற்பத்தி செய்து நம் நாட்டின் தேவையையும் நிறைவாக்கலாம். நம் அரசாங்கத்தார்

இத்துறையில் வேண்டியன செய்து வருகின்றனர். நாமும் அவர்கள் முயற்சி வெற்றிபெற உதவுவதுடன் கைத்தறித் துணிகளையே உடுத்து அத்தொழிலுக்கு ஆக்கம் தேடுதலையும் கடமையாகக் கொள்ள வேண்டும்.

## அருஞ்சொல் விளக்கம்

வருவாய் - வருமானம்; சீரிய - சிறந்த; உண்டி - உணவு; உணவின் பிண்டம் - உடல், உணவால் ஆகிய தொகுதி; முதற்று - முதலாகக் கொண்டது; சான்றோர் - பெரியோர்; சவை - சபை; மேதினி - உலகம்; நுவல் - பெருமையாகக் கூறப்படும்; மால் - விஷ்ணு; ஆலாலம் - விஷம்; அரன் - சிவபெருமான்; அரவுரி - பாம்பு உரித்த சட்டை; தானை-ஆடை; துய் - பஞ்சின் மெல்லிய இழை; பண்டு முதல் - முற்காலம் முதல்; நலிகின்றன - துன்பமடைகின்றன; புராதனம் × நவீனம்; நசித்தல் - அழிதல்; ஆக்கம் - உயர்வு.

## வினாக்கள்

1. நெசவுத் தொழிலின் சிறப்பை விளக்குக.
2. மக்களுக்கு இன்றியமையாத இரு பொருள்கள் எவை? அவை எங்ஙனம் இன்றியமையாதனவாம்?
3. ஆடையின் இன்றியமையாமையைப் புலவர் எங்ஙனம் நகைச் சுவை விளங்கக் கூறியுள்ளார்?
4. பண்டைக் காலத்தில் நம் நாட்டில் மிகவும் மென்மை வாய்ந்த ஆடைகள் நெய்யப்பட்டன என்று எங்ஙனம் கூறலாம்?
5. நம் நாட்டுக்குப் பருத்தி ஆடைகளே ஏற்றவை—ஏன்?
6. நெசவுத் தொழிலில் உள்ள மூன்று பெரும்பிரிவுகள் எவை?
7. பருத்தியில் உள்ள இருவகைகள் எவை? அவை நம் நாட்டில் எவ்விடங்களில் பயிராகின்றன?
8. பருத்தியைக் காய்களிலிருந்து எடுப்பது முதல் அது நூலாகும் வரையில் மக்கள் புரியும் பலவகைச் செயல்களை விவரிக்க.
9. பருத்தி நூல் எவ்வாறு ஆடையாக நெய்யப்படுகிறது?
10. கைத்தறி நெசவில் பயன்படும் நான்கு கருவிகளைக் குறிப்பிட்டு அவை எங்ஙனம் உதவுகின்றன என்று கூறுக.
11. நம் நாட்டில் கைத்தறி நெசவு தாழ்ந்த நிலையில் இருக்கக் காரணம் என்ன?
12. கைத்தறி நெசவை வளர்க்க நம் கடமை யாது?

## மொழிப் பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—தொழிலனைத்தும், வாழ்வளிக்கும், மேலாடை, பாற்கடல், பொன்னுடை, புகுந்தாலிந்த.

II. **சேர்த்தெழுதுக** :—பால் + ஆவி ; தமிழ் + இலக்கியம் ; கவனிப்பார் + அற்று ; நெசவு + ஆலை ; வேலைப்பாடு + அமைந்த.

III. "உன் கவலையை விடுக," என்று ஹாசன் தன் மனைவியைத் தேற்றினான்.

இவ்வாக்கியத்தில், "உன் கவலையை விடுக" என்னும் தொடர் ஹாசன் கூறியதாகும். இவ்வாறு ஒருவர் கூறிய சொற்களை அவர் கூறியவாறே வழங்கும் முறைக்கு **நேர் கூற்று** என்பது பெயர்.

இவ்வாக்கியத்தையே கீழ்க்கண்டவாறு மாற்றி எழுதலாம். அவள் கொண்ட கவலையை விடுமாறு ஹாசன் தன் மனைவியைத் தேற்றினான். ஹாசன் கூறிய இது பிறர் கூறுவதைப் போல் மாற்றி அமைக்கப் பட்டுள்ளது. இம்முறைக்கு **அயல் கூற்று** என்பது பெயர். நேர்கூற்றை அயல் கூற்றாகவும், அயல் கூற்றை நேர் கூற்றாகவும் மாற்றி அமைக்கலாம்.

**அயல் கூற்று :** அடுத்த நாள் காலையில் வலையில் முதலிற் பிடிக்கும் மீனை அவர்களுக்குத் தருவதாகச் செம்படவன் மனைவி கூறினாள்.

**நேர் கூற்று :** "நாளைக் காலையில் வலையில் முதலிற் பிடிக்கும் மீனை உங்களுக்குத் தருகிறேன்," என்று செம்படவன் மனைவி கூறினாள்.

## இலக்கணம்

நம் நாட்டில் நெய்யப்பட்ட மஸ்லின் ஆடை **உலகம்** போற்றும் பெருமையுடையதாம்.

இவ்வாக்கியத்தில் உலகம் என்னும் சொல் இடத்தைக் குறிக்காமல் உலகில் வாழும் மக்களைக் குறிக்கிறது. இங்ஙனம் ஒரு பெயர்ச்சொல் அதனால் குறிக்கப்படும் பொருளைக் குறிக்காமல், அதனுடன் தொடர்புடைய மற்றொரு பொருளுக்கு ஆகி வருவது **ஆகு பெயர்** எனப்படும்.

ஆகுபெயர் ஆறு வகைப்படும். அவையாவன :

| | | | |
|---|---|---|---|
| 1. | பொருளாகு பெயர் : | உ-ம். | **தாமரை** முகம் |
| 2. | இடவாகு பெயர் : | ,, | **சென்னை** மகிழ்ந்தது |
| 3. | காலவாகு பெயர் : | ,, | **கார்த்திகை** மலர்ந்தது |
| 4. | சினையாகு பெயர் : | ,, | **வெற்றிலை** நட்டான் |
| 5. | பண்பாகு பெயர் : | ,, | **வெள்ளை** உழுதது |
| 6. | தொழிலாகு பெயர் : | ,, | **பொங்கல்** உண்டான் |

# 5. எவரெஸ்டு வெற்றி

## 1. பழைய முயற்சிகள்

பண்டைக்காலம் முதல் மனிதன் இயற்கைச் சக்திகளை வெல்வதில் தன் அறிவைச் செலுத்தி வருகின்ருன்; விஞ்ஞான அறிவு வளர்ந்துள்ள இக்காலத்தில் ஆழ் கடலில் கப்பலில் சென்றும், பரந்த ஆகாயத்தில் ஆகாய விமானத்தின் மூலம் சென்றும் எத்தனையோ அரிய உண்மைகளைக் கண்டறிந்துள்ளான். பகலவன் ஒளியையே அறியாத நாடுகளில் நுழைந்து சென்று பல புதிய நாடுகளைக் கண்டறிந்தவர் பலர். பனியடர்ந்த வட துருவம் தென் துருவங்களைக் கண்டறிய முயன்று வெற்றி பெற்றவர் பலர். கடல் வழியே பல நாடுகளுக்கு வழி கண்டறிந்தவர் பலர். அம்முயற்சிகளில் ஈடுபட்டுத் தம் அரிய உயிரை இழந்தவர்கள் எண்ணற்றவர்களாவர். அத்தகைய அரிய முயற்சிகளில் ஒன்றே எவரெஸ்டு சிகரத்தின் உச்சியைக் கண்டறிந்ததுமாகும்.

எவரெஸ்டு சிகரம் உலகில் சிறந்த பெரிய மலையாகிய இமயமலையின் சிகரங்களில் ஒன்ருகும். இமயமலை என்பது ஒரே மலையன்று. இது மூன்று பெரிய மலைத் தொடராக அமைந்துள்ளது. மேற்கே ஆப்கானிஸ்தானத்திலிருந்து கிழக்கே பர்மா வரை 1500 மைல்கள் அம் மலைத்தொடர்கள் நீண்டுள்ளன. இந்திய நாட்டின் வட எல்லையாகத் திகழ்ந்து நம் நாட்டைக் காத்து வருவன இம்மலைத் தொடர்களேயாகும். அதனுல்தான் மகாகவி பாரதியார் ‘மன்னும் இமயமலை எங்கள் மலையே, மாநில மீதிது போற் பிறிதிலையே’ என்று இதன் பெருமையைப் போற்றியுள்ளார். இத்தகைய பெருமை பொருந்திய மலைகளில் மிக உயரமான பல சிகரங்கள் உள்ளன. அவற்றுள் காட்வின் ஆஸ்டின், நங்கபர்வதம், நந்த தேவி, தவளகிரி, காஞ்சன கங்கா, எவரெஸ்டு என்பன மிகச் சிறந்தனவாகும். இச்சிகரங்கள் யாவற்றிலும் மிக உயரமானது எவரெஸ்டு சிகரமேயாகும். அதன் உயரம்

29,002 அடி என்று ஆராய்ச்சியாளர் கணக்கிட்டுள்ளனர். அஃதாவது இச்சிகரம் ஏறக்குறைய ஐந்தரை மைல் உயரமுள்ளதாகும். இதைவிட உயரமான மலைச்சிகரம் உலகில் வேறு எங்கும் இல்லை.

வானளாவி நிற்கும் இச்சிகரத்தைத் திபேத் நாட்டு மக்கள் 'பனிமலைத் தாய்' என்று போற்றுகின்றனர். நம் நாட்டு மக்கள் பொன்மலை, வெள்ளியங்கிரி, கௌரி சங்கரம் என்று பலவாறு கூறிப் போற்றுகின்றனர். ஐரோப்பியர் இச்சிகரத்தை எவரெஸ்டு என்று கூறுகின்றனர். இந்திய நாட்டில் நில அளவு உத்தியோகத் தலைவராக இருந்த ஜார்ஜ் எவரெஸ்டு என்பவர் முயற்சியால் இச்சிகரத்தின் உயரம் கண்டுபிடிக்கப்பட்டது. ஆதலால் இதற்கு எவரெஸ்டு என்பதையே பெயராக வழங்கினர். ஜார்ஜ் எவரெஸ்டினிடம் பணியாற்றி வந்த இந்தியர் ஒருவரே இதன் உயரத்தைக் கண்டறிந்தனர் என்றும் கூறுகின்றனர்.

உலகிலேயே மிக உயரமான சிகரம் எவரெஸ்டுதான் என்று கண்டறிந்தது முதல் பலர் அதன் உச்சியில் ஏறும் முயற்சியில் ஈடுபட்டனர். பனி செறிந்த இச்சிகரத்தில் ஏறுவதென்பது எளிய காரியமன்று. எவரெஸ்டு சிகரம் இமயமலையின் வெளித் தொடரில் இருப்பதால் அதனை அடைவதற்கே நூற்றுக்கணக்கான மைல்கள் காலால் நடந்து செல்லவேண்டும். 16,000 அடிக்கு மேல் மரம் செடி கொடிகளைக் காணமுடியாது. எங்கு நோக்கினும் பனியே அடர்ந்திருக்கும். வழி கண்டறிந்து செல்வதே மிகவும் அருமையாகும். திடீர் திடீரென்று பனிப் பாறைகள் உருண்டு விழும். இடையிடையே பனியாறுகள் பல வேகமாகப் பாயும். வழுக்கும் பனிப்பாறைகள் செறிந்த செங்குத்தான இடங்களில் ஏறுவது என்பது நினைத்தாலும் நடுங்கத்தக்க அருஞ்செயலாகும். கணம் தவறினால் மரணம்தான் நேரும். இவ்வளவு இன்னல்களுக்கிடையே ஒருவர் உயிரைத் துரும்பென மதித்துச் சென்றாலும் அங்குள்ள இயற்கை நிலை அவர்களை ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் செல்லவொட்டாது. உயரச் செல்லச்

செல்லப் பிராணவாயு மிகக் குறைவாதலின் மூச்சுவிடவே மிகவும் கடினமாக இருக்கும். அங்கு வெப்பமே சிறிதும் இராது. ஆதலால் குளிரால் கைகால்கள் விறைத்து இரத்தம் உறைந்துவிடும். உயிருக்கே அபாயம் ஏற்படும்.

இத்துணைத் துன்பங்கள் நிறைந்த இம்முயற்சியில் பலர் தம் உயிரையும் பொருட்படுத்தாது ஈடுபட்டதேன்? பொன்னுக்காகவா? பொருளுக்காகவா? இயற்கையைக் கண்டறிய வேண்டும்; அதன் அழகை-அமைப்பை-உலகுக்கு உணர்த்தவேண்டும் என்ற பேராவலே அதற்குக் காரணமாகும். எத்தனையோ அறிஞர்கள், ஆற்றல் வாய்ந்த வீரர்கள், இங்ஙனம் அரிய பெரிய முயற்சிகளில் ஈடுபட்டுப் பல புதுமைகளைக் கண்டறிந்து புகழ் பெற்றனர். அம்முயற்சிகளில் உயிர் துறந்து புகழ்பெற்றவரும் பலராவர். போர்க்களத்தில் காட்டும் வீரச்செயல்களினும் இதற்கு மிக்க வீரமும் நெஞ்சுத் துணிவும் கலங்காத மன நிலையும் வேண்டும். ஆகவே இத்தகையவர்கள் உலகில் ஒப்புயர்வற்ற வீரர்களென்று போற்றிப் புகழப்படுகின்றனர்.

பனியால் மூடப்பெற்ற எவரெஸ்டின் உச்சியைக் கண்டறியப் பற்பல சமயங்களில் பற்பல முயற்சிகள் தொடங்கப் பெற்றன. முதல் முயற்சி 1914-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்றது. **ஸி. ஜி. புரூஸ்** என்பவர் மலையேறுவதில் நன்கு பயிற்சி பெற்ற ஆட்கள் பலருடன் இமயமலையை அடைந்தார். ஆனால் அப்போது தொடங்கிய உலகப் பெரும் போரினால் அவருடைய முயற்சி தடைப்பட்டது. 1921-ஆம் ஆண்டில் ஒரு பிரிட்டிஷ் குழுவினர் நேபாள நாட்டிலுள்ள **ராங்பக்** என்னும் பள்ளத்தாக்கின் மூலம் எவரெஸ்டின்மீது ஏற முயன்றனர். பனி, மழை முதலிய பல துன்பங்கள் குறுக்கிட்டமையால் அவர்கள் முயற்சியும் வெற்றி பெறவில்லை.

1922-ஆம் ஆண்டில் ஸி. ஜி. புரூஸ் என்பவர் மீண்டும் இம்முயற்சியில் ஈடுபட்டார். இம்முறை அவர் பற்பல வசதிகளையும், உணவு, படுக்கை வசதி, கூடாரம், பிராண

வாயுக் கருவிகள் ஆகியவற்றை யெல்லாம் தக்க வழியில் அமைத்துக்கொண்டு தேர்ந்த அநுபவம் வாய்ந்தவர்களைத் தம்முடன் அழைத்துக்கொண்டு புறப்பட்டார்.

எவரெஸ்டு சிகரம் ஏறுவதற்கு மே மாதத்தின் பிற்பகுதியும் ஜூன் மாதத்தின் முற்பகுதியுமே ஏற்ற பருவமாகும். அங்கு மழையும் புயலும் இல்லாத பருவம் அதுவேயாகும். புரூஸ் தம் கூட்டத்தாருடன் குறிப்பிட்ட காலத்திற்குள் மலையடிவாரத்தை அடைந்தார். எல்லோரும் தங்கள் தங்கள் மூட்டைகளை முதுகில் சுமந்துகொண்டு பிரயாணத்தைத் தொடங்கினர். எவரெஸ்டு சிகரம் கண்ணுக்குத் தெரிவதற்கே 20,000 அடிகள் மலையேறியாக வேண்டுமாம். அவ்வளவு தூரமும் நேராகச் செல்ல முடியாதாம். சுமார் 600 மைல் தூரம் சுற்றிச் சென்றால்தான் அவ்விடத்தை அடைய முடியுமாம். புரூஸ் குழுவினர் இவ்வளவு இடையூறுகளையும் தாங்கிக்கொண்டு அவ்விடத்தை அடைந்தனர்; சூரியன் ஒளியில் வெள்ளியை உருக்கி வார்த்தது போலக் காட்சியளிக்கும் பனியடர்ந்த எவரெஸ்டு சிகரத்தைக் கண்ணால் கண்டனர். அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவும் உண்டோ? அம்மகிழ்ச்சி மேலும் அவர்களை ஊக்கிற்று. அவர்கள் மிகவும் முயன்று 25,000 அடி உயரம் வரை சென்றனர். மேலும் 4000 அடிகளே இருந்தன. தூரம் குறைவுதான். ஆனால் அதனைக் கடப்பதுதான் மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்டதாயிருந்தது. எனினும் அவர்களில் சிலர் பிராணவாயுவின் உதவியால் மேலும் முயன்று 27,300 அடிவரை சென்றனர்; 'கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை', என்ற பழமொழி போல் அவர்களாலும் அதற்கு மேல் செல்ல முடியாமல் வறிதே திரும்பினர். இங்ஙனம் புரூஸின் இரண்டாவது முயற்சியும் தோல்வியுற்றது.

மீண்டும் 1924-ஆம் ஆண்டில் மல்லோரி, இர்வின் என்பவர்கள் இம்முயற்சியில் ஈடுபட்டுத் தங்கள் உயிரையே இழந்தனர். அதற்குப் பிறகு ஒன்பதாண்டுகள் எத்தகைய முயற்சியும் இல்லாமல் கழிந்தன. 1933-ஆம் ஆண்டில் மீண்டும் புதிய எழுச்சி தோன்றியது. ரட்லட்ஜ்

என்பவரைத் தலைவராகக் கொண்ட குழுவினர் 27,400 அடிவரை சென்று அங்குத் தங்கினர். அக்குழுவைச் சார்ந்த **ஸிமிதி, ஷிப்டன்** என்ற இருவரும் 28,102 அடி வரை சென்றனர். இன்னும் 900 அடிகளே எஞ்சியிருந்தன. ஆனல் அத்தொள்ளாயிரம் அடிகளே மிக்க தொல்லை தருவனவாக இருந்தன. ஆதலால் அதற்குமேல் செல்ல இயலாமல் திரும்பி விட்டனர்.

1934-ஆம் ஆண்டிலும் 1951-ஆம் ஆண்டிலும் அறிஞர் சிலர் இம்முயற்சியில் ஈடுபட்டனர். அவர்கள் உழைப்பு எவரெஸ்டை அடைவதில் உள்ள பற்பல துன்பங்களை அறிந்துகொள்வதற்கு உதவினவே ஒழிய வெற்றியளிக்கவில்லை.

இதற்கிடையில் 1933-ஆம் ஆண்டில் **பெல்லோஸ்** என்பவர் ஆகாய விமானத்தின் மூலம் பறந்து சென்று இதன் உச்சியைக் காண முயன்ருர். அதன் பொருட்டு அவர் செய்துகொண்ட ஏற்பாடுகள் பலவாகும். மெல்லிய கம்பிகள் இணைத்துத் தைத்த சட்டையை அணிந்து அதன் மூலம் மின்சாரத்தைச் செலுத்தித் தம் உடல் குளிரால் விறைத்துப் போகாதவாறு உஷ்ணமுடையதாகச் செய்துகொண்டார். இதுபோல எண்ணற்ற வசதிகளைச் செய்துகொண்டு விமானத்தில் பறந்து எவரெஸ்டின் கம்பீரமான அழகிய தோற்றத்தைச் சிறந்த புகைப்படக் கருவிகள் மூலம் அவர் படமெடுத்து வந்தார்.

## 2. புதிய முயற்சிகள்

அறிஞர் பற்பலரின் முயற்சிகளைத் தோல்வியுறச் செய்த எவரெஸ்டின் உச்சியைக் கண்டறிவதில் இறுதியாக மனித முயற்சி வெற்றியே பெற்றது. எண்ணற்றவர்களுக்குத் தன் இயற்கையை மறைத்து அவர்களை நெருங்கவும் இயலாமல் செய்த உன்னத சிகரமும் மனிதனுக்குப் பணியவே நேரிட்டது. இத்தகைய அரும்பெருங் காரியத்தைச் செய்த வீரர் நம் இந்திய நாட்டைச்சேர்ந்த **ஷெர்பா டென்ஸிங் நார்கே** என்பவரே. ஆதலால் இந்தி

யாவின் ஆற்றல் இன்று உலகப் புகழ்பெற்றுள்ளது எனலாம். ஷெர்பா என்பது இவர் பிறந்த குடியின் பெயராகும். டென்ஸிங் தம் பத்தொன்பதாவது வயதுமுதலே



மலையேறும் முயற்சியில் மிக்க ஆவலுடையவராக இருந்தார். அவர் இளமையில் 17,000 அடி வரை சென்று யாக் என்னும் சடை எருமைகளை மேய்த்து வருவாராம். அப்போது புத்தத் துறவிகள், "இமயத்தின் உச்சியில் இறைவன் எழுந்தருளியுள்ளான்; அவனை வணங்குதலே நம் கடமை," என்று கூறுவதுண்டு. அதனைக் கேட்ட டென்ஸிங் இமயத்தின் உச்சியை அடைந்தால் இறைவனை அருகிலேயே கண்டு வணங்கலாமல்லவா என்று அடிக்கடி நினைப்பாராம். அங்ஙனம் இளமையில் தோன்றிய அவ்வெண்ணமே இன்று வெற்றியாக விளைந்ததுபோலும்! நினைப்பவர் உறுதியோடு முயலும் குணமுடையவராயின் நினைத்ததை நினைத்தவாறே அடையலாம் என்று வள்ளுவர் கூறியது உண்மையாயிற்று.

இளமை முதல் மலையேறுவதில் ஆர்வம்கொண்ட டென்ஸிங் அடிக்கடி இமயத்தின்மீது ஏற முயலும் குழு

வினருடன் கலந்து அவர்கட்கு உதவி செய்யும் ஆட்களில் ஒருவராய் மலையேறி வருவாராம். 1952-ஆம் ஆண்டில் ஆற்றல் வாய்ந்த ஒரு குழுவினர் எவரெஸ்டைக் காணும் முயற்சியில் ஈடுபட்டனர். டென்ஸிங்கும் அக்குழுவில் ஒருவர். அம்முறை டென்ஸிங் எவரெஸ்டின் 28,200 அடி வரை சென்று அதற்குமேல் செல்ல இயலாமல் திரும்பி விட்டார். டென்ஸிங் 27,000 அடி உயரத்தில் ஒரு நாள் முழுவதும் கூடாரமடித்துத் தங்கி யிருந்தாராம். மனிதன் இருபத்து நான்கு மணி நேரம் தங்கியிருந்த மிக உயர மான இடம் இதுவே என்று கூறப்படுகிறது. அங்கு இருக்கும்போது மூச்சு விடவும் கஷ்டமாக இருந்ததாம். உடலின் வெப்ப நிலை மிகவும் குறைந்து விட்டதாம். அதனைச் சரிப்படுத்த ஒருவரோடொருவர் கையால் ஓங்கி ஓங்கி அடித்துக்கொள்வராம். மூச்சுக் காற்றை இழுத் தால் மூக்கெல்லாம் பனி ஒட்டிக் கொள்ளுமாம். உமிழ் கின்ற எச்சிலும் பனிக்கட்டியாக உறைந்துவிடுமாம்! இவ்வளவு கஷ்டங்களுக்கிடையில் அதுவரை ஒருவரும் அடையாத அவ்வளவு தூரம் சென்று திரும்பியமைக்காக நேபாள அரசாங்கத்தார் டென்ஸிங்கிற்குப் புலியடையா ளம் பொறித்த பதக்கம் ஒன்றினை வழங்கிச் சிறப்பித் தனர்.

இறுதியாக 1953-ஆம் ஆண்டில் **கர்னல் ஜான் ஹண்ட்** என்பவர் தலைமையில் புறப்பட்ட குழுவினரில் ஒருவராக டென்ஸிங்கும் கலந்துகொண்டு மலையேற லாயினர். இவருடன் சென்ற வீரர்களில் **ஹில்லரி, இவான்ஸ், டாம் போர்டில்லன்** என்பவர்கள் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவர்கள் ஸ்விட்ஜர்லாந்திலுள்ள பெரிய ஆல்ப்ஸ் சிகரத்தில் பலமுறை ஏறிப் பழகியவர்களாவர். இக்குழுவினர் மலையேறுவதற்கு வேண்டிய எல்லாவித மான வசதிகளையும் செய்துகொண்டு ஏப்ரல் மாதம் புறப் பட்டனர். இவர்கள் எவ்வளவோ துன்பங்களைத் தாண்டி 24,000 அடி தூரம் ஏறி அங்கு ஒரு பெரிய வசதியான முகாம் (தங்குமிடம்) ஏற்படுத்திக் கொண்டனர். அங் கிருந்து தென்கிழக்குப் பகுதி வழியாகச் செங்குத்தாக

ஏறவேண்டி யிருந்தது. தங்களிடமிருந்த பனிக் கோடரி களால் செங்குத்தாக நின்ற பனிப் பாறைகளைப் பிளந்து படிகளமைத்து அடிமேல் அடிவைத்து 27,200 அடி வரை சென்றனர். தலைவர் ஹண்டும் மற்றும் பலரும் அதற்கு மேல் செல்ல இயலாமல் அங்கேயே கூடாரமடித்துத் தங்கி விட்டனர். டென்ஸிங்கும் ஹில்லரியும் மட்டும் விடாப் பிடியுடன் மேலும் முயன்று 27,900 அடிவரை சென்றனர். அதற்கு மேல் அன்று ஏற முடியவில்லை. அவ்விடம் மிக்க குளிரான இடம்; என்றாலும் டென்ஸிங்கும் ஹில்லரியும் அன்றிரவு அங்கேயே தங்கி மறுநாள் மீண்டும் மலை யேறத் துணிந்தனர். இரவெல்லாம் காற்றும் குளிரும் மிகுதியாக இருந்ததனால் அவர்களுக்குத் தூக்கமே வரவில்லையாம்.

மறுநாள், மே மாதம் 29-ஆம் நாள், காலை 6-30 மணிக்கே இருவரும் சுமார் 50 பவுண்டு எடையுள்ள சுமைகளை முதுகில் சுமந்துகொண்டு மெதுவாக ஏறத் தொடங்கினர். 28,000 அடி சென்ற உடன் சிகரத்தின் ஓரம் கத்தி முனைபோல் இருந்ததாம். தளரா மனத்துடன் இருவரும் கோடரியால் வெட்டிப் படிகளமைத்தும், கைகளால் ஊர்ந்தும், கையிலுள்ள கூர்மையான தடியைப் பனிக்கட்டிகளில் ஊன்றியும் சிறிது சிறிதாக ஏறினர். இங்ஙனம் மூன்றுமணி நேரம் ஏறினவுடன் இருவரும் சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு மீண்டும் மலை யேறினர்.

பகல் 11-30 மணி இருக்கும். அவர்கள் தங்களுக் கெதிரே இருந்த பெரிய பனிப் பாறையைச் சுற்றித் திரும் பினர். என்ன ஆச்சரியம்! சிறிது தூரத்தில் தரை சமமாக இருந்தது. திடீரென்று எதிர்பாராத வகையில் உலகின் உச்சியில் தாங்கள் இருப்பதை உணர்ந்து திகைத்தார்கள். 'நாம் எவரெஸ்டின் உச்சியில்தான் நிற்கிறோமா' என்பதை உணரச் சுற்றுமுற்றும் பார்த் தார்கள். எவரெஸ்டின் சரிவான தோற்றமும் பேரழகும் அவர்களை வியக்கச் செய்தன. வடக்கில் திபேத் நாட்டில் உள்ள புத்தர் கோயில்களையும் சுற்றிலும் உள்ள ஏனைய காட்சிகளையும் கண்டார்கள். இமயத்தின் தென்கிழக்குப்

பகுதியாக ஏறிய அவர்கள் வடக்கே உள்ள திபேத்தைப் பார்க்க முடிந்தமையால் தாங்கள் எவரெஸ்டின் உச்சியை அடைந்து விட்டதை உணர்ந்தனர். அவர்கள் அடைந்த ஆனந்தத்தை அளவிடவும் கூடுமோ? ஒருவரை ஒருவர் கைகுலுக்கிக் கொண்டனர். டென்ஸிங் பல நாட்டுக் கொடிகளையும் உயர்த்திப் பிடிக்க ஹில்லரி புகைப்படம் எடுத்துக்கொண்டார். டென்ஸிங் தாம் இளமையில் நினைத்ததுபோல எவரெஸ்டின் உச்சியில் எழுந்தருளி யுள்ள இறைவனைத் தம்மிடம் இருந்த உணவுப் பொருள் களை வைத்து வழிபட்டார். அவர்கள் எவரெஸ்டின் உச்சியில் நின்றது பதினைந்து நிமிடங்களேயாகும். அதற்குமேல் அங்கு இருக்க அவர்களால் இயலவில்லை. ஆதலால் அவர்கள் புறப்பட்டு அன்று மாலை 4-30 மணிக்கு ஹண்ட் முதலியவர்கள் இருக்குமிடத்தை யடைந்து தம் வெற்றியைக் கூறினர். அன்று அவர்கள் அடைந்த மகிழ்ச்சியை எழுத்தால் எழுத முடியுமோ ?

டென்ஸிங் என்றால் சக்தியை அடிமை கொண்டவர் என்பது பொருளாம். இங்ஙனம் எவருக்கும் வணங்காமல் தலை நிமிர்ந்து நின்ற எவரெஸ்டு சிகரத்தை வணங்க வைத்ததன் பயனாக அவர் அப் பெயருக்கு மிக மிகப் பொருத்தமுடையவராகவே உள்ளனர். டென்ஸிங்கின் அளவற்ற வீரச் செயலை உலகத்தாரனைவரும் ஒருமுக மாகப் பாராட்டிப் புகழ்ந்தனர். இந்தியாவுக்கு அழியாப் பெரும் புகழைத் தேடித்தந்த வீரர் டென்ஸிங்கிற்கும் ஹில்லரிக்கும் இந்திய ஜனாதிபதி பொற் பதக்கம் வழங்கிப் பாராட்டினர். **இராணி எலிஸபெத்** தம் முடிசூட்டு விழா வன்று உலகப் பெரு வெற்றி பெற்ற வீரர்கள் இருவருக்கும் சிறந்த பரிசில்கள் வழங்கிச் சிறப்பித்தனர்.

## அருஞ்சொல் விளக்கம்

வடதுருவம் - பூமியின் வடகோடி ; தென் துருவம் - தென்கோடி ; உறைந்துவிடும் - இறுகிவிடும் ; பிராணவாயுக் கருவி - பிராணவாயு அடங்கிய கண்ணாடிக் குப்பிகளிலிருந்து ரப்பர்க் குழாயின் மூலம் சுவா சிக்க உதவும் ஒருவகைக் கருவி ; உன்னத - உயரமான, ஸ்விட்ஜர்லந்து-

ஐரோப்பா கண்டத்தில் உள்ள சிறு நாடு, இது பெரும்பாலும் ஆல்ப்ஸ் மலைப் பிரதேசமாகும்.

## வினாக்கள்

1. இயற்கைச் சக்திகளை வெல்வதில் மக்கள் எவ்வாறு முன்னேறியுள்ளனர் ?
2. இமயமலையில் உள்ள சிறந்த சிகரங்கள் எவை ?
3. எவரெஸ்டு சிகரத்தைப்பற்றிக் குறிப்பு வரைக.
4. எவரெஸ்டு சிகரத்தில் ஏறும்போது ஏற்படும் இடையூறுகள் எவை ?
5. புதுமைகளைக் கண்டறிபவர்களை வீரர்கள் என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?
6. புரூஸ் என்பவர் எவரெஸ்டு சிகரத்தின்மீது எறுவதற்குச் செய்த முயற்சிகளை எழுதுக.
7. 'ரட்லட்ஜ்' என்பவரைப்பற்றிக் குறிப்பு எழுதுக.
8. எவரெஸ்டின்மீது ஆகாய விமானத்தின் மூலம் பறந்தவர் யார் ? அவர் செய்துகொண்ட ஏற்பாடுகள் எவை ?
9. டென்சிங் இளமையில் கொண்ட எண்ணங்கள் யாவை ?
10. மனிதன் ஒரு நாள் முழுதும் தங்கி இருந்த மிக உயரமான இடம் எது ? அங்கு அவன் அடையக்கூடிய துன்பங்கள் யாவை ?
11. நேபாள அரசாங்கத்தினர் டென்சிங்கை எங்ஙனம் சிறப்பித்தனர் ?
12. இறுதியாகச் சென்ற எவரெஸ்டுக் குழுவின் தலைவர் யார் ? அதன் அங்கத்தினர்கள் யாவர் ?
13. டென்சிங்கும் ஹில்லரியும் இறுதியாக எவரெஸ்ட் சிகரத்தை வென்ற வரலாற்றைச் சுருக்கி வரைக.
14. தாங்கள் எவரெஸ்டின் உச்சியில் இருப்பதை டென்சிங்கும் ஹில்லரியும் எங்ஙனம் உணர்ந்தனர் ?
15. எவ்ரெஸ்ட் வீரர் இருவரும் எவ்வாறு பாராட்டப் பெற்றனர் ?

## மொழிப் பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—எண்ணற்றவர்கள், அருஞ் செயல், பேராவல், பற்பல, மலையன்று, வானளாவி, ஒப்புயர்வற்ற.

II. **சேர்த்தெழுதுக** :—வடக்கு + எல்லை ; வெள்ளி + அம் + கிரி ; கண்டு + அறிவது ; பனி + ஆறு ; நீண்டு + உள்ளன ; கூடாரம் + அடித்து.

III. **வாக்கியங்களில் அமைத்து எழுதுக:**—பொருட்படுத்தாது, ஒப்புயர்வற்ற, கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை, கம்பீரமான, துரும்பென மதித்து, செறிந்த, உன்னத, அடிமேல் அடிவைத்து, சுற்றுமுற்றும்.

IV. உரை - உறை; அரிய - அறிய; விரை - விறை—இவற்றினிடையே உள்ள பொருள் வேற்றுமையை அறிக.

V. ஆண்பாலுக்குப் பெண்பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும் தருக :—சிறுவன், ஒருவன், பழக்காரன், இடைச்சி, வலைஞன், தலைவி, குணவதி, பெருமான், வேலைக்காரி, எஜமானன்.

VI. **கீழ்க் கண்ட வாக்கியங்களை எதிர்மறையாக மாற்றுக :—**

1. அவர்கள் அடைந்த ஆனந்தத்தை அளவிடவும் கூடுமோ!
2. நன்கு கல்லா மாணவன் எங்ஙனம் தேர்ச்சி பெறுவான் ?
3. உண்மையும் உழைப்பும் உடையவர் வெற்றி பெறுவதில் ஐயமேது ?
4. அவன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையுண்டோ ?

VII. **இங்குத் தரப்பட்டுள்ள வினைப் பகுதிகளுடன் முக்கால இடை நிலைகளையும் சேர்த்து எழுதுக :**—மகிழ், பாராட்டு, உறங்கு, கேள், வா, கல்.

## இலக்கணம்

1. **போதல், உண்ணல், வாழ்க்கை**—இச்சொற்கள் தொழில்களின் பெயர்களாதலால் **தொழிற் பெயர்கள்** எனப்படும். இவற்றில் முறையே போ, உண், வாழ் என்னும் பகுதிகளும், தல், அல், கை என்னும் தொழிற்பெயர் விகுதிகளும் உள்ளன.

2. அவன் பிடித்த பிடி விடமாட்டான். இங்கு, பிடி என்னும் சொல் பிடித்தல் என்னும் தொழிற் பெயரின் பகுதியாகும். பகுதி மட்டுமே இங்குத் தொழிற் பெயராக வந்துள்ளது. ஆதலால் இதுபோன்ற சொற்கள் **முதனிலைத் தொழிற்பெயர்கள்** எனப்படும். (முதனிலை - பகுதி.)

(உ - ம்.) அடி அடித்தான். இடி இடித்தது.

3. இடையூறு, கேடு, சூடு—இவை முறையே இடையுறு, கெடு, சுடு என்னும் பகுதிகள் மாறுபட்டுத் (திரிந்து) தொழிற் பெயர்களாக வந்தனவாம். இவைபோன்ற சொற்கள் **முதனிலை திரிந்த தொழிற் பெயர்கள்** எனப்படும்.

(உ - ம்.) வீடு (விடு), பாடு (படு), கோள் (கொள்).

# 6. எறும்பின் வாழ்க்கை

உலகில் வாழும் வியக்கத்தக்க உயிர்களில் எறும்புகள் மிகச் சிறந்தனவாகும். எறும்புகளைக் கூர்ந்து கவனித்து ஆராய்ச்சி செய்த ஆராய்ச்சியாளர்கள் இயற்கையில் உள்ள அதிசயப் பிறவிகளில் எறும்புகளே முதன்மை யானவை என்று கூறுகின்றுர்கள். அத்தகைய சிறப்பு வாய்ந்த எறும்புகளின் வாழ்க்கை முறைகளிலிருந்து பகுத்தறிவு பெற்று விளங்கும் மானிடரும் பல அரிய உண்மைகளை அறிந்து கொள்ளலாம்.

எறும்புகள் வெப்பமுள்ள நாடுகளிலும் மித வெப்ப முள்ள நாடுகளிலும் வாழ்கின்றன. எறும்புகளில் ஏறக்குறைய இரண்டாயிரம் வகைகள் உள்ளன என்று உயிர் நூலறிஞர்கள் கூறுகின்றனர். எறும்புகள் மனிதர் களைப் போலவே சமூக வாழ்க்கையில் பற்றுக்கொண்டு கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன ; கட்டடங்களைக் கட்டிக் கொண்டு நகரங்களில் வசிக்கின்றன ; பயிர் செய்கின்றன; நம்மைப் போலவே வேலைகளைப் பங்கிட்டுக் கொண்டு செய்கின்றன ; தானியங்களைக் களஞ்சியங்களில் சேர்த்து வைக்கின்றன ; பசுக்களை வளர்த்துப் பால் கறந்து பருகு கின்றன. இவ்வளவும் எறும்புகளின் வாழ்க்கை முறைகளை நன்கு ஆராய்ந்த விஞ்ஞானிகள் அறிவித்த உண்மை களேயாம்.

எறும்புகளின் வாழ்க்கையில் வண்ணத்திப் பூச்சியின் வாழ்க்கையில் உள்ளன போலவே நான்கு பருவங்கள் உள்ளன. அவை முட்டைப் பருவம், புழுப் பருவம், கூட்டுப் புழுப் பருவம், முழு வளர்ச்சியடைந்த எறும்புப் பருவம் என்பனவாகும். எறும்பு முட்டைகளிலிருந்து ஆண் எறும்புகளும், இராணி எறும்புகளும், போர் வீரர் களாகப் பணி புரியும் எறும்புகளும், வேலைக்கார எறும்பு களும் தோன்றுகின்றன. வேலைக்கார எறும்பைத் தவிர்த்த மற்றவைகளுக்கு இறக்கைகள் உண்டு. தேனீக்களைப் போல எறும்புகளிலும் இராணி எறும்பே, எறும்புக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கின்றது.

எறும்புகள் தம் இனத்தைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக உள்ளன. அவை முட்டைகளை மிகவும் பத்திர மாகப் பாதுகாக்கும்; புற்றில் அவற்றிற்கு எத்தகைய தீங்கும் நேராதவாறு அடிப்பாகத்தில் அவற்றை வைத்துக் காத்துவரும்; மழையால் அவை நனையாதபடி நன்கு கவனித்துக் கொள்ளும். மழையால் நனைந்து விட்டால் உடனே அவற்றை வெயிலில் உலர்த்தி ஈரத்தைப் போக்கும். எவ்வளவு பசித்தாலும் எறும்புகள் தம் முட்டைகளைத் தின்னமாட்டா. வெப்பமான நாடுகளில் பதினைந்து நாட்களிலும், குளிர் நாடுகளில் நாற்பது நாட்களிலும் முட்டைகள் பொறிந்து அவற்றிலிருந்து புழுக்கள் வெளிவரும். அப்புழுக்களுக்கு எறும்புகள் தேன்போன்ற இனிய உணவை அன்புடன் ஊட்டும். சில நாட்கள் வளர்ந்தபின் அப்புழுக்கள் தம் உடம்பைச் சுற்றிக் கூட்டை வளர்த்துக் கொண்டு கூட்டுப் புழுக்களாக மாறும். கூட்டினுள் முழு வளர்ச்சி பெற்ற எறும்புகள் கூட்டைத் துளைத்துக் கொண்டு வெளிவரும்.

எறும்புகள் தங்குமிடத்தை **எறும்புப் புற்று** என்று கூறுகின்றோம். அதுவே எறும்பின் கோட்டையும் பண்டக சாலையுமாகும். புற்றமைக்கும் எறும்புகள் ஓயாமல் பாடு பட்டுக் களிமண்ணால் கோபுரம் போலப் புற்றைக் கட்டு கின்றன. அதனுள் அடுக்கடுக்காகப் பல பெரிய அறைகள் உள்ளன. இப்புற்றுக்கள் ஏறக்குறைய மூன்றடி உயரமும் பன்னிரண்டடி குறுக்களவும் உடையனவாக உள்ளன. சில வகை எறும்புகள் மணற் கற்களில் துளைத்துப் புற்றுக்களை உண்டாக்குகின்றன. பூமிக்கடியில் அமைந்த இந்த எறும்பு நகரத்திலிருந்து வெளியே செல்வதற்கு நாற்புறமும் பல வழிகள் உள்ளன. சில இடங்களில் மலைத்தொடர்களின் பக்கங்களில் பல ஏக்கர் பரப்புள்ள எறும்புப் புற்றுக்கள் உள்ளனவாம். சில புற்றுக்களில் ஐம்பதுக்கும் மேற்பட்ட அடுக்குகள் உள்ளனவாம். இத்தகைய புற்றுக்களில் இருநூறு எறும்புக் கூட்டங்கள் வசிக்க முடியும். ஒவ்வொரு கூட்டத்திலும் ஐயாயிரம் முதல் ஐந்நூறுயிரம் எறும்புகள் வரை வசிக்கலாம்

என்றால் அந்த எறும்பு நகரம் எவ்வளவு பெரிதாக இருக்கும் என்று நினைத்துப் பாருங்கள்!

மனிதரைப் போலவே எறும்புகளுக்கும் உணர்ச்சிகள் உண்டு. மனிதர்கள் உறவினரிடம் அன்பு பாராட்டி மகிழ்வதும் பகைவரிடம் வெறுப்புக் காட்டித் துன்புறுத்துவதும் போல எறும்புகளும் செய்கின்றன. ஓர் எறும்பை நாம் நீண்ட நாள் பிடித்து வைத்திருந்து பிறகு விட்டு விட்டால் அது நேராகத் தன் புற்றுக்குத் திரும்பிச் செல்லும். வீடு திரும்பிய எறும்பை மற்ற எறும்புகள் அடையாளமறிந்து வரவேற்று மகிழுமாம். இச்செய்கையால் எறும்புகளின் நட்பின் பெருமையும் நினைவாற்றலும் நன்கு விளங்குகின்றன அன்றோ? வேற்றூர் எறும்புகள் வந்தால் எறும்புகள் அவற்றுடன் கடும்போர் புரியுமாம். ஒவ்வோர் எறும்புக் கூட்டத்திலும் இரும்புக் கவசம் போன்ற தொன்றைத் தலையில் கொண்ட வலிமையான எறும்புகளைக் கொண்ட இராணுவப் படை ஒன்று உண்டு.

எறும்புகள் தங்களுக்குரிய வேலைகளைத் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டு ஒற்றுமையாகவும் பொறுப்புடனும் செய்து முடிக்கின்றன. புற்றுக்களை அமைக்கும் எறும்புகள் கொல்லர்களைப் போலக் களிமண்ணை ஈரமாக்கிப் பிசைந்து செங்கற்களைப் போலச் செய்து சுவர்களைக் கட்டுகின்றனவாம். சில எறும்புகள் மண்ணை வெட்டி ஆழமாகச் செய்யும். மற்றும் சில எறும்புகள் சில இலைகளைக் கொணர்ந்து கூரைகளை வேயும். எறும்புகள் இங்ஙனம் வேலை செய்யும்போது அவற்றிற்குப் பகைவரால் தீங்கு நேராவண்ணம் போர்வீரர்களாகிய எறும்புகள் காவல் புரியும்.

வேலைக்கார எறும்புகள் தந்நலம் கருதாமல் தம் சமூகத்திற்கு உழைக்கின்றன. அவை மிக உயரமான மரங்களில் ஏறி இலைகளைப் பறித்துக் கீழே போடும். கீழேயுள்ள வேறு சில எறும்புகள் அவற்றை எடுத்துக்கொண்டு புற்றுக்குச் செல்லும். எறும்புகள் இலைகளை நுனியைப் பிடித்து இழுத்துக்கொண்டு போவது அவை வெயிலுக்குக்

குடை பிடித்துப் போவது போன்று இருக்கும். அவை புற்றை அடைந்தவுடன் அங்குள்ள மற்ற எறும்புகள் அவற்றை வாங்கி உள்ளே கொண்டு சேர்க்குமாம். வேலைக் கார எறும்புகளே தமக்கும் தம் கூட்டத்திற்கும் வேண்டிய உணவைச் சேகரிக்கும்; நெடுந்தூரங்களிலிருந்து உணவுப் பொருள்களை எடுத்துச் சென்று புற்றில் சேர்க்கும்.

எறும்புகள் மோப்ப சக்தி மிகுதியாக உடையனவாகும். நல்ல சுவையான பண்டங்களை நாம் எங்கே வைத்தாலும் அவற்றை அறிந்து வந்து அவை கவர்ந்து செல்கின்றன அன்றோ? எறும்புகள் எப்போதும் கூட்டமாகவே சென்று இரை தேடும். எறும்புப் புற்றில் பல நாட்களுக்கு வேண்டிய உணவு சேமித்து வைக்கப்பட்டிருக்கும். எறும்புகள் இவ்வாறு சேமித்து வைக்கும் உணவைக் கரடிகள் புற்றில் கைவிட்டு எடுத்து உண்ணும் என்று சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது.

எறும்புகளின் நுண்ணறிவை விளக்கும் நிகழ்ச்சி ஒன்றை நாம் சாதாரணமாகக் காணலாம். மழை வருவதை முன்னமே அறிந்து அவை தம் முட்டைகளையும் உணவுப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு வரிசை வரிசையாக மேட்டு நிலங்களை நோக்கிச் செல்லும். மழை நீரால் பள்ளத்தில் இருக்கும் தம் புற்றுக்களில் நீர் தேங்கி அழித்துவிடும் என்று அறிந்தே அவை வருமுன் காக்கும் குணமுடையனவாய் அவ்வாறு செய்கின்றன. இங்ஙனம் மழை வருவதை முன்னெச்சரிக்கையுடன் அறிந்துகொள்ளும் எறும்பின் உயர்ந்த அறிவை என்னென்று புகழ்வது! இதனாலேயே நம் முன்னோர்கள் 'எறும்புகள் முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்யும்' என்று நம்பி வந்தனர்.

கீழே ஒரு துளி தேன் சிந்திவிட்டால் அதில் எறும்புகள் மொய்ப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? பொதுவாக இனிப்பான பொருள்களை உண்பதில் எறும்புகளுக்கு விருப்பம் அதிகம். அதிலும் தேன்தான் அவற்றிற்கு மிகவும் விருப்பமான உணவு. எறும்புகள் தம் புற்றில் ஒரு

வகைப் பூச்சியை வளர்க்கின்றன. அது தேனைச் சேக ரித்துத் தன் உடலில் வைத்துக் கொள்ளும். எறும்புகள் அப்பூச்சிகளின் உடலிலிருந்து மெதுவாகத் தேனைப் பருகும். இப்பூச்சிகளை எறும்புகளின் பசுக்கள் என்று கூறுகின்றனர். மக்களைப் போல் பசுக்களை வளர்த்துத் தேன் பருகும் எறும்புகளின் நுண்ணறிவு பாராட்டத்தக்க தன்றோ ?

எறும்புகளில் தேன் எறும்புகள் என்று ஒருவகை உள்ளது. அவ்வெறும்புகள் தேனைக் குடித்து உடம்பில் உள்ள பையில் நிரப்பிக்கொண்டு அசைவற்றுக் கிடக்கும். உணவு கிடைக்காத பஞ்சகாலங்களில் எறும்புகள் அவற் றைக் கடித்துத் தேனை உறிஞ்சி உண்டு உயிர்வாழும். தம் இனத்திற்காகத் தம் உயிரையே வழங்க முன்வந்த இவ்வெறும்புகளின் தியாக உணர்ச்சியை என்னென்று புகழ்வது !

அறுவடை செய்யும் எறும்புகள் என்று ஒருவகை எறும்புகள் உள்ளன. அவை வயல்களிலுள்ள தானியங் களைப் பொறுக்கிக் கொண்டுவந்து புற்றில் சேர்த்து வைக் கும் ; மழையால் அவை நனைந்து முளைத்துப் போகாத வாறு அடிக்கடி வெயிலில் உலர்த்திப் பாதுகாக்கும். சில சமயங்களில் அவை அத்தானியங்களைப் புற்றின் வாயிலில் மேடாக அமைத்து வைக்கும். மழை நீரால் அத்தானி யங்கள் முளைத்து வளரும். இதனையே ஆராய்ச்சியாளர்கள் எறும்புகள் பயிர் செய்வதாகக் கூறுகின்றனர். அச் செடிகள், பகைவர்களுக்குத் தெரியாமல் புற்றைக் காக்க வும் உதவுகின்றன.

எறும்புகள் மிகச் சிறியனவேனும் ஆயிரக்கணக் கானவை ஒன்று சேர்ந்து விட்டால் மக்களும் அவற்றைக் கண்டு அஞ்சுவார்களாம். ஆப்பிரிக்காக் கண்டத்தில் '**விரட்டும் எறும்புகள்**' என்று ஒருவகை எறும்புகள் வாழ்கின்றன. ஆயிரக்கணக்கில் இவை படையெடுத்து வந்தால் கிராமங்களில் உள்ள மக்கள் தங்கள் வீடு வாசல் களை விட்டு ஓடி விடுவார்களாம்; அவை அகன்ற பின் னரே திரும்ப வருவார்களாம். இவ்வெறும்புகள் சிலந்தி,

ஈ, கோழி, எலி, பன்றி முதலியவற்றையும் கொன்று தின்று விடுமாம். மிகப் பெரிய யானையின் துதிக்கையில் எறும்புகள் கூட்டமாகப் புகுந்து குடைந்து அதனையும் சில சமயங்களில் கொன்றுவிடுமாம்! நெருப்பிலும் அஞ்சாமல் புகுந்து, அதையும் அணைக்குமாம்; ஆற்று வெள்ளத்திலும் துணிவுடன் புகுந்து அதன்மீது மிதந்து பெரிய பாலம் அமைத்து ஆற்றைக் கடக்குமாம். எறும்பின் வீரச் செயல்கள் நமக்கு வியப்பூட்டுகின்றன அன்றோ?

இவ்வாறு பல தொழில்களையும் அரிய வீரச் செயல்களையும் புரியும் எறும்புகள் மனிதர்களைப் போலப் பற்பல கருவிகளைக் கொண்டுள்ளனவா? இல்லையே. அவற்றின் உருவ அமைப்பைச் சற்றுக் கவனியுங்கள். எறும்பின் உடம்பில் தலை, மார்பு, வயிறு என்று மூன்று பிரிவுகள் அமைந்துள்ளன. அதன் தலையில் இரு கண்களும் உறுதியான தாடைகளும் உள்ளன. தலையின் முன்புறத்தில் சிறு விரல் போன்ற ஒருவகைக் கருவி உள்ளது. இது மிக நுட்பமான உணர்ச்சியுடையது. இவ்வுறுப்பாலேயே எறும்புகள் ஒன்றோடொன்று பேசுகின்றனவாம். போர் செய்வதற்குப் பயன்படும் வகையில் எறும்புகளுக்கு விஷத் தன்மையுடைய கொடுக்குகள் உள்ளன. சில எறும்புகளுக்கு விஷம் நிறைந்த பைகள் உள்ளன. எறும்புகள் தாடைகளால் கடித்துப் பகைவர் உடலில் விஷத்தைச் செலுத்தும். மற்றும் சில எறும்புகள் விஷவாயுவை வெளிப்படுத்துகின்றனவாம். எறும்புகளின் தாடைகள் மிகவும் உறுதியாக அமைந்திருப்பதால் நோய்கண்ட எறும்புகளையும் முட்டைகளையும் உணவுப் பொருள்களையும் தூக்கிச் செல்ல உதவுகின்றன.

இதுவரை கூறியவற்றிலிருந்து எறும்புகளின் வாழ்க்கை முறை, ஊக்கம், உழைப்பு, தந்நலமற்ற தியாக வாழ்வு, வீரம், நுண்ணறிவு போன்ற பல அரிய குணங்களை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். இளைஞர்களே! எறும்பினிடம் காணப்படும் இவ்வுயர் குணங்கள் மக்கள் வாழ்க்கைக்கும் அவசியமன்றோ? ஆதலால் நீங்கள்

எறும்பைப்போலச் சுறுசுறுப்பும் ஓயா உழைப்பும் நுண்ணறிவும் உடையவர்களாய் வாழ முயல்வீர்களாக.

### அருஞ்சொல் விளக்கம்

பகுத்தறிவு - நல்லது கெட்டது என்பதைப் பிரித்தறியும் அறிவு; உயிர் நூலறிஞர் - பிராணிகளைப்பற்றி ஆராய்ந்த அறிவுடையோர்; சமூக வாழ்க்கை - கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து வாழும் வாழ்க்கை; கொல்லர் - வீடு கட்டுபவர்; பண்டகசாலை - பொருள் வைக்குமிடம்; மோப்ப சக்தி - முகர்ந்து பார்த்து அறியும் திறமை.

### வினாக்கள்

1. எறும்புகளின் வாழ்க்கை முறைபற்றி உயிர் நூலறிஞர்கள் கூறுவது யாது?
2. எறும்புகளின் நான்கு பருவங்கள் எவை? அவை எவ்வாறு வளர்ச்சி யடைகின்றன?
3. எறும்புப் புற்றுக்கள் எவ்வாறு அமைக்கப்படுகின்றன?
4. மனிதர்களைப் போல எறும்புகளிடம் காணப்படும் குணங்கள் எவை?
5. எறும்புகளிடம் உள்ள ஒற்றுமை, உழைப்பு, தியாகம் இவைகளை விளக்க உதாரணங்கள் தருக.
6. வருமுன் காக்கும் நுண்ணறிவு எறும்புகளிடம் அமைந்துள்ளதை நாம் எங்ஙனம் அறியலாம்?
7. எறும்பின் வாழ்க்கையில் உமக்கு அதிசயந் தரும் இரண்டு செய்திகளைக் குறிப்பிடுக.
8. எறும்புகளின் வீரத்தை விளக்கும் செய்திகள் எவை?
9. எறும்பின் உடலமைப்பைப் பற்றி விளக்கி எழுதுக.
10. எறும்பின் வாழ்க்கையிலிருந்து நாம் அறியத்தகும் உண்மைகள் எவை?

### மொழிப் பயிற்சி

I. **பிரித்து எழுதுக:**—புற்றமைக்கும், நாற்புறம், பூமிக்கடியில், தந்நலம், நுண்ணறிவு, முன்னெச்சரிக்கை, அசைவற்று.

II. **சொந்த வாக்கியங்களிற் பயன் படுத்துக:**—கூர்ந்து கவனித்து, இன்றியமையாதது, ஏறக்குறைய, சமூக வாழ்க்கை, களஞ்சியம், அடுக்கடுக்காக, வரிசை வரிசையாக, முன்னெச்சரிக்கை.

III. படிப்படியாக, அடிக்கடி இத்தொடர்களில் ஒரே சொல் இரண்டாகச் சேர்ந்து வந்து 'முறையே' 'பலமுறை' என்ற பொருள்களில் வந்துள்ளமை அறிக. இவை போல வேறு சில தொடர்களைக் கூறுக.

IV. 1. எறும்பு நகரத்திற்கு நாற்புறமும் வழிகள் உள்ளன.

2. மழைக்காலம் வருவதை உணர்ந்து அவை தம் முட்டைகளை மேட்டு நிலத்திற்கு எடுத்துச் செல்லும்.

இவ்வாக்கியங்களில் அமைந்த எழுவாய், பயனிலைகளை எடுத்தெழுதுக.

V. 'எறும்புகளின் சமூக வாழ்க்கை' என்பது பற்றி இருபது வரிகளில் கட்டுரை எழுதிப் பழகுக.

## இலக்கணம்

நேற்று வந்தவன் இன்று பேசினான். இவ்வாக்கியத்தில் வந்தவன் என்னும் சொல் வருதலாகிய தொழிலைச் செய்தவனைக் குறிக்கிறது. இங்ஙனம் ஒரு வினையைச் செய்தமையால் ஒரு பொருளுக்கு வழங்கும் பெயர் வினையாலணையும் பெயர் எனப்படும்.

வினையாலணையும் பெயர் முக்காலங்களிலும், மூவிடங்களிலும் வரும்.

| இடம் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| தன்மை ஒருமை | வந்தேனை | வருகின்றேனை | வருவேனை |
| ,, பன்மை | வந்தேமை | வருகின்றேமை | வருவேமை |
| முன்னிலை ஒருமை | உண்டாய்க்கு | உண்கின்றாய்க்கு | உண்பாய்க்கு |
| ,, பன்மை | உண்டீர்க்கு | உண்கின்றீர்க்கு | உண்பீர்க்கு |
| படர்க்கை ஆண்பால் | கண்டானுக்கு | காண்கின்றானுக்கு | காண்பானுக்கு |
| ,, பெண்பால் | பாடினாளை | பாடுகின்றாளை | பாடுவாளை |
| ,, பலர்பால் | படித்தாரது | படிக்கின்றாரது | படிப்பாரது |
| ,, ஒன்றன்பால் | ஓடியதை | ஓடுகின்றதை | ஓடுவதை |
| ,, பலவின்பால் | நின்றவற்றை | நிற்கின்றவற்றை | நிற்பவற்றை |

இவ்வாறு செல், நட என்னும் பகுதிகளைக் கொண்டு வரும் மூவிட வினையாலணையும் பெயர்களை எழுதுக.



## 7. இத்தாலி நாட்டின் இணையற்ற வீரர்

சுதந்திரம் மனிதனது பிறப்புரிமை. அதனை அடையப் பலர் தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் வழங்கியுள்ளனர். ஒவ்வொரு நாட்டிலும் தம் நலம் கருதாத பெரியோர்கள் பலர் தோன்றி எண்ணற்ற இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் தம் உயிரையே பணயமாக வைத்து விடுதலைப் போரை நடத்தி வெற்றி கண்டனர். அத்தகைய விடுதலை வீரர்களில் இத்தாலி நாட்டின் விடுதலைக்குக் காரணமாக விளங்கிய ஜோசப் கரிபால்டி அவர்கள் முதன்மையாகக் குறிப்பிடத் தக்கவராவர்.

ஜோசப் கரிபால்டி இத்தாலி நாட்டைச் சேர்ந்த **நைஸ்** என்னும் ஊரில் **தோமினிக் கரிபால்டி** என்பவருக்கும் **ரோசா ரெய்மாண்டி** என்ற அம்மையாருக்கும் 1807-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 4-ஆம் நாள் பிறந்தார். அவர் தந்தையார் மிக்க எளிய வாழ்க்கை நடத்தியவர். கப்பலோட்டுவது அவர் தொழில். அவர் தம்முடைய மகன் உயரிய கல்வி கற்றுச் சிறந்த பதவி வகிக்க

வேண்டுமென்று விரும்பினர். ஆனால் கரிபால்டியோ இளமையில் கல்வியில் கருத்தற்றவராய் இருந்தார். ஏதாவது ஒரு வீரச்செயலைச் செய்வதையே அவர் மனம் நாடியது.

கரிபால்டி சிறிது வளர்ச்சி அடைந்து வாலிபப் பருவம் எய்தியதும் அவர் மனம் கப்பலோட்டும் தொழிலைப் பெரிதும் விரும்பியது. அவர் அடிக்கடி கடற்கரை சென்று அங்குத் தங்கியிருக்கும் பலநாட்டுக் கப்பலோட்டிகளுடன் பேசி மகிழ்வார்; அவர்கள் கூறும் கதைகளைக் கேட்பார்; அவர்கள் பாடும் பாடல்களைத் தாமும் பாடுவார். இங்ஙனமெல்லாம் அவர் மனம் புதுமையையே விரும்பியதால் பள்ளிப் படிப்பு அவருக்குச் சுவையற்றதாகிவிட்டது. ஆகையால் அவர் பள்ளிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டு ஜினேவாவுக்குச் சென்று சுதந்திரமாக ஏதாவது தொழில் செய்து வாழவேண்டுமென்று விரும்பினர்.

ஒரு நாள் கரிபால்டி தமக்கு உற்ற நண்பர்கள் சிலருடன் ஒருவருக்கும் தெரியாமல் ஒரு படகில் உணவுப் பொருள்களையும் தூண்டில்களையும் ஏற்றிக் கொண்டு ஜினேவாவுக்குப் புறப்பட்டார். அவர்கள் படகு சிறிது தூரம் சென்றவுடன் பின்னால் ஒரு படகு துரத்திக் கொண்டு வருவதை உணர்ந்தனர். அவர்கள் எவ்வளவு விரைவாகப் படகைச் செலுத்தியும் பின்னால் வந்த படகு அவர்களுக்கு முன் சென்று அவர்களைத் தடுத்து நிறுத்தியது. அவர்கள் மீண்டும் தம்மூர் திரும்ப நேர்ந்தது. கரிபால்டியின் தந்தையாரே அங்ஙனம் சிலரை அனுப்பி அவரை ஊர் திரும்பச் செய்தனர் என்பதை அவர் உணர்ந்தார்.

கரிபால்டியின் கருத்து நிறைவேறவில்லை. எனினும் அந்நிகழ்ச்சி அவருடைய தந்தையார் தம் மகனின் மனநிலையை உணர்ந்து கொள்வதற்கு மிகவும் பயன்பட்டது. கரிபால்டியின் தந்தையார் அன்று முதல் அவரைத் தமது கப்பலில் வேலை செய்யும் பணியாளர்களில் ஒருவராக வைத்துக் கொண்டார். அதனால் கரிபால்டி அடைந்த

மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர் தம் தந்தையாருடன் கப்பலில் பல நகரங்கட்குச் சென்று அங்குள்ள பற்பல காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தார். ஒரு முறை அவர் புகழ்பெற்ற **ரோமாபுரிக்குச்** சென்றிருந்தபோது, ஒரு காலத்தில் உலகிற்கே நாகரிகத்தை வழங்கிய அந் நாட்டு மக்கள் உரிமையற்ற அடிமைகளாய்ச் சுயநல வேட்கை கொண்ட கொடுங்கோல் மன்னருடைய ஆட்சியின்கீழ் அல்லல் உறுவதைக் கண்டு உள்ளம் துடித்தார். அவ்வுணர்ச்சியே இத்தாலி நாட்டின் விடுதலைப் போருக்கு விதையாயிற்று.

அக்காலத்தில் இத்தாலி பல சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு அரசர் பலரால் ஆளப்பட்டு வந்தது. அவர்களாட்சியில் மக்கள் சொல்லொணுத் துன்பமுற்று வாடினர். எத்தனை நாளைக்குத்தான் இக்கொடுமையைப் பொறுக்க இயலும்! உரிமை வேட்கையும் தன்மான உணர்ச்சியும் கொண்ட வீரர் சிலர் வீறுகொண்டெழுந்தனர். அவர்களில் **மாஜினி** என்பவர் சிறப்பாகக் குறிக்கத் தக்கவராவர்.

மாஜினி மக்களிடையே உரிமை உணர்ச்சியைப் பரப்ப அரும்பாடு பட்டார். அதனுல் அவர் பல முறை தண்டிக்கப்பட்டுப் பெருந்துன்பத்திற்கு ஆளானுர். இறுதியாக அவர் நாடுகடத்தவும் பட்டார். நாடுகடத்தப்பட்ட மாஜினி பிரான்ஸுக்குச் சென்று வாழ்ந்து வந்தார். அங்கும் அவர் வாளா இராமல் இத்தாலிய நாட்டு மக்களின் உள்ளத்தில் உரிமைக்கனலை வளர்க்கப் பெருந்தொண்டு செய்தார்; ‘இள இத்தாலி’ என்னும் இயக்கத்தை அங்கிருந்தே நடத்திஞர்; உரிமை உணர்ச்சி ஊட்டும் பல நூல்களை வெளியிட்டார்; செய்தித்தாள்களில் பல கட்டுரைகள் எழுதிஞர். கரிபால்டி மாஜினியின் நூல்களையும் கட்டுரைகளையும் படித்து அவரிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டார். அவர் உள்ளம் விடுதலைப் போரில் ஈடுபடத் துடித்தது. ஒரு சமயம் கரிபால்டி, மார்சேல்ஸ் என்னும் ஊருக்குச் சென்றிருந்தபோது மாஜினி அங்குத் தங்கியிருப்பதாக அறிந்து அவரைச் சென்று கண்டார்; பெருமகிழ்ச்சி கொண்டார்.

மாஜினியின் கொள்கைகள் கரிபால்டியின் உள்ளத்தைக் கவர்ந்தமையால் அவர் நடத்திய இளை இத்தாலி இயக்கத்தில் கரிபால்டி ஓர் உறுப்பினரானார்; நாட்டு விடுதலைப் போருக்குத் தம் உயிரையும் வழங்குவதாகத் தம் இரத்தத்தால் எழுதிக் கொடுத்தார்.

அச்சமயம் இத்தாலியின் ஒரு பிரிவாகிய **சவாய்** நாட்டில் ஓர் உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டது. மாஜினி அக்கலகத்தை உரிமைப் போருக்குப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தார். அவருக்குத் தக்க சமயத்தில் உதவி செய்வதாகச் சில கப்பற்படைத் தலைவர்கள் உறுதியளித்திருந்தனர். அவர்களோடு கடல் வழியாக வந்து சவாய் நாட்டைத் தாக்குமாறு மாஜினி கரிபால்டிக்குக் கட்டளையிட்டுச் சில தொண்டர்களுடன் தரை வழியாகச் சவாய் நாட்டை அடைந்தார். ஆனால் உதவுவதாக வாக்களித்த கப்பற்படைத் தலைவர்கள் உதவி செய்யாமையாலும் மாஜினி எதிர்பார்த்தபடி உள்நாட்டு மக்கள் அவர்கட்கு உதவ முன்வராமையாலும் அவர்கள் தோல்வியுற நேர்ந்தது. தோல்வியுற்ற இருவரும் அந்நாட்டைவிட்டே மறைந்தனர். கரிபால்டி குடியானவனைப்போல் மாறு வேடம் பூண்டு தென் அமெரிக்காவை அடைந்தார்.

அச்சமயத்தில் தென் அமெரிக்காவில் ஒரு போர் தொடங்கியது. அப்பொழுதுதான் சுதந்திரம் பெற்ற ரியோ சிரண்டிடுசுல் என்னும் நாட்டின்மீது பிரேஸில் என்னும் பலம் பொருந்திய மற்றொரு நாடு போர் தொடுத்தது. அப்பொழுது விடுதலை வேட்கை கொண்ட கரிபால்டி பிரேஸில் நாட்டின் கொடுங்கோன்மையை எதிர்த்துப் போர் புரியும் மக்களுக்கு உதவி புரிய விரும்பினார். அவர் ஒரு பெரும்படையையே திரட்டினார். அப்படையில் விடுதலை உணர்ச்சி கொண்ட பல நாட்டு வாலிபர்களும் கலந்து வீரப்போர் புரிந்தனர். தென்னமெரிக்கப் போரில் கரிபால்டி செய்த வீரப்போர் உலகப் புகழ்பெற்றதாகும். எத்தனையோ முறை அவர் காலன் வாயினின்றும் தப்பினார்; குண்டடிபட்டுக் குருதி சிந்தினார்.

ஒரு முறை அவர் 'லகுண' என்ற நகரில் போர் புரிந்தபோது அனிதா என்னும் அருங்குண நங்கை யாரைக் கண்டு அவரைத் தம் வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டார். அனிதா அம்மையார் கணவருக்கேற்ற கற்புடைய நங்கையாய் விளங்கினர்; கணவரைப் போலவே அஞ்சா நெஞ்சமும் வீர உணர்ச்சியும் வாய்க்கப் பெற்ற வராய்த் திகழ்ந்தார். ஒரு முறை அவர் போரில் பகைவரால் சிறை செய்யப் பெற்றுர். அப்போது அவ்வம்மை யார் கருவுற்றிருந்தார். எனினும் அவர் தந்திரமாகச் சிறையிலிருந்து தப்பி ஒரே இரவில் அறுபது கல் தொலைவு குதிரைச் சவாரி செய்து ஒரு மலைக் குகையில் தம் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்த தம் கணவரை அடைந்தார். என்னே அவர் வீரம்! மலைக்குகையை அடைந்த அனிதா அம்மையார் ஓர் அழகிய ஆண் குழந்தையைப் பெற்றுர். அக்குழந்தையைச் சீராட்டித் தாலாட்டக்கூட நேரமில்லை. அதற்குள் பகைவர்கள் அவரைத் தேடிவருவதறிந்து இருவரும் எங்கோ மறைந்தனர். அவர்கள் சென்ற இடத்தை ஒருவரும் உணர்ந்து கொள்ள முடியவில்லை. பல நாட்கள் கழித்துக் கரிபால்டி உருக்வே என்னும் நாட்டில் வாணிகம் செய்து பிழைப்பதாகத் தெரிந்தது.

கரிபால்டி இங்ஙனம் எல்லையிலாத் துன்பங்களால் வருந்தினுலும் உறுதி குன்றினரிலர். சுடச்சுடரும் பொன் போல் அவர் உறுதி மேலும் வலுப்பெற்றது. அவர் புகழொளி உலகம் முழுதும் பரவத் தொடங்கியது. அவர் தென்னமெரிக்காவில் ஆற்றிய வீரச்செயல்கள்—உரிமைப் போர்கள்—உலக மக்களனைவருடைய உள்ளங்களையும் கவர்ந்தன. அப்போது இலண்டனில் வாழ்ந்து வந்த மாஜினி கரிபால்டியின் வீரச்செயல்களைப் பாராட்டிப் பல செய்தித் தாள்களில் எழுதினர். இவற்றையெல்லாம் படித்தறிந்த இத்தாலிய மக்கள் உள்ளத்தில் உரிமை உணர்ச்சி மூண்டெழுந்தது. இத்தாலி நாட்டு இளைஞர்கள் கரிபால்டியின் திருவுருவப் படத்தைத் தெய்வமாக எண்ணி வழிபடலாயினர். இச்சூழ்நிலையை அறிந்த சிலர் விரைந்து வந்து சுதந்திரப் போரை முன்னின்று நடத்து

மாறு கரிபால்டிக்குக் கடிதங்கள் எழுதினர். கரிபால்டிக்கு இதனினும் மகிழ்ச்சியளிக்கும் செய்தி வேறு உண்டோ?

அச்சமயத்தில் இத்தாலியின் ஒரு பிரிவையாண்ட **பியஸ்** என்ற மன்னர் தம் நாட்டு மக்களுக்குக் குடியாட்சி வழங்க முன் வந்தார். அச்செய்தியை அறிந்த கரிபால்டி குடியாட்சி பெறும் நாட்டிற்குப் பகைவர்களால் தீங்கு நேராதவாறு தடுக்க விரும்பினர். அதனல் அவர் தம் குடும்பத்துடன் பன்னிரண்டு ஆண்டு கழித்து மீண்டும் தம் தாய்நாடு திரும்பினர். அவர் நைஸ் துறைமுகத்தில் வந்திறங்கியபோது அவர் கண்ட காட்சி அவரைப் பூரிக்கச் செய்தது. பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடி அவரை மகிழ்ச்சியோடு வரவேற்றனர். ஆயிரக்கணக்கான இளைஞர்கள் அவர் படையில் சேர விரும்பினர். பெரும்படை திரண்டது. ஆனல் கரிபால்டி எதிர்பார்த்ததற்கு மாருகக் குடியாட்சி என்ற பெயரால் மக்கள் விரும்பாத சிலரிடம் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டதனல் அரசாங்கத்தையே எதிர்த்துப் போரிட வேண்டிய நிலை ஏற்பட்டது. கரிபால்டியின் படை ரோம் நகரை மூன்று மாதங்கள் முற்றுகையிட்டிருந்தது. அப்படையின் வீரத்தை என்னென்று புகழ்வது? எதிர்பாராத வகையில் பிரான்ஸிலிருந்தும் நேபிள்ஸிலிருந்தும் படைகள் வந்து கரிபால்டியின் படையை நாற்புறமும் சூழ்ந்து தாக்கவே கரிபால்டி இம்முறையும் தோல்வியடைந்தார். அதனல் கரிபால்டி தம் மனைவியுடனும் எஞ்சிய வீரர்களுடனும் நள்ளிரவில் இரகசியமாக ரோம் நகரை விட்டு வெளியேறினர்.

பகைவர்கள் இவர்களை நாற்புறமும் தேடித்திரியலாயினர். கரிபால்டியும் அவர் தோழர்களும் பகலில் மலைகளிலும் குகைகளிலும் மறைந்து கிடப்பர்; இரவானல் வழி நடப்பர். வழியில் பசியாலும் குளிராலும் பலர் இறந்து விட்டனர். அதனல் கரிபால்டி மற்றவர்களைத் தத்தம் இடம் செல்லுமாறு அனுப்பிவிட்டுத் தம் மனைவியுடன் வெனிஸ் நகரம் நோக்கிச் சென்ருர். வழியில் அனிதா அம்மையாரும் நோய்வாய்ப்பட்டார். அம்மையாரை மெல்ல

நடத்திச் சென்றூர் கரிபால்டி; முடியாத சமயங்களில் தம் தோளில் தூக்கிச் சென்றூர். எனினும் கரிபால்டியின் அன்பின் நிலைக்களமாக—உணர்ச்சியின் உருவமாக—துன்பமயமான அவருடைய இருண்ட வாழ்க்கையில் இன்ப ஒளி காட்டும் விளக்காக விளங்கிய அவ்வம்மையார் அவரை விட்டு இவ்வுலக வாழ்வை நீத்தனர். அந்தோ! கரிபால்டி அப்போது அடைந்த துன்பத்தைக் கூறவும் முடியுமோ? கரிபால்டிக்குக் கண்ணீர் விட்டழவும் நேரமில்லை. பகைவர் தம்மைத் தேடி வருவதறிந்த அவர் தம் வாழ்க்கைத் துணைவியின் உடலை ஓர் ஏழையிடம் கொடுத்துப் புதைக்குமாறு சொல்லிவிட்டு எங்கோ மறைந்து விட்டார்.

கரிபால்டி சில ஆண்டுகளுக்குப் பின் இத்தாலிக்கு மேற்கில் உள்ள கேப்ரீரா தீவை யடைந்து அங்கு உழவுத் தொழில் புரிந்து வாழ்ந்து வந்தார். கரிபால்டி அங்கு வாழ்ந்தபோது அவர் மூட்டிய விடுதலை உணர்ச்சி இத்தாலிய மக்களின் உள்ளத்தில் உரிமைக் கனலை வளர்த்தது. எந்த நேரத்திலும் அவர்களுடைய உணர்ச்சி வெள்ளம் கரைபுரண்டு ஓடலாம் என்பதை அறிந்த இத்தாலியின் ஒரு பகுதியை ஆண்ட விக்டர் இம்மானுவேல் என்னும் அரசர் தம் நாட்டில் குடியரசை ஏற்படுத்திஞர். அவரைப் பின்பற்றி மற்றும் சில மன்னர்களும் தத்தம் நாட்டில் குடியரசை ஏற்படுத்தினர். ரோம், நேபிள்ஸ், சிஸிலி நாடுகள் மட்டும் குடியாட்சி தர மறுத்து மக்களை அடக்கி ஒடுக்கி வந்தன. அடக்குமுறை வலுக்கவே மக்களின் உணர்ச்சி எரிமலை வெடிக்கத் தொடங்கியது. கேப்ரீரா தீவில் 'என்று தணியுமிந்த சுதந்திர தாகம்' என்று விடுதலைக் கனவு கண்டுகொண்டு காலம் கழித்து வந்த கரிபால்டிக்குச் செய்தி பறந்தது. கரிபால்டி மக்கள் உணர்ச்சியின் உச்ச நிலையறிந்து இதுவே தக்க சமயம் என்றுணர்ந்து விரைந்து வந்து உரிமைப் படையின் தலைமையை ஏற்றுக் கொண்டார். இருபதிஞயிரத்துக்கும் மேற்பட்ட இளங்காளைகள்—உரிமைப் பண் பாடும் ஒப்பற்ற வீரர்கள்-கரிபால்டியின் தலைமையில்

திரண்டனர். போராட்டம் உச்சநிலையை அடைந்தது. உரிமைக்காக உயிரையே வழங்கும் உணர்ச்சி கொண்ட அவ்விடுதலை வீரர்களை எப்படைதான் வெல்ல இயலும்! கரிபால்டியின் உரிமைப்படை சிஸிலிப் படையை வென்றது. அதனல் அந்நாட்டில் முடியாட்சி ஒழிந்தது. குடியாட்சி மலர்ந்தது.

கரிபால்டியின் புகழ் உலகமெங்கும் பரவியது. விடுதலை அளித்த வீரர் என்று இத்தாலியர் அவரைப் பாராட்டினர். அவர் சென்ற இடமெல்லாம் மக்கள் திரள் திரளாகக் கூடி அவரை மகிழ்ச்சிப் பெருக்கோடு வரவேற்றனர்; அவரைத் தம் தெய்வமாகவே எண்ணி வழிபட்டனர். கரிபால்டி நினைத்திருந்தால் அவர் இத்தாலிய நாட்டின் சர்வாதிகாரியாக விளங்கியிருக்கலாம். தந்நலம் கருதாத் தகைசால் பெரியாரான அவர், விக்டர் இம்மானுவேல் என்பவரிடமே விடுதலை பெற்ற இந்நாடுகளின் அரசியல் பொறுப்பையும் ஒப்புவித்துத் தாம் முன்போல் கேப்ரீரா தீவையடைந்து அமைதியான வாழ்வை மேற்கொண்டார்.

பல பிரிவுகளாக இருந்த இத்தாலி நாடு முழுவதும் ஒன்ருக்கப்பட்டு விக்டர் இம்மானுவேல் தலைமையில் குடியாட்சி முறையில் ஆளப்பட்டது. நாட்டு மக்கள் நல்வாழ்வுக்கான பல நல்ல திட்டங்கள் ஏற்பட்டன. மக்கள் உரிமைபெற்ற தம் தாய்த்திரு நாட்டில் கவலையற்ற வாழ்வு வாழத் தொடங்கினர். இங்ஙனம் இத்தாலிய மக்களின் நல்வாழ்விற்குக் காரணமாக விளங்கிய வீரர் கரிபால்டிக்கு இத்தாலிய அரசாங்கம் அன்பளிப்பாக ஒரு பெருந்தொகையும் ஆண்டு தோறும் உபகாரச் சம்பளமும் அளிக்க முன் வந்தது. கரிபால்டி பொன்னுக்கும் புகழுக்குமா உழைத்தார்? உரிமை உணர்ச்சி என்பது அவர் உடலில் ஓடிய ரத்தமன்ருே? விடுதலை என்பது அவர் கண்ட நீண்டகாலக் கனவன்ருே? அக்கனவு நனவாயினமையே அவருக்குப் பெருமகிழ்ச்சி அளிப்பதாகும். துன்பச் சூழலிலிருந்து விடுதலை பெற்ற எண்ணற்ற மக்களின் இதய காணிக்கையே அவர் விரும்பிய பொருளாகும். ஆத

லால் அவர் அரசாங்கம் வழங்க வந்த வீரமானியத்தை வேண்டாம் என்று மறுத்துவிட்டுத் தம் இறுதிக் காலம் வரை தம் கைகளாலேயே உழைத்து வாழ்ந்து வந்தார்.

இங்ஙனம் தாய்நாட்டிற்கு விடுதலை அளித்த—உலகுக்கே உரிமை வேட்கையின் உயர்வை விளக்கிக் காட்டிய ஒப்பற்ற வீரர் கரிபால்டி 1882-ஆம் ஆண்டு ஜூன் மாதம் இரண்டாம் நாள் அமைதியாக இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் இறந்த செய்தி கேட்டு இத்தாலிய மக்கள் கண்ணீர் விட்டுக் கதறினர். ஏன், உலகமே ஏங்கி அழுதது என்றே கூறலாம். அவர் பொன்னுடல் மறைந்தாலும் உரிமை உணர்ச்சி கொண்ட ஒவ்வொருவர் உள்ளத்திலும் அவர் புகழுடல் இன்றும் ஒளிபெற்றுத் திகழ்கின்றது.

### அருஞ்சொல் விளக்கம்

முடியாட்சி - முடிசூடி ஆளும் முறை; தளை - கட்டு; பணயம் - பந்தயப் பொருள்; வேட்கை - விருப்பம்; வகித்தல் - ஏற்றல்; அல்லல் - துன்பம்; வீறு - பெருமை; ஜினேவா - இத்தாலியின் வடமேற்கிலுள்ள நகரம்; வறிதே - சும்மா; குருதி - இரத்தம்; சுடரும் - ஒளிவீசும்; பண் - பாட்டு; தகைசால் - மேன்மை மிகுந்த; நனவு - உண்மை; மானியம் - வரியில்லா நிலம்.

### வினாக்கள்

1. கரிபால்டியின் பெற்றோர் யாவர்?
2. கரிபால்டி பள்ளிப் படிப்பை ஏன் விரும்பவில்லை?
3. இத்தாலி நாட்டின் விடுதலைப் போருக்குக் காரணமான நிகழ்ச்சி யாது?
4. மாஜினியின் பெருமைகள் யாவை? அவருடைய நட்பு கரிபால்டிக்கு எங்ஙனம் கிடைத்தது?
5. கரிபால்டி இத்தாலி நாட்டை விட்டு வெளியேறக் காரணம் என்ன?
6. கரிபால்டி எப்போது தென்னமெரிக்காவிற்குச் சென்றார்?
7. அனிதா அம்மையாரின் குணங்களை எழுதுக.
8. இதனினும் மகிழ்ச்சியளிக்கும் செய்தி வேறுண்டோ?—இங்குக் குறிப்பிடப்பட்ட செய்தி யாது?
9. கரிபால்டி மீண்டும் தம் தாய்நாடு திரும்பக் காரணம் என்ன?
10. இத்தாலி நாடு எங்ஙனம் விடுதலை பெற்றது?
11. கரிபால்டியின் உயர்குணங்கள் யாவை?

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக:—பிறப்புரிமை, பேருதவி, பற்பல, நாற்புறம், கப்பற்படை.

II. சேர்த்து எழுதுக:—எண் + அற்ற; கருத்து + அற்றவர்; ஆபத்துக்கு + இடம்; மூண்டு + எழுந்தது; முடி + ஆட்சி.

III. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—பணயம், வேட்கை, பதவி, சுயநலம், சொல்லொணு, வீறுகொண்டு, உச்சநிலே.

IV. கண்டான், சென்ருன், தந்தான்—இச் சொற்களில் 'ண்', 'ட'-வை அடுத்து வந்துள்ளமை காண்க. இது டண்ணகரம் எனப்படும். 'ன்', 'ற' வை அடுத்து வருவதால் றன்னகரம் எனப்படும். 'ந்' 'த' வை அடுத்து வருவதால் தந்நகரம் எனப்படும். இவற்றின் வேற்றுமையை யறிந்து பொருளே நோக்கிப் பிழையின்றி எழுதுக.

V. வீறுகொண்டு - இதில் 'று' வல்லினத்தைச் சார்ந்தது. இதற்குப் பதிலாக இடையினமாகிய 'ரு' என எழுதுதல் தவறு.

வால், வாள், வாழ்—இச்சொற்களின் இறுதியில் உள்ள மெய்யெழுத்துக்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டால் வாக்கியத்தில் பொருள் வேறுபடுவது காண்க. எனவே உச்சரிப்பையும், பொருளேயும் கவனித்து இவற்றைத் தவறின்றி எழுதிப் பழகுக.

## இலக்கணம்

"விடுதலே யளித்த வீரரே! வருக! வருக," என மக்கள் கரிபால்டியை வரவேற்றனர்.

இதில் வீரர் என்ற சொல் 'ஏ' என்பதை ஏற்று விளிப்பொருளில் வந்துள்ளது. இவ்வாறு ஒரு பெயர்ச்சொல் விளிவேற்றுமையில் வரும்போது சில மாறுபாடுகளே அடையும். (விளித்தல் - அழைத்தல்).

| | வெளிவேற்றுமை | | மாறுபாடு |
|---|---|---|---|
| 1. | அரசன் | — அரச | 'ன்' என்னும் ஈறு கெட்டது. |
| 2. | மகன் | — மகனே | 'ஏ' என்னும் ஈறு மிக்கது. |
| 3. | அன்னே | — அன்ளுய் | 'ஐ' என்னும் ஈறு 'ஆய்' எனத் திரிந்தது. |
| 4. | மக்கள் | — மக்காள் | ஈற்றெழுத்தின் அயலெழுத்தாகிய 'க' 'கா' எனத் திரிந்தது. |
| 5. | தம்பி | — தம்பி | இயல்பாயிற்று. |

தன்மை, முன்னிலே, சுட்டு, விளுப் பெயர்களும் தான், தாம் என்னும் பொதுப் பெயர்களும் விளிவேற்றுமையில் வாரா.

நீயிர், நீவிர் என்னும் முன்னிலேப் பெயர்களும், நான் என்னும் தன்மைப் பெயரும் வேற்றுமை உருபுகளே ஏற்க மாட்டா. இவை முதல் வேற்றுமையில் மட்டுமே வரும்.

# 8. நீலகிரி

நம் நாடு வெப்பம் மிகுந்த நாடு. வேனிற் காலத்தில் நம் நாட்டில் வெப்பம் அதிகமாக இருக்கும். சில இடங்களில் வெப்பம் தாங்காமல் மக்கள் வருந்துவர். நம் நாட்டில் உள்ள பெருஞ் செல்வர்கள் பலர் இக்காலத்தில் குளிர்ச்சியான மலைப் பிரதேசங்களில் சென்று இன்பமாக வாழ்கின்றனர். தென்னிந்தியாவில் **நீலகிரியும், கோடைக்கானலும், குற்றாலமும்** வேனிற்கால வாழ்க்கைக்கு ஏற்ற இடங்களாக விளங்குகின்றன.

நீலகிரி என்பது மேற்குத் தொடர்ச்சி மலையும் கிழக்குத் தொடர்ச்சி மலையும் கூடுமிடத்தில் அமைந்துள்ளது. இங்கே பல மலைகள் வரிசை வரிசையாக அமைந்துள்ளன. இம்மலை இயற்கை அன்னை கொலு வீற்றிருக்கும் இடமாக விளங்குகின்றது. இம்மலையின் இயற்கை அழகை நீலகிரி என்ற இதன் பெயரே நன்கு விளக்கும். நீலகிரி என்பதற்கு நீலமலை என்பது பொருள். இம்மலையில் கண்ணுக்கெட்டிய தூரம்வரை எங்கு நோக்கினும் வானுற வளர்ந்த பலவகை மரங்களும், செடி கொடிகளுமே நிறைந்துள்ளன. அவற்றால் இம்மலை பசும் பட்டாடை போர்த்துக் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றது. இங்ஙனம் கண்களுக்கும் கருத்துக்கும் பசுமையை வழங்கிக் குளிர்விக்கும் இம்மலையை நீலகிரி என்று வழங்கியது பொருத்தமாக இருக்கிறதன்றோ?

நீலகிரி கடல் மட்டத்திற்குச் சுமார் ஆறாயிரம் அடிகளுக்குமேல் உள்ளது. இதனாலேயே வேனிற்காலத்தில் இவ்விடம் மிக்க குளிர்ச்சியாக இருக்கின்றது. மிகப் பழங் காலத்திலிருந்து மக்கள் குளிர்ச்சி வாய்ந்த இவ்விடத்தை இன்ப வாழ்க்கைக்கு ஏற்ற இடமாகப் பயன்படுத்தி வந்துள்ளனர். செங்குட்டுவன் என்ற சேரப் பெருமன்னன் வட நாட்டின்மீது படை எடுத்துச் சென்ற சமயத்தில் தன் படைகளுடன் இம் மலையில் சில நாட்கள் தங்கி இன்புற்றான் என்று **சிலப்பதிகாரம்** கூறுகிறது. இம் மலையில் பற்பல இடங்களில் சிறு ஊர்கள் பல ஏற்பட்

டுள்ளன. அவைகளில் **உதகமண்டலம், குன்னூர்** ஆகியன மிகவும் முக்கியமானவையாகும்.

நீலகிரியில் உயரமான மலைகளும் ஆழமான பள்ளத் தாக்குகளும் அங்கங்கே அமைந்துள்ளன. எங்கு நோக்கி னும் யூகலிப்டஸ் மரங்களும், வேறு பலவிதமான மரங் களும் வானளாவ உயர்ந்து தோன்றும். மலைச் சரிவு களில் காப்பித் தோட்டங்களும், தேயிலைத் தோட்டங் களும், உருளைக் கிழங்குத் தோட்டங்களும் கண்ணுக்கு எட்டியவரை காட்சி யளிக்கும். இங்குள்ள பலா மரங் களில் பலாப் பழங்கள் கொத்துக் கொத்தாகக் குலுங்கும் காட்சி நம்மூர்களில் மாம்பழங்கள் பழுத்துத் தொங்கு வதை நினைவூட்டும். தேக்கு, இரப்பர், கருங்காலி, தேவதாரு, யூகலிப்டஸ் போன்ற மிகப் பெரிய மரங்கள் இம்மலையில் நெருங்கி வளர்ந்துள்ளன. அது போன்ற காட்சியை நாம் வேறு எங்கும் காணமுடியாது. பல நிறமான மலர்களும் இம் மலையைப் போர்த்திருத்தல் போல மலர்ந்து விளங்கும். அக்காட்சியைக் காண்பவர் இது மலர்க் குன்றோ என்று மயங்கி நிற்பர்.

நீலகிரியில் உள்ள உதக மண்டலத்திற்குப் புகை வண்டியிலோ, மோட்டாரிலோ செல்லலாம். அவ்வாறு செய்யும் பிரயாணம் மிக்க உற்சாகத்தையும் மனமகிழ்ச்சி யையும் தருவதாகும். மலையடிவாரத்தில் **மேட்டுப்பாளை யம்** என்னும் ஊர் உள்ளது. அங்கிருந்து மலையின்மீது ஏறுவதற்கு மிகச் சிறந்த சாலை அமைக்கப்பட்டுள்ளது. இச்சாலை மலைச்சரிவில் வளைந்து வளைந்து செல்கிறது. அக்காட்சி தூரத்திலிருந்து காண்பவர்க்கு மலைமீது ஏறுவதற்குப் படிகள் அமைத்திருப்பது போலத் தோன் றும். சில இடங்களில் சாலை நேரே சென்று திடீரென்று முழுவதும் வளைந்து திரும்புகிறது. இவ்விடங்கள் மேலிருந்து காண்பவர்க்கு மிக்க வியப்பூட்டும். இச்சாலை களின் வழியே மோட்டாரில் பிரயாணம் செய்தால் வழி முழுதும் பல அரிய காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தவாறே செல்லலாம்.

உதகமண்டலத்திற்குச் செல்வதற்காக அமைக்கப்

பட்டுள்ள புகைவண்டிப் பாதையும் சிறப்பாகக் குறிக்கத் தக்கதாகும். சாதாரணமாக இரயில் பாதைகள் இரண்டு தண்டவாளங்களாகவே அமைக்கப்படும். இங்கு அவற்றிற்கிடையில் பள்ளங்கள் அமைத்த மூன்ருவது தண்டவாளம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது. மலைப் பிரயாணத்திற்கென்றே தனியான புகை வண்டிகள் உள்ளன. அவற்றில் இருபுறமும் அமைந்த சக்கரங்களுக்கிடையில் பல் சக்கரங்களும் உள்ளன. புகை வண்டி தண்டவாளத்தின்மீது செல்லும்போது நடுவிலமைக்கப்பட்டுள்ள அப் பல் சக்கரங்களில் உள்ள பல பற்கள் தண்டவாளத்தில் பதியும். அவ்வாறு பதிவதால் புகைவண்டி மலைமீதேறும் போதும் இறங்கும்போதும் கீழே விழுந்துவிடாமல் காக்கப்படுகின்றது. நீராவி யந்திரமும் வண்டித்தொடர்களும் மிகவும் இலேசானவை.

இப்பாதையின் ஒரு பக்கம் ஆகாயத்தை அளாவும் உயரமான மலைகளாகவும் மற்ருெரு பக்கத்தில் கிடு கிடு பாதாளமாகவும் இருக்கும். மலைச்சரிவுகளின் ஓரமாக அமைக்கப்பட்டுள்ள இப்பாதையின் வழியே புகை வண்டி செல்லும்போது மிக்க அச்சம் உண்டாகும். இவ்வழியில் பல மலைக் குகைகளும் உள்ளன. அவற்றுள் இரயில் செல்லும் பகற் காலத்திலும் ஒரே இருள் சூழ்ந்திருக்கும். இக்குகைளில் ஒன்று மிகப் பெரியது. அது சுமார் இரண்டு மைல் நீளமுள்ளது. புகைவண்டியில் செல்லும் போது பல இடங்களில் காட்டாறுகள் உயரத்திலிருந்து வேகமாகப் பாயும் காட்சியைக் காணலாம். அவற்றில் தூயநீர் துள்ளிக் குதித்தோடும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். இக்தகைய இன்பக் காட்சிகளைக் காண்பவர் உள்ளம் களிப்புக் கடலில் மூழ்கும் என்பதில் ஐயமுண்டோ?

நீலகிரியில் அமைந்த ஊர்களில் மிக அழகான ஊர் உதகமண்டலமேயாகும். 'ஒற்றைக் கல் மன்று' என்ற தமிழ்ச் சொல்லே உதக மண்டலம் என்ருயிற்று என்பர். இது தென்னிந்தியாவில் உள்ள கோடைக் கால வாசத் தலங்களில் மிகவும் பெரியதாகும். ஏழாயிரத்து முந்நூறு



குகைக்குள் செல்லும் புகை வண்டிப் பாதை

அடி உயரத்தில் ஒரு பள்ளத்தாக்கில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரைச் சுற்றிலும் பல குன்றுகள் உள்ளன. அவற்றில் மிகவும் உயர்ந்த சிகரம் 'தொட்ட பெட்டா' என்று வழங்கப்படுகிறது. அது கடல் மட்டத்திலிருந்து 8700 அடி உயரமுடையதாகும். அதன் உச்சி வரை மோட்டாரில் பிரயாணம் செய்வதற்கு ஒரு சாலை அமைக்கப்பட்டுள்ளது. உதக மண்டலத்தில் வனப்பு மிகுந்த ஒரு தோட்டம் உள்ளது. அதனருகிலேயே கவர்னர் மாளிகை அமைக்கப்பட்டுள்ளது. அது மிகவும் அழகான கட்டடமாகும். உதகமண்டலத்தில் பெருஞ் செல்வர்கள் தாங்கள் சென்று தங்குவதற்கு வசதியாகப் பெரிய மாளிகைகள் பல கட்டியுள்ளனர். அவை அழகிய தோட்டங்களுக் கிடையில் அமைந்துள்ளன. மற்றும் மைசூர், பரோடா, ஐதராபாத் முதலிய சுதேச நாடுகளின் அரசர்களுக்குச் சொந்தமான அரண்மனைகளும் ஆங்காங்கு அழகாகக் காட்சியளிக்கின்றன.

அவ்வழகிய ஊரில் வசிப்பதற்கேற்ற பருவம் ஏப்ரல் முதல் அக்டோபர் வரையுள்ள வேனிற் பருவமேயாகும். இக்காலத்தில் பலர் இங்கு வந்து தங்குவார்கள். அங்குச் செல்பவர் தங்குவதற்கேற்ற வசதியான பல உணவு விடுதிகள் அமைந்துள்ளன. கோடை வாசத்துக்கென்று செல்பவர்கள் தோட்டங்களில் மலர்களைக் காண்பதிலும், அங்குள்ள அழகிய பெரிய ஏரியில் படகில் பிரயாணம் செய்வதிலும், பல மைல்கள் நடந்து சென்று இயற்கை அழகுகளைக் கண்டு களிப்பதிலும் இன்பமாகக் காலம் கழிப்பார்கள். எவ்வகையான கவலையுமில்லாமல் அமைதியாகத் தம்மை மறந்து வாழ்வதற்கேற்ற இன்ப உலகம் உதக மண்டலம் என்று சுருக்கமாகக் கூறலாம்.

உதக மண்டலத்தின் அருகில் பன்னிரண்டு கல் தொலைவில் பைகாரா நீர்வீழ்ச்சி உள்ளது. அங்கிருந்து மிகுதியாக மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டுத் தென்னிந்தியாவின் பல பகுதிகளுக்கு அனுப்பப்படுகிறது.

உதகமண்டலத்தில் வாழும் பழங்குடியினர் தொதவர், படுகர், இருளர், குறும்பர், கொத்தர் என்பவராவர். இவர்



கவர்னர் மாளிகை

களில் தொதவர்களே உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். தொதவர்கள் பல நிலங்களுக்குச் சொந்தக்காரராயுள்ளனர். படுகர் என்பவர் அந்நிலங்களைப் பயிரிட்டு வாழ்கின்றனர். தொதவர்கள் எருமைகளையே சிறந்த




தொதவர்கள் குடிசை

செல்வமாக மதிக்கின்றனர். ஒரு சமயம் ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி இளவரசராயிருந்தபோது நீலகிரிக்குச் சென்றிருந்தார். அவரைப்பற்றிக் கேள்விப்பட்ட தொதவர் ஒருவர் 'அவருக்கு எத்தனை எருமைகள் இருக்கின்றன?' என்று கேட்டாராம். இதனால் அவர்கள் எருமையைப் பெரிய செல்வமாக மதிப்பது விளங்குகின்றதன்றோ?

தொதவர்கள் பெருமிதமான தோற்றமுடையவர்கள்; கூரிய மூக்கை உடையவர்கள். பெண்கள் மிக்க அழகுடையவர்கள். அவர்கள் தங்கள் கூந்தலைப் பலவாறு முறுக்கிவிட்டு அழகு செய்வார்கள். அவர்கள் உடம்பு முழுதும் ஒரே ஆடையைப் போர்த்துக்கொள்வர். அவர்களுடைய வீடுகள் வைக்கோற் போரைப்போல அமைந்த சிறு சிறு குடிசைகளேயாகும். குடிசைகளின் வாயில்கள் மிகச் சிறியன. உட்கார்ந்தவாறே அதனுள் நுழைந்து செல்ல வேண்டும். அக்குடிசைகள் மிகத் தூய்மை

யானவையாகும். அவர்கள் உணவு பாலும் சோறுமே யாகும். வெல்லத்தில் அவர்கட்கு விருப்பம் அதிகம். தொதவர்கள் கடவுள் பக்தியில் சிறந்தவர்கள். அவர் களுக்கெனக் கோயில்களும் உள்ளன. தம்மினும் பெரிய வர்களிடம் அவர்கள் காட்டும் மரியாதை குறிப்பிடத் தகுந்ததாகும். கீழே உட்கார்ந்து பெரியவர்களுடைய காலைத் தூக்கச் செய்து அதனைத் தலைமேற் கொண்டு வணங்குவது அவர்கள் வழக்கம். அவர்கள் பேசும்மொழி தமிழின் சிதைந்த மொழியே என்று கூறுவர். தொட்ட பெட்டா என்ற சிகரத்துக்குச் செல்லும் வழியில் தொதவர் களின் பல குடிசைகளைக் காணலாம்.

உதக மண்டலத்தைவிடச் சிறந்த ஊர் **குன்னூர்** ஆகும். இது கடல் மட்டத்திலிருந்து 5600 அடி உயரத் தில் அமைந்திருப்பதால் ஆண்டு முழுதும் இங்கு மக்கள் இன்பமாக வாழலாம். குன்னூர் உலகிலேயே மிகச் சிறந்த ஆரோக்கிய வாசத்தலமாகக் கருதப்படுகிறது. இவ்வூரின் தெருக்களும், வீடுகளும் மலைச்சரிவில் அடுக் கடுக்காக அமைந்துள்ளன. தூரத்திலிருந்து பார்ப்ப தற்கு வீடுகளே குன்றாக அமைந்து விளங்குவதுபோல் தோன்றும். அதனால் அது **குன்றூர்** என்று பெயர் பெற்றது. அப் பெயரே தற்காலத்தில் குன்னூர் என்று மருவி வழங்குகின்றது. அழகிய பள்ளத்தாக்கில் புகை வண்டி நிலையம் அமைந்துள்ளது. இரவில் மின்சார விளக்கொளியில் இவ்வூரைக் காண்பவர் 'தேவருலகமோ இஃது' என்று வியந்து நிற்பர். குன்னூரில் மிக அழகிய பூங்கா ஒன்றுள்ளது. இவ்வூரில் **பாஸ்டியூர்** என்னும் நுண்ணுயிர் ஆராய்ச்சியாளரின் பெயரால் ஓர் ஆராய்ச்சி நிலையம் அமைக்கப்பட்டுள்ளது. குன்னூரின் அருகில் உள்ள கோத்தகிரி, வெலிங்டன், கேத்தி போன்ற ஊர் களும் கண்டு களிக்கத் தக்கனவாம். வெலிங்டனில் இந்திய இராணுவ நிலையம் அமைந்துள்ளது.

நீலகிரி தென்னிந்தியாவில் குறிப்பிடத்தக்க மிகச் சிறந்த இடமாகும். அங்குச் சென்று அதன் இயற்கை நலங்களைக் கண்டு மகிழ்வது வாழ்விலோர் திருநாளாகும்.

மாணவர்களே, சந்தர்ப்பம் வாய்த்தால் நீங்கள் சென்று அதனைக் கண்டு மகிழத் தவறுதீர்கள்.

## அருஞ்சொல் விளக்கம்

வேனிற் காலம் - கோடைக்காலம்; வாயிலாய் - மூலமாக; படை - சேனை; கதிரவன் - சூரியன்; ஐயம் - சந்தேகம்; சிகரம் - மலை உச்சி; வனப்பு - அழகு; பெருமிதம் - வீரம்; பூங்கா - பூஞ்சோலை; நுண்ணுயிர் - கண்ணுக்குத் தெரியாத மிகச் சிறிய உயிர்.

## வினாக்கள்

1. தென்னிந்தியாவில் கோடைக்கால வாழ்விற்கு ஏற்ற இடங்கள் யாவை?
2. நீலகிரி என்னும் பெயர் வழங்கப்படுவதற்குக் காரணம் கூறுக.
3. நீலகிரியைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுவது யாது?
4. நீலகிரியின் இயற்கைக் காட்சியை விளக்குக.
5. மேட்டுப்பாளையத்திலிருந்து நீலகிரிக்குச் செல்லும் வழியை விவரிக்க.
6. நீலகிரியில் உள்ள மிக உயரமான சிகரம் எது?
7. நீலகிரியில் வாழும் பழங் குடிமக்கள் யாவர்?
8. தொதவர் வாழ்க்கையைச் சுருக்கி எழுதுக.
9. குன்னூரின் காட்சி எத்தகையது? அங்குப் பார்க்கத்தக்க இரண்டு இடங்களைக் குறிக்க.

## மொழிப் பயிற்சி

I. **பிரித்தெழுதுக**:—வேனிற் காலம், பெருஞ் செல்வர், கண்ணுக் கெட்டிய, வியப்பூட்டும், சூழ்ந்திருக்கும், வைக்கோற் போர்.

II. **சேர்த்து எழுதுக**:—காட்சி + அளிக்கும்; காடு + ஆறு; குதித்து + ஓடும்; நுண்மை + உயிர்; பூ + கா.

III. **சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக**:—கண் கவரும், கண் கொள்ளாக் காட்சி.

IV. 'உதகமண்டலத்தில் காணத் தகும் இடங்கள்' என்பதுபற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.

2838—6

V. தொதவர்கள் பெருமிதமான தோற்றமுடையவர்கள்—

இவ்வாக்கியத்தில் எழுவாயாகிய ‘தொதவர்கள்’ என்னும் சொல் பன்மை எண்ணில் உள்ளது. அதற்கேற்பப் பயனிலையும் ‘தோற்ற முடைவர்கள்’ எனப் பன்மையிலேயே அமைதல் வேண்டும்.

நான் வானொலியைப்பற்றிப் பல அரிய செய்திகளை அறிந்தேன்.

நீ நாளை மாணவர் கூட்டத்திலே பேசுவாயா ?

நல்ல மாணவன் சிறந்த ஒழுக்கங்களுடன் விளங்குவான்.

—இவ்வாக்கியங்களில் எழுவாய்களாகிய நான், நீ, மாணவன் என்பவை முறையே தன்மை, முன்னிலை, படர்க்கை இடங்களில் உள்ளன. இவற்றிற்கேற்பப் பயனிலைகளும் அறிந்தேன், பேசுவாயா, விளங்குவான் என முறையே தன்மை, முன்னிலை, படர்க்கை இடங்களிலேயே அமைதல் வேண்டும். வாக்கியங்களில் எழுவாயும் பயனிலையும் திணை, பால், எண் இடங்களில் பொருந்துமாறு அமைப்பதற்கு **வாக்கியப் பொருத்தம்** என்பது பெயர். இதனை மாணவர் நன்கு கவனித்துத் தவறின்றி எழுதப் பழகவேண்டும்.

## இலக்கணம்

மலை + அது - மலையினது - மலை என்னும் சொல்லுடன் வேற்றுமையுருபு சேரும்போது ‘**இன்**’ என்னும் சொல் இடையில் வருகிறது. இதற்குச் **சாரியை** என்பது பெயர். இவ்வாறே பெயர்ச் சொற்களுடன் வேற்றுமை உருபுகள் சேரும்போது சில சமயங்களில் சாரியைகள் தோன்றும்.

| | | |
|---|---|---|
| வழி + இன் + ஐ - வழியினை | **இன்** | —சாரியை |
| ஒன்று + அன் + ஆல் - ஒன்றனுல் | **அன்** | ,, |
| மரம் + அத்து + ஐ - மரத்தை | **அத்து** | ,, |
| எல்லாம் + அற்று + கு - எல்லாவற்றுக்கும் | **அற்று** | ,, |
| கண் + உ + கு - கண்ணுக்கு | **உ** | ,, |
| என் + அ + கு - எனக்கு | **அ** | ,, |

இப்பாடத்தில் சாரியைகள் வந்துள்ள சொற்களைக் கண்டறிக.

## 9. திக்கற்றவருக்குத் தெய்வமே துணை

மதுரையில் கோயில் கொண்டருளிய சோமசுந்தரக் கடவுள் அடியார்களின் பொருட்டுப் பல அரிய திருவிளையாடல்களைப் புரிந்தனர். அவற்றை விளக்கிக் கூறும் நூல் **திருவிளையாடற் புராணம்** எனத் தமிழில் வழங்குகின்றது. அந்நூல் **பரஞ்சோதி** முனிவரால் இயற்றப் பெற்றது; சொல்லழகும் பொருளழகும் வாய்ந்தது. அந்நூலில் கூறப்பட்டுள்ள விளையாடல்களுள் எளிய வணிக மகன் ஒருவன் பொருட்டு இறைவன் செய்த திருவிளையாடல் மிக்க சுவையுடையதாகும். அதனை இங்குக் காண்போம்.

நான்மாடக்கூடல் என்று புகழ்பெற்ற மதுரைமா நகரில் **தனபதி** என்னும் வணிகன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் தன் பெயருக்கேற்பக் குபேரனைப் போன்ற செல்வம் உடையவனுகவே இருந்தான். அவன் மனைவி **சுசீலை** என்பவளாவாள். அவள் அழகில் திருமகளையும் கற்பில் அருந்ததியையும் போன்றவள். அவர்கள் இருவரும் ஆற்றிய இல்லறம் நல்லறமாய் விளங்கியது. எனினும் நீண்ட நாட்களாக அவர்கட்கு மகப்பேறு வாய்க்கவில்லை. மக்களில்லாத வீடும் வீடாகுமா? குழலினும் இனிய அவர் மழலை கேட்காத வாழ்வும் வாழ்வாகுமா? மக்களில்லாத மனை சந்திரனில்லா வானம் போன்றும், தாமரையில்லாப் பொய்கை போன்றும் பொலிவிழந்து தோன்றுமன்றோ? எல்லாப் பேறுகளையும் பெற்றும் மக்கட் பேறு பெறுத தனபதியும் அவன் மனைவியும் மிகவும் மனம் வருந்தினர். அதனுல் தனபதி நன்கு சிந்தித்துத் தன் தங்கையின் மகனைத் தன் மகனுக ஏற்றுக் கொண்டு கண்ணும் கருத்துமாய் அன்போடு வளர்த்து வந்தான். சுசீலையும் அக்குழந்தையைப் பெற்ற தாயினும் பேரன்புடன் கண்ணை இமை காப்பதுபோல் தாலாட்டிப் பாலூட்டிச் சிறப்பாகப் போற்றி வந்தாள். பொன்னும் மணியும் கொண்டிருந்த உயரிய அணிகலன்களையும்,

அழகிய பட்டாடைகளையும் அணிவித்து, உள்ளங்குளிரக் கண்டு இருவரும் உவகைக் கடலில் மூழ்கினர்.

இங்ஙனம் வாழ்ந்துவரும் நாளில் தனபதியின் மனைவிக்கும் அவன் தங்கைக்கும் மனவேறுபாடு உண்டாயிற்று. அதனால் சிறு பூசல்கள் விளைந்தன. தனபதியும் தன் மனைவியிடம் கொண்ட பேரன்பால் சில சமயங்களில் தன் தங்கையுடன் மனம் வேறுபட்டு அவள் மனம் புண்படும்படி பேசலானான். ஒரு நாள் தன் மனைவிக்காகப் பரிந்து பேசிய தனபதியினிடம் அவன் தங்கை கடுஞ்சினம் கொண்டாள். அவள் தன் முன்னோனை நோக்கி, "பிள்ளைப் பேறற்ற பாவியாகிய உனக்குப் பெருமிதம் ஏன்? நீ என் அருமை மகனைச் சுவீகாரம் கொண்டமையாலன்றோ இம்மையிலும் மறுமையிலும் நற்கதியடையப் போகின்றாய்", என இடித்துரைத்தாள். அது கேட்ட தனபதி மிக்க வெட்கமடைந்தான். மகப்பேறற்ற தன்னிலை குறித்து வருந்தினான். "நான் இனி இங்கு வாழேன்; அடுத்த பிறவியிலாவது மகப்பேற்றை அடையக் கடுந்தவம் புரிவேன்; இன்றே காடு செல்கின்றேன்," என்று சூளுரைத்துத் தனபதி தன் செல்வம் முழுவதையும் தன் தங்கை மகனுக்கே உரிமையாக்கிவிட்டு மனைவியோடு தவம் செய்யக் கானகம் சென்றான்.

கானகம் சென்ற தனபதி தான் கூறியதுபோலவே நெடுநாட்களாகத் திரும்பவே இல்லை. அதனால் அவனுடைய தாயத்தார் பொய் வழக்குப் பேசி மருமகன் பெற்ற செல்வங்கள் எல்லாவற்றையும் கவர்ந்து கொண்டனர். மகனும் தாயும் கொழுகொம்பற்ற கொடிகளைப் போலவும், சிறகிழந்த பறவைகளைப் போலவும் ஆதரவற்றவர்களாய் வருந்தினர். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தனர். 'திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை' என்று கருதித் தாய் தன் மகனுடன் சோமசுந்தரக் கடவுளிடம் அடைக்கலம் புகுந்தனள். "எம்பிரானே! நீர் உலகில் உள்ள எல்லா உயிர்கட்கும் தந்தையும் தாயும் ஆவீரன்றோ! அம்முறையில் எங்கட்கும் நீர் அன்னையும் அத்தனும் அல்லீரோ! தங்களையன்றி நான்

யாரிடம் என் குறையை முறையிடுவேன். என் முன்னோன் தனக்கு மகப்பேறின்மையால் என் மகனைத் தன் மகனாகக் கொண்டு வளர்த்து வந்தான். அவன் தவம் செய்யக் கானகம் சென்றபோது தன்னுடைய திரண்ட செல்வம் முழுவதையும் என் மகனுக்கே உரிமையாக்கிச் சென்றான். அவன் சென்றதைக் கண்ட தாயத்தார் பொய் வழக்குப் பேசி அச்செல்வத்தை யெல்லாம் கவர்ந்து கொண்டனர்.

"ஒருத்தி நான் ஒருத்திக் கிந்த ஒரு மகன் இவனும் தேரும்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணும் காணேன்"

எங்கும் நிறைந்த இறைவராகிய நீர் இதனை அறியீரோ? எங்ஙனமேனும் இழந்த செல்வத்தை மீண்டும் பெறத் திருவருள் புரிவீராக," என்று கூறி முறையிட்டாள்.

அம்முறையீட்டைக் கேட்ட சோமசுந்தரப் பெருமான் அவளிடம் கருணை கொண்டார். அவள் கனவில் தோன்றி, "பெண்ணே! நாளை நின் தாயத்தார்களை எல்லாம் அரசன் ஆணை கூறி நீதி மன்றத்திற்கு அழைத்துவா. நாம் அங்கு வந்து நின் வழக்கைத் தீர்த்துத் தருகிறோம்," என்று கூறி மறைந்தார். விழித்தெழுந்த தனபதியின் தங்கை அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையுமுண்டோ? அவள் கண்ணிழந்தார் திரும்பப் பெற்றது போலக் களிபேருவகை கொண்டாள்; இறைவனின் அளவற்ற கருணைத் திறத்தினை எண்ணி எண்ணி வியந்து போற்றினாள்.

மறுநாள் பொழுது விடிந்ததும் அவள் தன் தாயத்தார் வீடுகட்கெல்லாம் சென்று, "நீங்கள் தருமநெறியால் அல்லாமல் வஞ்சனையால் எங்கள் செல்வத்தைக் கவர்ந்து கொண்டீர்கள். நான் அதனை ஒப்பமாட்டேன். பலரும் கேட்க அரசன் மீது ஆணையிடுகின்றேன். நீங்கள் நீதி மன்றத்துக்கு வந்து பெரியோர்கள் கூறும் அறவுரைப்படி எங்களுக்குரிய பொருளைக் கொடுத்துப் போவீராக. அவ்வாறின்றி நீங்கள் அடுப்பில் நெருப்பு மூட்டலாகாது; ஓர் அடி எடுத்து வைக்கவும் கூடாது," என்று கூறினாள். அதுகேட்ட தாயத்தார்கள் அவளைப் பலவாறு வைதும்

கீழே தள்ளி அடித்தும் கொடுமை செய்தனர். அவள் கோவென்று கதறி அழுது தன் மகனுடன் நீதிமன்றம் சென்று அந்த அநியாயத்தை முறையிட்டனள். அற முறைக்கும் அறவோரும் தாயத்தாரை வருவித்து வழக் கைக் கேட்கலாயினர்.

அவ்வமயம் சோமசுந்தரப் பெருமான் குண்டலமும் தோள்வளைகளும் அணிந்து மார்பில் முத்தாரம் விளங்கக் கையில் நீலமணி பதித்த மோதிரம் ஒளிவீசத் தன பதியைப் போல உருக்கொண்டு மிக்க விரைவாக நீதிமன் றத்தை அடைந்தார். அவர் வரும்போதே, "இங்கு அர சன் இல்லையோ? அரசனுடைய செங்கோல் வளைந்து விட் டதோ? வேதங்கள் புகழும் தெய்வமும் இங்கு இல்லையோ? தருமம் எங்கு மறைந்ததோ?" என்று முறையிட்டுக் கொண்டே வந்தார். அங்குத் தம் தாயத்தாரைப் பார்த்த வுடன் அவர் முகம் வெறுப்பால் வாட்டமடைந்தது. தம் தங்கையையும் அவள் மகனையும் கண்டு பேரன்புடன் அவர்களைத் தழுவிக் கொண்டனர். இங்ஙனம் தனபதியே திடுமென அங்கு வரக்கண்ட தாயத்தார் அனைவரும் அஞ் சினர். "பொய் வழக்குப் பேசிப் பழி தேடிக் கொண் டோமே! வாரான் என நினைத்த தனபதி வந்து சேர்ந் தனனே! நம் வல்வழக்கை உணர்ந்து அரசன் கொடுந் தண்டனை அளிப்பானே! இதற்கு என் செய்வோம்," என்று தமக்குள் வருந்தினர்.

தனபதியாக வந்த சோமசுந்தரர் தம் மருமகனையும் தங்கையையும் நோக்கி, "ஐயோ! உங்களை இக்கோலத் திலா நான் காணவேண்டும்? நீங்கள் வாழ்ந்த வாழ் வென்ன? தற்போதுள்ள வறிய நிலையைக் காணும்போதே என் மனம் வேதனைப்படுகின்றதே! இக்குழந்தை தன் மார்பில் அணிந்திருந்த ஐம்படைத்தாலி எங்கே! காலில் இருந்த சிலம்பையும் காணவில்லையே! முழு நிலாவைப் போன்ற இவ்வழகிய முகத்தில் அசைந்து ஒளி வீசிய சுட்டியையும் காணேமே! காதில் அணிந்த குண்டலங்கள் எங்கே! இந்த வெற்றுடலையா என் கண் கள் காணவேண்டும்! இக்குழந்தையின் அணிகள் எவ்

வளவு விலைபெறும் என்று அவற்றையும் கவர்ந்து கொண்டனர் இப்பாவிகள் !'' என்று கண்ணீர்விட்டுக் கதறியழுதனர். அவர் கொண்ட வருத்தத்தைக் கண்ட அனைவரும், ''ஐயோ பாவம்'', என்று வாய்விட்டுக் கூறி இரங்கினர்.

பின்னர்த் தனபதி வணிகர் தம்முன் தேம்பி அழுது நின்ற புதல்வனையும் தங்கையையும் தேற்றி அவர்தம் கண்ணீரைத் துடைத்து, ''வருந்தாதீர்கள் ! நான் இருக்கும்போது இனி உங்கட்கு என்ன குறை ! இந்த வஞ்சகர்களின் பொய் வழக்கை ஒரு நொடியில் வென்று நம் பொருளைப் பெறுவோம். நம் செல்வம் நம்பினவர்களை ஏமாற்றிச் சேர்த்ததன்று ; அதிக வட்டி வாங்கிய அநியாயமான முறையில் ஈட்டியது மன்று ; ஏழைகளுக்கு ஈயாமல் உலோபத்தனம் செய்து சேர்த்த செல்வமும் அன்று ; அறவழியில் பாடுபட்டுழைத்துச் சேர்த்த செல்வமாகும். அத்தகைய செல்வம் ஒரு நாளும் அழியாது,'' என்று உரைத்துத் தென்திசை நோக்கி மதுரையில் கோயில் கொண்டருளிய இறைவனை வணங்கி, ''பெருமானே, எங்கள் வழக்கினை இவ்வவையோர் மூலம் தீர்த்துத் தருவாயாக,'' என்று உள்ளம் உருக வேண்டி நின்றார்.

பின்பு அவர் அறங் கூறும் அவையினரை நோக்கி, ''பெரியோர்களே ! நீங்கள் அரசனுடைய செங்கோல் கோடாமல், அறநெறி பிறழாமல் எம் வழக்கையும், எங்கள் சுற்றத்தார் என்று கூறும் இப்பகைவர்களின் வழக்கையும் சீர்தூக்கி உங்கள் நாவால் உண்மையை உரையுங்கள்,'' என்று வேண்டிக் கொண்டார். அவையில் இருந்த சான்றோர்கள் இரு திறத்தார் வழக்கையும் பலமுறை கேட்டு ஆராய்ந்து தாயத்தார் வழக்கு தவறானது என்று முடிவு கூறினர்.

தம் வழக்கு தோற்றமை உணர்ந்த தாயத்தார் வேறு ஒன்றும் கூற இயலாதவராய், ''இவர் தனபதி வணிகர் அல்லர் ; தனபதியைப் போலப் பொய்யாக நடிக்கிறார்,'' என்று கூறி ஆரவாரம் செய்யலாயினர். அது கேட்டுத் தனபதியாய் வந்த சிவபெருமான் வியப்பும் சினமும்

கொண்டவரைப்போல நடித்து, ஆங்குக் குழுமி இருந்த தாயத்தாரின் தந்தை, தாய், மாமன், மாமி, மைந்தர், உடன் பிறந்தார் ஆகிய அனைவர் பெயரையும் கூறிய துடன் அவருடைய அங்க அடையாளங்கள், பழக்க வழக்கங்கள் யாவற்றையும் விளக்கமாக எடுத்துரைத்துத் தாம் தனபதியே என்பதனை மெய்ப்பித்தனர். அதற்குமேல் பேச வாயிழந்த வணிகர்கள் அனைவரும் இனி அரச தண்டனை தப்பாது என அறிந்து அஞ்சினர். சிலர், 'வீட்டிற்குச் சென்று வருகின்றோம்' என்று சென்றனர். மற்றும் சிலர் 'இதோ குளத்திற்குச் சென்று விரைவில் வந்து விடுகின்றோம்,' என்று கூறி மறைந்தனர். இங்ஙனமே ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொய்க் காரணம் கூறித் தலை தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்தனர்.

தாயத்தார் இங்ஙனம் ஓடி ஒளிந்தமை அறிந்த தனபதி வணிகர் குறுநகை கொண்டார். அறங்கூறவையத்தார், தனபதி வணிகரின் செல்வம் முழுதும் அவரால் உரிமை கொள்ளப்பட்ட அவர் தங்கை மகனுக்கே உரியது என்று உரிமைச் சாசனம் எழுதி வாங்கி அளித்தனர். அங்ஙனம் கொடுத்தவுடன் தனபதி உருக்கொண்டு தோன்றிய சோமசுந்தரப் பெருமான் மறைந்தருளினார். அது கண்ட அனைவரும் வியப்பெய்தித் திகைத்து நின்றனர். அங்ஙனம் மறைந்தவர் சோமசுந்தரக் கடவுளே என்று பாண்டியன் உணர்ந்தான்; ஓர் ஏழையின் பொருட்டு இறைவன் செய்த அந்த அரிய திருவிளையாடலை எண்ணி இறும்பூதுற்றான்; ஆண்டவன் கருணைக்கு உரியவனாகிய அவ்வணிகச் சிறுவனுக்குப் பலப்பல வரிசைகள் செய்து மகிழ்ச்சியோடு வீட்டிற்கு அனுப்பி வைத்தான். தாயும் மகனும் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவுமுண்டோ? அவர்கள் தம்பொருட்டுச் சோமசுந்தரப் பெருமான் புரிந்த அருள் விளையாட்டை எண்ணியவாறே கோயில் சென்று இறைவனை மனம் மொழி மெய்களால் வழிபட்டுத் தம் மனை யடைந்து மகிழ்ச்சியோடு வாழ்ந்து வந்தனர்.

## அருஞ்சொல் விளக்கம்

அருந்ததி - வசிஷ்டரின் மனைவி; குழல் - புல்லாங்குழல்; மழலை - பொருள் விளங்காத குழந்தைப் பேச்சு; பொய்கை - தடாகம்; பொலிவு - அழகு; அணிகலன் - ஆபரணம்; பெருமிதம் - செருக்கு; சூள் - சபதம்; தாயத்தார் - பங்காளிகள்; அத்தன் - தந்தை; களைகண் - ஆதரவு; கழிபேருவகை - மிக்க மகிழ்ச்சி; முத்தாரம் - முத்துமாலை; ஐம்படைத் தாலி - சங்கு, சக்கரம், கதை, வில், வாள் என்னும் திருமாலின் ஐந்து ஆயுதங்களும் அமையுமாறு செய்யப்பெற்ற மார்பில் அணியும் ஆபரணம்; இறும்பூது - ஆச்சரியம்.

## வினாக்கள்

1. திருவிளையாடற் புராணத்தை இயற்றியவர் யார்? அந்நூலில் கூறப்படும் பொருள் யாது?
2. தனபதி தவம் செய்யச் சென்றது ஏன்?
3. தனபதியின் தங்கை இறைவனிடம் முறையிட்டது யாது?
4. இறைவன் கனவில் தோன்றிக் கூறிய மொழிகள் யாவை?
5. சிவபெருமான் தனபதி உருவில் நீதிமன்றத்தை அடைந்த போது கூறியன யாவை?
6. தனபதி வணிகர் மைந்தனை நோக்கி யாது கூறி வருந்தினர்?
7. சிவபெருமான் தாம் தனபதியே என்பதை எங்ஙனம் மெய்ப்பித்தனர்?
8. இப்பாடத்தால் நீங்கள் அறியும் நீதி யாது?

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக :—நான்மாடக்கூடல், மகப்பேறு, பொலிவிழந்து, மக்கட்பேறு, கடுந்தவம், சூளுரைத்து, முத்தாரம், ஐம்படை, வெற்றுடல்.

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—கண்ணை இமை காப்பதுபோல், உவகைக்கடல், மனவேறுபாடு, புண்படும்படி, பெருமிதம், கொழுகொம்பற்றகொடி, முறையீடு, கழிபேருவகை, வாய்விட்டுக் கூறி, ஆரவாரம், குழுமி இருந்த, வாயிழந்த, இறும்பூது.

III. (1) ‘தனபதி குழந்தையைக் **கண்ணும் கருத்துமாய்** வளர்த்து வந்தான்.’

இவ்வாக்கியத்தில் 'தனபதி குழந்தையை வளர்த்து வந்தான்' என்பதே முக்கியமான சொற்றொடர். கண்ணும் கருத்துமாய் என்பது மிக்க கவனிப்போடு வளர்த்தான் என்று பொருள்படும் மற்றொரு தொடர். இத்தொடர் எப்பொழுதும் இங்ஙனமே வரும். இவ்வாறு இடையில் வரும் தொடர் தமிழில் சொற்றொடர் எனக் கூறப்படும். ஆங்கிலத்தில் (Phrase) எனப்படும்.

(2) தாயத்தார் **தலைதப்பினால் போதும்** என்று ஓடி ஒளிந்தனர். இவ்வாக்கியத்திற்குத் தாயத்தார் துன்பமில்லாமல் தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்தனர் என்பது பொருள். துன்பமில்லாமல் என்பதனை விளக்கத் 'தலைதப்பினால் போதும்' என்ற தொடர் வந்துள்ளது. இப் பொருளில் இத்தொடர் நம் முன்னோர்களால் ஆளப்பட்டு வருகிறது. இத்தகைய தொடர்கள் **மரபுத்தொடர்கள்** எனப்படும். ஆங்கிலத்தில் இதனை (Idiom) எனக் கூறுவர்.

(3) அவள் **கண்ணிழந்தார் பெற்றது போல** உவகை கொண்டாள்.

அவள் கொண்ட மகிழ்ச்சி எத்தகையது என்பதை விளக்கக் கண்ணிழந்தார் பெற்றதுபோல என்ற தொடர் வந்துள்ளது. இத்தகைய தொடர்கள் **உவமைத்தொடர்கள்** எனப்படும்.

கட்டுரை முதலியன எழுதும்போது சொற்றொடர், மரபுத்தொடர், உவமைத் தொடர் முதலியன அமைய எழுதினால் அக்கட்டுரை சிறப்புடையதாக அமையும்.

## இலக்கணம்

மகன் நன்றாக **வளர்ந்து** வந்தான்.
அறங்கூறவையத்தினர் அவைக்கு **வந்தனர்.**
தனபதி மகனை நன்றாக **வளர்த்து** வந்தான்.
அவையினர் தாயத்தாரை **வருவித்தனர்.**

இவ்வாக்கியங்களைக் கவனியுங்கள். வளர்ந்து வந்தான் என்பதும், வந்தனர் என்பதும் முறையே மகன் செயலும், அவையத்தினர் செயலுமாகும். இங்ஙனம் கருத்தா (எழுவாய்) தானே செய்யும் வினை **தன்வினை** எனப்படும். வளர்த்து வந்தான் என்பதும், வருவித்தனர் என்பதும் கருத்தா பிறரைக்கொண்டு செய்விக்கும் வினைகளாம். வளர்த்தல் தனபதியின் செயல். வளர்தல் மகன் செயலாம். வருவித்தல் அவையத்தினர்

செயல். வருதல் தாயத்தார் செயலாம். இங்ஙனம் வரும் வினைகள் **பிறவினை** எனப்படும்.

1. தன்வினைப் பகுதியோடு பி அல்லது வி சேர்த்தால் பிறவினைப் பகுதியாம்.

| | | | |
|---|---|---|---|
| உண் — | தன்வினை | உண்பி — | பிறவினை |
| செய் — | தன்வினை | செய்வி — | பிறவினை |

2. சில தன் வினைப் பகுதிகளுடன் கு, சு, டு, து, பு, று இவற்றைச் சேர்த்தால் பிறவினைப் பகுதிகளாம்.

| தன்வினை | பிறவினை |
|---|---|
| போ | போக்கு |
| காய் | காய்ச்சு |
| உருள் | உருட்டு |
| நட | நடத்து |
| எழு | எழுப்பு |
| பயில் | பயிற்று |

3. மற்றும் சில சொற்கள் ஒற்று இரட்டித்தும், மெல்லினம் வல்லின மாகத் திரிந்தும் பிறவினைகளாம்.

(உ - ம்.) வளர்தல்—தன்வினை. வளர்த்தல் - ஒற்று இரட்டித்துப் பிற வினையாயிற்று.

வருந்தினன்—தன்வினை. வருத்தினன் - மெல்லினம் வல் லினமாகத் திரிந்து பிறவினையாயிற்று.

கீழ்க்கண்ட வினைச் சொற்களில் தன்வினையைப் பிறவினையாகவும், பிறவினையைத் தன்வினையாகவும் மாற்றி எழுதுக:—

புரிந்தனர், செய்த, காட்டுவோம், விளக்கியது, உருகினன், ஓட்டினேன், திருந்தினள், மருண்டது, பாய்ச்சு, மறைத்தன.



## 10. ரேடியம் கண்டறிந்த அம்மையார்

நாகரிகத்தில் சிறந்த இக்காலத்தில் நாம் பற்பல உலோகங்களைப் பயன்படுத்தி வருகின்றோம். அத் தகைய உலோகங்களில் ரேடியம் என்பது மிகவும் அரிய தும், விலையுயர்ந்ததுமாகும். இவ்வுலோகம் சென்ற நூற் ருண்டின் பிற்பகுதியில் கண்டறியப்பட்டதாகும். ரேடி யம் விஞ்ஞான வளர்ச்சிக்குப் பேருதவி அளிப்பதுடன் உலக மக்களின் வாழ்க்கையிலும் அளவிறந்த நன்மை களைப் புரிந்து வருகிறது.

ரேடியம் மிகவும் அதிசயமான உலோகமாகும். பிராண வாயுவின் தொடர்பு இல்லாமலேயே அது மிக்க வெப்பத்தையும் ஒளியையும் தரவல்லது. ரேடியம் பார் வைக்குச் சாதாரண உப்பைப் போலவே இருக்கும். ஆனால் அதிலிருந்து உண்டாகும் ஒளிக்கதிர்கள் மிக்க ஆற்றலுடையனவாகும். அக்கதிர்கள் நீரைப் பிரிக்கும்; இளகிய பொருளைக் கட்டியாக்கும்; கட்டியான பொருளை இளகச் செய்யும்; கண்ணாடி, வைரம் போன்றவற்றைப் பல நிறங்களுடன் ஒளிவீசச் செய்யும்; காரிருளிலும்

பேரொளி வீசும். இங்ஙனம் ரேடியம் புரியும் அற்புதங்கள் கணக்கி லடங்காதனவாம்.

மருத்துவத் துறையில் ரேடியம் மிகவும் பயன்படு கிறது. தீராத நோய்களெனக் கருதப்பட்ட பல கொடிய நோய்களைத் தீர்க்கும் சஞ்சீவியாக ரேடியம் விளங்கு கிறது. இதன் உதவியால் காலன் வாய்ப்புக இருந்த பலர் உயிர் பிழைத்துள்ளனர். சிலவகைத் தோல் வியாதிகள் ரேடியக் கதிர்களால் குணம் அடைகின்றன. கழுத்து, முகம் போன்ற இடங்களில் விகாரமாய் வளர்ந்துள்ள தசையைக் கரைப்பதில் ரேடிய ஊசிகள் பெரிதும் பயன் படுகின்றன. ரேடிய ஊசிகளை அப்பகுதிகளில் செருகி வைப்பதனால் அத்தசைப் பகுதிகள் உயிரற்றுக் காய்ந்து போகின்றன. இதற்குக் காரணம் ரேடியத்தினின்றும் வெளிப்படும் 'காமா கிரணமே' என்று அறிஞர்கள் கூறு கின்றனர். **புற்று நோய்** என்று கூறப்படும் கொடிய நோய்க்கு ரேடிய மருத்துவம் சிறந்த பயனை அளிக்கிறது. இங்ஙனம் மருத்துவத் துறையில் ரேடியம் பயன்படத் தொடங்கியதிலிருந்து மருத்துவக்கலையே ஒரு புது வளர்ச்சி பெற்றதெனலாம்.

இங்ஙனம் பல அரிய சிறப்புக்களை உடைய ரேடியம் என்னும் உலோகத்தைக் கண்டறிந்தவர் மேரி **கியூரி அம்மையார்** என்ற விஞ்ஞானியாவார். ரேடியம் கண் டறியப்பட்ட வரலாற்றுடன் அவர் வாழ்க்கை வரலாறும் இணைந்துள்ளமையால் அதனை இங்குச் சுருக்கமாகக் கூறுவோம்.

கியூரி அம்மையார் **போலந்து** நாட்டில் 1867-ஆம் ஆண்டில் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தார். அவர் தந்தையார் **ஸ்க்லொடவஸ்கி** என்பவராவார். தாயார் **ஸ்க்லொடவஸ்கா** என்பவராவார். தந்தையார் ஆசிரியப் பணி புரிந்து வந்தார். கியூரி அம்மையார் விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பதற்கேற்ப இளமையிலேயே நுண்ணறிவும் உயரிய குணங்களும் வாய்க்கப் பெற்று விளங்கினார். ஒரு சமயம் அவர் தம்மைப் போன்ற சிறு குழந்தைகளுடன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்த

போது கைபார்த்துக் குறி சொல்லும் குறிக்காரி ஒருத்தி அம்மையாரின் கையைப் பார்த்து, 'அம்மா! நீ உலகம் போற்றும் ஒப்பற்ற புகழை அடைவாய்,' என்று கூறினாள். குறிக்காரி கூறிய அம்மொழி கியூரியாரின் பிற்கால வாழ்வில் உண்மையாயிற்று.

மேரியின் பெற்றோர் எளியவர்களாதலின் அவர்களால் மேரியைப் பள்ளிக்கனுப்பிப் படிக்கவைக்க இயலவில்லை. எனினும் மேரியம்மையார் தம் தமக்கையின் உதவியால் தாமாகவே வீட்டில் எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டார். பெற்றோர்கள் குழந்தையின் அறிவையும் கல்வி ஆர்வத்தையும் கண்டு களிப்படைந்தனர்; இத்தகைய கூர்மையான அறிவு வாய்ந்த மேரியைப் பள்ளிக்கனுப்பிப் படிக்கவைக்க இயலாத தம் நிலையை எண்ணி ஏங்கினர். மேரிக்கு ஒன்பதாம் வயது நடக்கையில் அவருடைய அருமை அன்னையார் உலக வாழ்வு நீத்தனர். அதனால் குழந்தைகளை வளர்க்க வேண்டிய பொறுப்பு முழுதும் தந்தையாரைச் சார்ந்தது. அவர் அரும்பாடுபட்டு ருஷ்யக் கல்வி கற்பிக்கும் பாடசாலை ஒன்றில் மேரியைச் சேர்த்தார். மேரி அம்மையார் ஆறாண்டுகள் ஆர்வத்துடன் கல்வி கற்று இலக்கியம், கணிதம், விஞ்ஞானம் முதலிய துறைகளில் மிகவும் வல்லவரானார். அவர் மனம் விஞ்ஞான ஆராய்ச்சியைப் பெரிதும் விரும்பியது. தம் கல்வி முடிந்ததும் விஞ்ஞான அறிவை மேலும் வளர்த்துக்கொள்ள வாய்ப்பு இல்லையே என்று அம்மையார் மிகவும் வருந்தினர்.

மேரியின் தந்தையார் மேரியை மேற்படிப்புப் படிக்க அனுப்புவதற்கு விரும்பினர். எனினும் அவருடைய ஏழ்மை நிலை அதற்கு இடந்தரவில்லை. மேரியம்மையார் எங்ஙனமேனும் உயர்தரக் கல்வி கற்று விஞ்ஞானத்தில் பெரும் புலமை பெற விரும்பினர். அக்காலத்தில் பெண்கள் சேர்ந்து பயிலக்கூடிய கல்லூரிகள் அங்கு இல்லாமையால் மேரியம்மையார் பாரிஸ் சென்று அங்குள்ள பெண்கள் கல்லூரியில் சேர்ந்து பயில்வதென முடிவுசெய்தனர். அங்ஙனமே அவர் அரும்பாடுபட்டுப் பாரிஸில் உள்ள

**சார்போர்ன்** பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினார்.

பிரான்ஸ் நாட்டின் தலைநகராக விளங்கிய **பாரிஸ்** நகரம் நாகரிகத்தில் முதன்மையானது; ஆடம்பர வாழ்க்கைக்கு உறைவிடமானது. அந்நகரில் மேரியம்மையார் எளிய நிலையில் ஒரு கல்லூரி மாணவியாய்க் கல்வி பயின்றது அவருடைய மனத் துணிவுக்கு உதாரணமாம். அவரைப் போன்ற கல்லூரி மாணவியர் பலர் அவருடைய எளிய தோற்றத்தைக் கண்டு நகைத்தனர்; அம்மையாரின் மனம் புண்படும்படி பேசினர். எனினும் கருமமே கண்ணாகக்கொண்ட மேரியம்மையார் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. கற்றவர்க்குக் கல்வியே அணியாவதன்றி வேறு அணிகளும் வேண்டுமோ? ஆதலால் அம்மையார் போலி நாகரிகமான ஆடம்பரங்களை வெறுத்து அமைதியோடு வாழ்ந்து கல்வி கற்று வரலானார். அவரிடம் ஆடம்பரமான உடைகள் இல்லாமை மட்டுமன்று, வாழ்க்கைக்கு இன்றியமையாத கம்பளம் போன்ற ஆடைகளும் இல்லை. அவர் எளியவர் வாழ்ந்த பகுதியில் ஒரு வீட்டின் ஆறும் மாடியில் அறையை அமைத்துக் கொண்டிருந்தார். குளிர் காலத்தில் அங்கு நீரும் உறைந்துவிடும். அந்நடுக்கும் குளிரில் அம்மையார் பட்ட துன்பங்கள் அளவற்றனவாம். எத்தனையோ நாட்கள் உண்ண உணவும் இல்லாமல் சிறு ரொட்டித் துண்டையும் தேநீரையுமே உணவாகக் கொண்டு அம்மையார் வாழ்ந்துவந்தார். கல்வியில் அவருக்கிருந்த பேரார்வத்தால் அவருக்கு இத்துன்பங்கள் எல்லாம் அற்பமாகவே தோன்றின.

மேரியம்மையார் கல்வி கற்கும்போது கல்வி கற்பதற்குச் செலவாகும் பொருளையும் தாமே ஈட்ட வேண்டியவரானார். அதனால் அவர் ஒழிந்த நேரங்களில் எல்லாம் பல குழந்தைகட்குக் கல்வி கற்பித்துச் சிறிது பொருளீட்டினார்; விஞ்ஞான ஆராய்ச்சி நிலையங்களில் பணியாளர்கள் செய்ய வேண்டிய, கண்ணாடிக் குப்பிகளைக் கழுவும் பணியினைத் தாம் மேற்கொண்டு அதன் மூலம் சிறிது பொருளீட்டினார். இங்ஙனமெல்லாம் வருந்தி உழைத்து

ஈட்டிய பொருளைக் கொண்டு மேரியம்மையார் ஐந்தாண்டுகள் விஞ்ஞானக் கல்வியைத் தொடர்ந்து கற்றுப் பெரும் புலமை பெற்ருர். அம்மையாரின் விடாமுயற்சி பாராட்டற் குரியதன்றோ ?

'இனம் இனத்துடன் சாரும்' என்பது பழமொழி. 'கற்ருரைக் கற்ருரே காமுறுவர்' என்பதற்கேற்ப அம்மையாரின் வாழ்வில் ஓர் அருஞ் செயல் நடைபெற்றது. விஞ்ஞானக் கல்லூரியில் **பியரி கியூரி** என்பவர் ஆசிரியராக இருந்தார். மேரி அம்மையார்க்கு விஞ்ஞானத்தில் பெரும் புலமையுடைய அவரிடம் மதிப்பும் நட்பும் உண்டாயின. அங்ஙனம் உண்டாகிய அந்நட்பே நாளடைவில் முதிர்ந்து அவர்களிருவருக்கும் திருமணம் நடைபெறுவதற்குக் காரணமாயிற்று. மேரியம்மையார் 1895-ஆம் ஆண்டில் பியரி கியூரியை மணந்துகொண்டு இல்லற வாழ்வைத் தொடங்கினர்.

பியரி கியூரி ஓர் எளிய ஆசிரியர். எனவே அவர்களிருவரும் தம் குடும்பத்தை நடத்த மிகவும் வருந்தி உழைக்க வேண்டியவராயினர். மேரியம்மையாரும் ஆசிரியப் பயிற்சி பெற்று ஆசிரியப் பணி புரியலாயினர். இரண்டாண்டுகளில் அவர்கட்கு ஒரு பெண் மகவு பிறந்தது. அக்குழந்தையே பிற்காலத்தில் தம் அன்னையைப் போலவே பெரும் புகழ்பெற்ற **ஐரீன் கியூரி**யாவார். இவ்வளவு இன்னல்களுக்கிடையிலும் விஞ்ஞானக் காதலராகிய அவ்விருவரும் விஞ்ஞான ஆராய்ச்சிகளைப் புரிவதில் தம் காலத்தின் பெரும்பகுதியைச் செலவிட்டு வந்தனர்.

1897-ஆம் ஆண்டில் **பெக்ரல்** என்னும் பிரெஞ்சு விஞ்ஞானி **யூரேனியம்** என்னும் பொருளிலிருந்து ஓர் ஒப்பற்ற ஒளி உண்டாவதைக் கண்டறிந்தார். அதற்குக் காரணம் என்ன என்பது அவருக்கு விளங்கவில்லை. கியூரி அம்மையார் அதன் காரணத்தை ஆராய்ந்தறிய ஆவல் கொண்டார். பலநாட்கள் செய்த ஆராய்ச்சியின் பயனுகத் **தோரியம்** என்னும் மற்றோர் உலோகத்திலும் அத்தகைய ஒளி வீசுவதை அம்மையார் கண்டறிந்தார்.

அங்ஙனம் ஆற்றல் மிகுந்த ஒளியைத் தரும் பொருள் யாது என்பதனை ஆராய்ந்தறிய மேரியம்மையாரும் அவர் கணவனாரும் அரும்பாடு பட்டனர். யூரேனியம் எடுக்கப் பட்ட தாரெண்ணெய்க் கட்டியை மேலும் ஆராய்ந்து, அதில் கலந்துள்ள பல மூலப் பொருள்களையும் பிரித்துப் பார்த்தபோது, அதில் யூரேனியம், தோரியம் ஆகிய இரண்டினும் மிகவும் ஆற்றல் வாய்ந்த வேறொரு பொருள் இருப்பது புலப்பட்டது. அங்ஙனம் அரும்பாடுபட்டுக் கண்டறிந்த அப்பொருளுக்கு அம்மையார் தம் தாய் நாட்டுப் பற்றினால் '**பொலோனியம்**' என்று பெயரிட் டனர். அவருடைய தாய் நாட்டுப் பற்றை என்னென்று புகழ்வது!

இங்ஙனம் பொலோனியம் கண்டறியப்பட்ட பின்பு மிகுந்திருந்த தார் எண்ணெய்க் கட்டியில் பொலோனி யத்தைவிட ஆற்றல் மிகுந்த மற்றொரு பொருளும் இருப் பதாகத் தோற்றியது. மேரியம்மையார் அதனைக் கண் டறிய விரும்பினார். அதனால் அவர் ஒரு டன் எடையுள்ள தார் எண்ணெய்க் கட்டியை வாங்கித் தம் வீட்டுத் தோட் டத்தில் உள்ள ஒரு பழைய கொட்டிலையே ஆராய்ச்சி நிலையமாகக் கொண்டு அப்புதிய பொருளைக் கண்டறியத் தொடங்கினார். பியரி கியூரியார், அம்மையார்க்கு அவ்வா ராய்ச்சியில் பேருதவி புரிந்தார். இருவரும் இரவென்றும் பகலென்றும், மழை என்றும் வெயிலென்றும் பாராமல் ஓயாதுழைத்தனர். அவர்கள் புரிந்த ஆராய்ச்சி மிகவும் அபாயகரமானது. ஒரு டன் தார் எண்ணெய்க் கட்டி யுடன் ஐந்து டன் இரசாயனப் பொருள்களைக் கலந்து உருக்கி நான்காண்டுகள் அரும்பாடுபட்டு ஆராய்ந்தனர். இந்த ஆராய்ச்சியினால் பியரியாரின் கைகள் ஒரு முறை வெந்துபோயின. மேரியாரின் உடல் நலம் பெரிதும் பாழ் பட்டது. எனினும் அவர் உள்ளம் தளரவில்லை; விடா முயற்சியுடன் உழைத்தார். நான்காண்டுகளுக்குப் பின் அம்மையார் தாம் கருதிய அந்த அரிய பொருளைக் கண் டறிந்தார். ஒரு டன் எடையுள்ள அப்பொருளிலிருந்து ஆறு தானிய எடையுள்ள அப்புதுப் பொருள் பிரித்தெடுக்

கப்பட்டது. அங்ஙனம் கண்டறியப்பட்ட புதுப்பொருளே உலகம் போற்றும் ரேடியம் ஆகும். அதிலிருந்து உண்டாகிய ஒளிக்கதிர்கள் யூரேனியத்தின் ஒளிக்கதிர்களை விட இருபது இலட்சம் மடங்கு அதிக ஆற்றலுடையனவாக இருந்தன.

அம்மையார் கண்டறிந்த இப்புதிய உலோகத்தின் புகழ் உலகெங்கும் பரவியது. அதனுடைய அற்புதமான பயன்களை அறிந்த அறிஞர்கள் அனைவரும் கியூரி தம்பதிகளைப் பாராட்டினர். பேரும் புகழும் பட்டமும் பரிசுகளும் மேரியம்மையாரை நாடி வரலாயின. பியரி கியூரியார் சார்போர்னில் பௌதிகப் பேராசிரியரானார். அமெரிக்கத் தொழிற்சாலை அறிஞரிடமிருந்து ரேடியம் தயாரிக்கும் முறையை அறிவிக்குமாறு ஒரு கடிதம் இவர்கட்கு வந்தது. பியரியார் அம்முறையைத் தமக்கே சொந்தமாகச் செய்து கொள்ளலாம் என்று கருதினர். ஆனல் மேரியம்மையாரோ விஞ்ஞானிகள் அறிந்த உண்மை உலகப் பொது நன்மைக்கே உதவவேண்டும் என்று விரும்பியதால் அம்முறை அமெரிக்காவுக்கு அறிவிக்கப்பட்டது. அம்மையாரின் தந்நலம் கருதாத் தன்மைக்கு இதனினும் வேறு சான்று வேண்டுமோ? அம்மையார் விரும்பியிருந்தால் தாமறிந்த ரேடியத்தின் மூலம் பெரும் பொருளீட்டியிருக்கலாமன்றோ?

அம்மையார் ரேடியம் கண்டறியும் முறையை அமெரிக்காவிற்கு அறிவித்ததோடு அமையாமல் அவரும் அவர் கணவனருமாகச் சேர்ந்து 'யாம் கண்டறிந்த ரேடியம்' என்ற அரிய நூலை வெளியிட்டு அம்முறையை உலகப் பொது உடைமை ஆக்கினர். அதனல் உலகத்தார், அவருடைய தந்நலமற்ற தன்மையையும், அவர் கண்டறிந்த ரேடியத்தின் தன்மையையும், அதனைக் கண்டறிய அவர் மேற்கொண்ட பேருழைப்பினையும் அறிந்து கொள்ள வாய்ப்பு ஏற்பட்டது. 1903-ஆம் ஆண்டு இங்கிலாந்து மக்கள் கியூரி தம்பதிகளை வரவேற்று உபசரித்தனர். லண்டன் ராயல் கழகத்தார் அவர்கட்கு டேவி பதக்கம்

வழங்கிப் பெருமைப் படுத்தினர். அதே ஆண்டில் அவர்கட்கு உலகம் புகழும் நோபல் **பரிசும்** வழங்கப்பட்டது.

இங்ஙனம் பல வகையிலும் சிறப்புற்றமையால் கியூரி தம்பதிகள் மேலும் பல விஞ்ஞான ஆராய்ச்சிகளில் பேரூக்கத்துடன் ஈடுபடலாயினர். ஆனல் அவர்கள் ஆராய்ச்சியின் பயனை அடைய உலகம் கொடுத்து வைக்கவில்லை என்றே கூறலாம். பியரி கியூரியார் எதிர் பாராதவகையில் ஒரு விபத்தினுல் உயிர் துறந்தார். அதனுல் அம்மையார் அடைந்த துன்பத்தை அளவிட்டுக் கூறவும் இயலுமோ? எனினும் விஞ்ஞான ஆராய்ச்சியில் அம்மையாருக்கிருந்த பேரார்வத்தாலும், உலகத்திற்குச் சேவை செய்ய வேண்டும் என்ற பரந்த மனப்பான்மையாலும் அம்மையார் அத்துன்பத்தை ஒருவாறு ஆற்றிக் கொண்டு தொடர்ந்து தம் ஆராய்ச்சியைப் புரிந்து வரலானுர்; பலருடைய வற்புறுத்தலால் தம் கணவர் வகித்த பேராசிரியர் பதவியை ஏற்று அருந்தொண்டாற்றினுர்.

மேரி கியூரி அம்மையார் இரசாயனத் துறையிலும் பேரறிவு படைத்திருந்தமையால் 1911-ஆம் ஆண்டு இரசாயன ஆராய்ச்சிக்கென இரண்டாம் முறையும் அம்மையாருக்கு நோபல் பரிசு வழங்கப்பெற்றது. தம் வாழ்க்கையில் இரண்டு முறை இப்பரிசைப் பெற்றவர் இவர் ஒருவரேயாவர்.

இங்ஙனம் அறிவுத்துறையில் சிறந்து விளங்கிய மேரி கியூரியார் பொது நலத் தொண்டிலும் பெரும் பங்கு கொண்டார். 1914-ஆம் ஆண்டில் நடந்த உலகப் பெரும் போரில் அம்மையார் புரிந்த தொண்டு உலகப் புகழ் பெற்றதாகும். அவர் ரேடிய சிகிச்சை வண்டி ஒன்றை அமைத்து அதன் உதவியால் போர்க்களத்தில் குண்டடி பட்ட வீரர்களுக்குச் சிகிச்சை செய்து எண்ணற்றவர்களைக் காப்பாற்றினுர்.

அவர் புரிந்த அத் தொண்டின் மேன்மையை உணர்ந்த அமெரிக்கப் பெண்மணிகள் அம்மையாரை

அமெரிக்காவிற்கு அழைத்துப் பெருஞ்சிறப்புச் செய்த துடன் லட்சம் டாலர் மதிப்புள்ள ரேடியத்தையும் நன் கொடையாக வழங்கினர். தம் நலம் கருதாத கியூரி அம் மையார் அதனை வார்ஸா நகரில் தம் பெயரால் நிறுவப் பட்ட ரேடிய ஆராய்ச்சி நிலையத்திற்கு நன்கொடையாக வழங்கி விட்டனர்.

இவ்வாறு தம் ஆயுட்காலம் முழுதும் விஞ்ஞான வளர்ச்சிக்கும் பொதுநலத் தொண்டிற்கும் அரும்பணி யாற்றிய கியூரி அம்மையார் 1934-ஆம் ஆண்டு தம் புக ழுடலை நிறுவி மறைந்தார். எனினும் அவர் கண்டறிந்த ரேடியமும் அதன் மூலம் நாள்தோறும் விஞ்ஞான உலகில் விளைந்து கொண்டிருக்கும் புத்தம் புதிய ஆராய்ச்சிகளும் உலகிற்கு அவர் புகழை அறிவித்துக் கொண்டிருக் கின்றன.

## அருஞ்சொல் விளக்கம்

கதிர் - கிரணம்; சஞ்சீவி - சிறந்த மருந்து; வாய்ப்பு - சந்தர்ப்பம்; டாலர் - அமெரிக்க நாணயம்: ஏறக்குறைய ஐந்து ரூபாய் மதிப்புடை யது; நன்கொடை - அன்பளிப்பு.

## வினாக்கள்

1. ரேடியத்தின் தன்மைகள் யாவை?
2. ரேடியம் மருத்துவத் துறையில் எவ்வகைகளில் பயன்படுகிறது?
3. விஞ்ஞான வளர்ச்சிக்கு ரேடியம் புரிந்த உதவி யாது?
4. மேரி கியூரி அம்மையாருக்கு விஞ்ஞானக் கல்வி கற்பதில் இருந்த ஆர்வத்தை விளக்குக.
5. பியரி கியூரியாரை மேரி எங்ஙனம் மணந்தார்?
6. பொலோனியம்—சிறு குறிப்பு வரைக.
7. ரேடியம் கண்டறியப்பட்ட வரலாற்றைச் சுருக்கி வரைக.
8. கியூரி அம்மையாரின் தந்நலம் கருதாத் தன்மைக்கு இரண்டு உதாரணங்கள் தருக.
9. மேரி கியூரி அம்மையார் பெற்ற பெருமைகள் யாவை?

## மொழிப் பயிற்சி

**I. பிரித்து எழுதுக :—** காரிருள், கணக்கிலடங்காதன, நுண்ணறிவு, மேற்படிப்பு, நல்லுரை.

**II. சேர்த்து எழுதுக :—** பெருமை + ஒளி ; வேறு + ஒரு ; ஓயாது + உழைத்தனர் ; ஆயுள் + காலம் ; பணி + ஆற்றிய.

**III. சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுதுக :—** கருமமே கண்ணுக, அரும்பாடுபட்டனர், மழையென்றும் வெயிலென்றும், புத்தம்புதிய, நன்கொடை, வாய்ப்பு.

**IV. அடைப்புக் குறிகளில் குறிப்பிட்டவாறு வாக்கியங்களை மாற்றி எழுதுக :—**

1. ரேடியம் விஞ்ஞான வளர்ச்சிக்குப் பேருதவி யளிப்பதுடன் உலக மக்களின் வாழ்க்கையிலும் அளவிறந்த நன்மைகளைப் புரிகிறது. (தனி நிலை வாக்கியங்களாக்குக)
2. மேரியின் பெற்றோர் எளியவர் ; எனவே அவளைப் பள்ளிக் கனுப்பிக் கல்வி கற்பிக்க இயலவில்லை. (கலவை வாக்கிய மாக்குக)
3. மாணவியர் அவரது எளிய தோற்றத்தைக் கண்டு நகைத் தனர் ; அவர் மனம் புண்படும்படி பேசினர் ; ஆயினும் மனம் தளரவில்லை. (கலவை வாக்கியமாக்குக)
4. ஆண்டுதோறும் மாணவர்க்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. (செய்வினை வாக்கியமாக்குக)
5. புதிய உலோகத்தின் புகழ் உலகெங்கும் பரவியது. (எதிர் மறை வாக்கியமாக்குக)
6. மேரி கியூரி அம்மையார் எண்ணற்ற போர் வீரர்களைக் காப் பாற்றினர். (செயப்பாட்டு வினை ஆக்குக)

## இலக்கணம்

1. **வா, போ, நில்**—இச்சொற்கள் கட்டளைப் பொருளில் (ஏவல் பொருள்) வந்துள்ளன. இவை நீ வா (போ, நில்) என முன்னிலையில் ஒருவனைக் குறிக்கும். இவை போன்ற சொற்கள் **ஏவல் ஒருமை வினை** எனப்படும்.

2. **வம்மின், போம், நில்லுங்கள்**—இச்சொற்கள் கட்டளைப் பொருளில் வந்து முன்னிலையில் பலரைக் குறிக்கின்றன. இவை **முன்னிலைப் பன்மை** எனப்படும். இங்கு மின், உம், உம்கள் என்பன விகுதிகளாம்.

3. சிலவிடங்களில் வேண்டும் என்னும் சொல் வினைச் சொல்லுடன் சேர்ந்து ஏவல் ஒருமை, பன்மை வினைகளாக வருதலும் உண்டு.

(உ - ம்.) நீ பாடம் படிக்க **வேண்டும்**—ஏவல் ஒருமை.

நீவிர் காலையில் வர வேண்டும்—ஏவல் பன்மை.

4. **தோன்றுக, வாழ்க, அழிக, கற்க**—இச்சொற்கள் தன்மை முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களிலும் வரும். இவை வேண்டுதல், வாழ்த்துதல், வைதல் முதலிய பொருள்களில் வருவதுண்டு. இவைகளுக்கு **வியங்கோள் வினைமுற்றுக்கள்** என்பது பெயர்.

வாழ்க, வாழிய, வாழியர்—இச்சொற்களில் ‘க’, இய, ‘இயர்’ என்னும் வியங்கோள் வினைமுற்று விகுதிகள் வந்துள்ளமை காண்க.

5. நளன் **கூறும்.** தமயந்தி **கூறும்**—இவ்வாக்கியங்களில் உள்ள வினைமுற்றுக்களில் உம் என்னும் விகுதி சேர்ந்துள்ளது. நளன் கூறுவான். தமயந்தி கூறுவாள் என்பதே இவ்வாக்கியங்களின் பொருளாம். கூறும் என்னும் வினை **செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று** எனப்படும். இங்குக் கூறும் எனும் வினை முற்று முறையே ஆண்பாலிலும் பெண்பாலிலும் வந்தது. செய்யும் என்னும் வினைமுற்று படர்க்கையில் ஆண், பெண், ஒன்று, பலவின் பால்களில் மட்டுமே வரும்; தன்மை, முன்னிலை, படர்க்கைப் பலர்பால் ஆகிய இடங்களில் வராது.

6. நான், நாம், நீ, நீவிர், அவன், அவள், அவர், அது, அவை—இவற்றுடன் **வேறு, இல்லை, உண்டு** என்னும் குறிப்பு வினைமுற்றுக்கள் சேர்ந்து வரும். இவை ஐம்பால் மூவிடங்களிலும் பொதுவாக வரும் குறிப்பு வினைமுற்றுக்களாம்.



# 11. மேட்டூர் அணை

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது வள்ளுவர் வாய் மொழியாகும். இது தனிப்பட்ட ஒருவருக்கு மட்டுமன்றி ஒரு நாட்டுக்கும் சாலப் பொருந்தும். இன்று உலகில் தலைசிறந்து விளங்கும் நாடுகள் யாவும் செல்வத்தில் சிறந்து விளங்குதல் கண்கூடு. எனவே ஒரு நாடு உலகில் சிறந்து நாகரிகத்தில் முதிர்ந்து மற்றைய நாடுகள் தலைவணங்கப் பெருமை பெறவேண்டுமாயின் அந்நாட்டின் பொருளாதார நிலை உயர்ந்திருத்தல் வேண்டும். ஒரு நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்துவதில் ஆறுகள் மிகவும் பயன்படுகின்றன. ஆனல் ஆற்றில் பாயும் நீர் யாதொரு பயனுமின்றிக் கடலில் கலந்துவிட்டால் அவ்வாற்ருல் யாதொரு நன்மையையும் பெறல் இயலாது. ஆறுகளின் நீரைத் தேக்கிக் கால்வாய்களின் மூலம் வயல்களுக்குப் பாயுமாறு செய்து பலவகைப் பொருள்களும் செழித்து வளருமாறு செய்வதே நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்துவதாகும்.

இவ்வகையில் ஆறுகளின் குறுக்கே உள்ள அணைகள் மிக்க நன்மையை அளிக்கின்றன. எனவே அணைகளே நாட்டின் பொருளாதார நிலைக்கு அடிகோலுகின்றன என்று கூறுதல் பொருந்தும்.

அத்தகைய அணைகள் இருவகைப்படும். உழவு, படகுப் போக்குவரவு ஆகிய செயல்களுக்காக நீரின் மட்டத்தை உயர்த்தவும், ஆற்று நீரைக் கால்வாய்களின் மூலமாகத் திருப்பவும் கட்டப்படும் அணைகள் முதல் வகையைச் சார்ந்தவை. இவை ஆற்றின் அகலத்தின் அளவே இருக்கும். அதிக உயரம் இரா. பெருவாரியான நீரைத் தேக்கி நீர்ப்பாசனத்துக்கு வேண்டியபோது பயன்படுத்திக் கொள்ளும் வகையில் அமைந்த அணைகள் இரண்டாம் வகையைச் சார்ந்தவை. இவை ஆற்றின் அகலத்தைவிடப் பன்மடங்கு அதிக அகலமாயும் மிக உயரமாகவும் அமைந்திருக்கும். இவை பெரும்பாலும் பள்ளத்தாக்குகளின் குறுக்கே கட்டப்பட்டிருக்கும். இத்தகைய அணைகளால் பல சதுர மைல் பரப்பு நீர் தேங்கி நிற்கும்.

இவ்விருவகை அணைக்கட்டுக்களும் நம் தமிழ்நாட்டில் பாய்ந்தோடும் காவிரியின் குறுக்கே அமைந்துள்ளன. மேலணை, கல்லணை, வெண்ணாறு வெட்டாறு ரெகுலேடர் ஆகியவை முதல் வகையைச் சார்ந்தவை. கிருஷ்ண ராஜ சாகரம், மேட்டூர் அணை ஆகியவை இரண்டாம் வகையைச் சார்ந்தவை. இரண்டாம் வகை அணைகள் நீர்த் தேக்கங்கள் என்றும் வழங்கப்படும். இவற்றுள் உலகப் புகழ் பெற்றதும் தென்னாட்டில் உள்ள அணைக் கட்டுக்களுக்குள் மிகப் பெரியதும் மேட்டூர் அணையேயாகும்.

காவிரியாறு மைசூர் நாட்டைத் தாண்டிக் கோயம் புத்தூர், சேலம் மாவட்டங்களின் எல்லையாகப் பாய்கிறது. அப்பகுதி மலைகளடர்ந்துள்ளமையால் அவ்விடங்களில் அருவிகள் சில ஏற்பட்டுள்ளன. இங்ஙனம் காவிரி மலைகளின் நடுவில் துள்ளிக் குதித்துப் பாய்ந்து வரும் அவ்விடத்தில் ஒரு பகுதியில் அதன் இரு பக்கங்களிலும்

**சீதா மலை, பால மலை** என்னும் மலைகள் ஆற்றிற்கு இரு புறமும் கரை அமைத்ததுபோல் அமைந்து உள்ளன. அவை ஒன்றையொன்று தொடுவதுபோல் ஓரிடத்தில் மிக நெருங்கி வந்துள்ளன. இங்கு ஆறு குறுகலாக அமைந்துள்ளது. வடக்குப் புறத்தில் ஒரு பெரிய பள்ளத்தாக்கு அமைந்துள்ளது. இவ்விடத்தில்தான் முன்பு **மேட்டூர்** என்னும் ஊர் மிகச் சிறிய கிராமமாக இருந்தது.

சோழ நாட்டில் காவிரியாற்றின் குறுக்கே பல அணைகளும் மதகுகளும் உள்ளன. ஆயினும் காவிரியில் வெள்ளம் வரும்போது மட்டுமே அதன் நீர் பயன்பட்டது. பல அணைகள் இருந்தும் வருட முழுதும் பயிர்த்தொழில் செய்வதற்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கவில்லை. இதனால் அரசாங்கத்தார் காவிரியின் போக்கில் மேற்குப் பகுதியில் ஓரிடத்தில் ஒரு சிறந்த நீர்த்தேக்கத்தை அமைக்க முடிவு செய்தனர். மேட்டூரின் அருகில் கிழக்கிலுள்ள சீதா மலைக்கும், மேற்கில் உள்ள பால மலைக்கும் இடையே காவிரியின் குறுக்கே ஓரணை கட்டினால் சோழ நாட்டில் வருட முழுதும் பயிர்த் தொழிலுக்கு வேண்டிய ஏராளமான தண்ணீரைத் தேக்கி வைக்கலாம் என நிபுணர் கண்டனர். இதைப் பற்றிய பெரிய திட்டம் ஒன்றைக் **கர்னல் எல்லிஸ்** என்பார் தயாரித்து அரசாங்கத்துக்கு அளித்தார்.

1925-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 20-ஆம் நாள் சென்னைக் கவர்னர் **கோஷன் பிரபு** மேட்டூர் அணைத் திட்டத்தைத் தொடங்கி வைத்தார். முன்னேற்பாடுகள் மூன்றாண்டுகள் தொடர்ந்து நடைபெற்றன. 1928-ஆம் ஆண்டில்தான் அணைக்கட்டின் அடிப்படை தொடங்கப் பெற்றது. அணை கட்டுவதற்கு உதவியாக மின்சாரம் சிவசமுத்திரத்திலிருந்து கொண்டு வரப்பட்டது. நம் நாட்டில் வேறு எங்கும் பயன்படுத்தப்படாத நவீன இயந்திரங்கள் இவ்வேலையில் ஈடுபடுத்தப்பட்டன. அவற்றில் 306 அடி உயரமும் 64 சக்கரங்களையுடையதுமான இரண்டு பெரிய இயந்திரக் கூம்புகள் குறிப்பிடத் தக்கவை. இயந்திரங்கள் பல பயன்படுத்தப் பட்டனவேனும், மொத்த

வேலையில் ஐந்தில் நான்கு பங்கு வேலை கூலியாட்களா லேயே செய்யப்பட்டதென்பது பாராட்டத் தக்கதாம். இதனால் ஏழை மக்கள் பிழைத்ததுமின்றிச் செலவும் பெரிதும் குறைந்தது. ஆறு ஆண்டுகள் தொடர்ந்து வேலை நடந்தது. இறுதியில் இவ்வணை 450 லட்சம் ரூபா செலவில் கட்டி முடிக்கப்பட்டது. 1934-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 21-ஆம் நாள் சென்னைக் கவர் னர் ஸர். பிரடரிக் ஸ்டான்லி இவ்வணையைத் திறந்து வைத்தார்.

மேட்டூர் அணையின் அமைப்பு வியக்கத்தக்கதாம். இது 5300 அடி நீளமும், 176 அடி உயரமும் உள்ளது. இங்குக் காவிரியின் அகலம் 1,100 அடிகளேயாம். இவ் வணையின் மேற்பகுதி இருபதரை அடி அகலமுள்ளது. இங்கு 16 அடி அகன்ற பாதை செல்கிறது. அதன் இரு புறங்களிலும் கைப்பிடிச் சுவர்கள் உள்ளன. இவ்வணை யால் உண்டாகும் நீர்த் தேக்கம் அறுபது சதுர மைல் பரப்புடையது. அணையிலிருந்து மேற்கே முப்பத்து மூன்று மைல் வரையில் தண்ணீர் எதிர்த்து நிற்கிறது. தண்ணீரின் அதிக ஆழம் 164 அடிகளாம். இங்கு 93,500 மிலியன் கன அடி தண்ணீரைத் தேக்கி வைக்க முடியு மென்று பொறி வல்லுநர் கணக்கிட்டுள்ளனர்.

இவ்வணையில் தண்ணீர் பாய்ந்தோடுவதை ஒழுங்கு படுத்துவதற்குப் பல வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இவ்வணையில் கடல் மட்டத்தினின்று 770 அடி உய ரத்தில் பதினாறு மேல் மதகுகள் உள்ளன. அதற்குக் கீழே 750 அடி உயரத்தில் எட்டு மதகுகளும், 670 அடி உயரத்தில் ஐந்து கீழ் மதகுகளும் உள்ளன. எஃகினால் செய்யப்பட்ட மதகுக் கதவுகளை மின்சாரத்தின் உதவியால் திறக்கவும் மூடவும் கூடும். தண்ணீர் மட்டத்தின் உய ரத்திற்கேற்றபடி மதகுகள் வேண்டியவாறு திறக்கப்படும். அதிக வெள்ளம் நேர்ந்தால் அணைக்கு யாதோர் ஆபத்தும் நேராதவாறு காக்க அணைக்கு வடக்கே ஒரு கால்வாய் வெட்டப்பட்டிருக்கிறது. வெள்ளம் நேருங் காலத்தில் இக்கழிவு நீர் வாய்க்காலின் வழியே மிகுதியான தண்ணீர்

அனுப்பப்படுகிறது. இவ்வணை மிகவும் பெரிதாகையால் இதன் நடுவில் ஒரு கசிவு நீர்ச் சுரங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இஃது அணையைப் பழுது பார்க்கவும், கசிவுநீர் வெளிப்படவும் பெரிதும் துணைபுரிகிறது. இத்தகைய பல வசதிகளால் மேட்டூர் அணை உலகப் புகழ்பெற்ற அணைகளில் ஒன்ருகக் கருதப்படுகிறது.

மேட்டூர் அணையின் சிறப்பை நேரில் கண்டவர்களே நன்கு உணர்தல் கூடும். கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் அகன்ற நீர்ப்பரப்பும், அருகிலுள்ள குன்றுகளும் கண்கொள்ளாக் காட்சியாகும். அக்காட்சியைக் கண்டு மகிழ விரும்புவோர் மேட்டூர் அணையினருகில் ஒரு குன்றின்மீது கட்டப்பட்டுள்ள நினைவுச் சின்னத்திற்குச் சென்ருல் அணை முழுவதையும் நன்கு காணலாம். அக் கட்டடம் எண்கோண வடிவமுடையது. அதன்மீது அரைப் பந்து வடிவமுடைய அழகிய விமானம் கட்டப்பட்டுள்ளது. அக்கட்டடத்தின் உட்புறத்தில் பல நிறங்களையுடைய விளக்குகள் மங்கலான ஒளியைத் தருகின்றன. அறையின் சுவர்களில் அணையின் உருவத்தைச் சித்திரித்துள்ளனர். அணையின் மறுபுறத்தில் 34 ஏக்கர் பரப்புடைய பூஞ்சோலையொன்று அமைக்கப்பட்டுள்ளது. இவ்விடத்திற்குச் செல்வோர் அணையின் பெருமையையும் நீர்த்தேக்கத்தின் சிறப்பையும் போற்ருமலிரார்.

மேட்டூர் அணை தமிழ் நாட்டுக்குப் பல வகைகளில் பயன்படுகிறது. உழவுத் தொழிலை வளப்படுத்துவதில் இவ்வணை புரியும் உதவி முதன்மையானதாம். கல்லணையிலிருந்து வெட்டப்பட்டுள்ள நூற்றுக் கணக்கான மைல் நீளமுள்ள கால்வாய்களுக்கு ஆண்டு முழுதும் வற்ருது நீரை வழங்குவது இவ்வணையேயாம். இக்கால்வாய்களால் தஞ்சை மாவட்டத்தின் தென் கிழக்கிலுள்ள பட்டுக் கோட்டைத் தாலூக்காப் பகுதியும், தஞ்சைக்கும் திருச்சிக்கும் இடையேயுள்ள வறண்ட பகுதியும் வளமிக்க விளை நிலங்களாக மாறி வருகின்றன. உடலில் அமைந்துள்ள இரத்தக் குழாய்களைப் போல் அமைந்துள்ள கல்லணைக் கால்வாயும் அதன் கிளைக் கால்வாய்களும் தஞ்சை மாவட்

டத்தில் மட்டும் மூன்று லட்சம் ஏக்கர் புதிய நிலங்களுக்கும் பத்தரை லட்சம் ஏக்கர் பழைய நிலங்களுக்கும் நீர்ப்பாசன வசதி அளிக்கின்றன.

மேட்டூர் நீர்த்தேக்கம் உழவுத் தொழிலை மட்டுமன்றி மற்றைய பல தொழில்களையும் வளர்த்து வருகிறது. இப்பகுதியில் மண் வளமாக இருப்பதால் பருத்தி மிகுதியாகப் பயிரிடப்படுகிறது. நூல் நூற்கும் தொழிற்சாலைகள் பல இங்கு அமைக்கப்பட்டுள்ளன. இங்குள்ள காடுகளில் மூங்கில் புதர்கள் அதிகம் உள்ளன. ஆகையால் இங்குக் காகிதத் தொழிலும் வளர்ச்சி பெற்றுள்ளது. சமீப காலத்தில் இங்கு இராசயனத் தொழிற்சாலையும் சாயத் தொழிற்சாலையும் தொடங்கப்பெற்று வளர்ச்சி அடைந்துள்ளன. மற்றும் இவ்வணையின் உதவியால் உண்டாக்கப்படும் மின்சாரத்தால் வேலை செய்யும் இயந்திரசாலைகள் பலவாம். இத்தேக்கத்தில் பலவகை அரிய மீன்கள் வளர்க்கப்பட்டு வருகின்றன. இதனால் அரசாங்கத்துக்கு மிகுதியாக வருவாய் கிடைக்கிறது. இவ்வணை தோன்றிய பின்னரே மேட்டூர் சிறந்ததொரு நகரமாயிற்று.

இவ்வாறு பல வகைகளிலும் பயன்படும் மேட்டூர் அணையைப் போன்ற அணைகளை இன்னும் பலவிடங்களில் அமைத்து நாட்டின் செல்வநிலையை உயர்த்துதற்கு உழைப்போமாக.

### அருஞ்சொல் விளக்கம்

அடிகோலுதல் - முக்கியமான காரணமாதல்; சால - மிகவும்; நிபுணர் - அறிஞர்; இசைவு - சம்மதம்; அடிப்படை - அஸ்திவாரம்; பொறி வல்லுநர் - எஞ்சினியர்; ஆபத்து - அபாயம்.

### வினாக்கள்

1. ஒரு நாட்டின் பொருளாதார நிலையை அணைகளே உயர்த்துகின்றன என்று எவ்வாறு கூறலாம்?

2. அணைகளில் உள்ள இரு வகைகள் யாவை? அவற்றிடையே உள்ள வேற்றுமையை விளக்குக.

3. மேட்டூர் அணைக்கு அவ்விடம் எவ்வாறு மிகவும் பொருத்தமானதாக அமைந்தது?

4. மேட்டூர் நீர்த்தேக்கம் ஏன் இன்றியமையாததாகக் கருதப்பட்டது?

5. மேட்டூர் அணைத் திட்டம் எப்போது தொடங்கப்பெற்றது?

6. மேட்டூர் அணையின் அமைப்பையும் சிறப்புக்களையும் விவரிக்க.

7. இவ்வணை உலகிற் சிறந்ததாகக் கருதப்படக் காரணம் யாது?

8. நினைவுச் சின்னத்தைப் பற்றிக் குறிப்பு வரைக.

9. மேட்டூர் அணை நம் நாட்டின் பொருளாதார நிலையை எவ்வகைகளில் வளர்த்து வருகிறது?

## மொழிப் பயிற்சி

I. **பிரித்து எழுதுக :**—ஒன்றையொன்று, ஓரணை, மேற்பகுதி, எண்கோணம், போற்றற்குரியன.

II. **சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :**—அடிப்படையாக, அடிகோலுதல், பெருவாரியான, உருப்பெற்றன, கண்ணுக்கெட்டிய தூரம், சித்திரித்து, போற்றற்குரியன.

III. **செயப்பாட்டுவினை வாக்கியங்களாக மாற்றுக :**—

1. கர்னல் எல்லிஸ் என்பார் திட்டம் ஒன்றைத் தயாரித்து அரசாங்கத்துக்கு அளித்தார்.
2. கோஷன் பிரபு அணைத் திட்டத்தைத் தொடங்கி வைத்தார்.
3. அணைக்கு வடக்கே ஒரு கால்வாய் வெட்டியுள்ளனர்.
4. மேட்டூர் அணையின் சிறப்பை நேரிற் கண்டவர்களே உணர்தல் கூடும்.

IV. மாறு, வளர், பெறு, தோன்று, போ—இவ்வினைப் பகுதிகள் ஒவ்வொன்றையும் தன் வினையாகவும், பிறவினையாகவும் வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

## இலக்கணம்

1. மெய்யே பேசு; நீ செல்வாயோ—இங்கு மெய்யே, செல்வாயோ என்னும் சொற்களில் ஏ, ஓ என்னும் எழுத்துக்கள் சேர்ந்து வந்துள்ளன. (மெய் - பெயர்ச்சொல்; செல் - வினைச்சொல்.) இவ்வாறு தனியாக வராமல் பெயர் வினைச்சொற்களுடன் சேர்ந்து வரும் சொற்கள் **இடைச் சொற்கள்** எனப்படும். இவை பல பொருள்களில் வரும்.





**ஏகார இடைச் சொல் :**

தந்தையே வந்தார்—(தேற்றம்) **உறுதிப் பொருள்.**

அணைகளுள் சிறந்தது மேட்டூர் அணையே—**பிரிநிலைப் (பிரித்துக் கூறும்) பொருள்.**

**ஓகாரச் இடைச் சொல் :**

நீ நண்பனைக் காண்பாயோ ?—**வினாப் பொருள்.**

புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ?—**எதிர் மறைப் பொருள்.**

**உம் எனும் இடைச் சொல் :**

பாண்டவர் ஐவரும் வந்தனர்—**முற்றுப் பொருள்.**

தருமனும் பீமனும் வென்றனர்—**எண்ணுப் பொருள்.**

தேவரும் வியந்தனர்—**உயர்வு சிறப்புப் பொருள்.**

நாயும் விரும்பாத உணவு—**இழிவு சிறப்புப் பொருள்.**

**கொல் எனும் இடைச் சொல் :**

நீ நேற்று வந்தனை கொல்—**ஐயப் பொருள்.**

2. **சாலப்** பொருந்தும்—இங்கு 'சால' என்னும் சொல் மிகவும் என்ற பொருளில் வந்து, வினையின் தன்மையை விளக்குகிறது. **உறு** பசி-மிக்க பசி. உறு என்னும் சொல் பெயரின் தன்மையை விளக்கு கிறது. இவ்வாறு பெயர் வினைகளின் தன்மையை விளக்கும் சொற்கள் **உரிச் சொற்களாம்.**

# 12. கலிங்கப் போர்

## [நாடகம்]

### காட்சி 1

**இடம் :** காஞ்சிபுரத்தில் உள்ள சித்திரமாடம்.

**உறுப்பினர் :** குலோத்துங்கன், கருணாகரத் தொண்டைமான், திருமந்திரவோலை, அவையினர், சிற்றரசர், காவலன்.

**காலம் :** முற்பகல்.

**காவலன் :** பாண்டியர், சேரர் முதலான பார்த்திபர்களை வென்று, உலகனைத்தும் ஒரு குடைக் கீழாளும் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழ தேவர் வருகிறார் !

[அவையினர் அனைவரும் எழுந்து நிற்கக் குலோத்துங்கன் அரியணையில் அமர்கின்றான்]

**திருமந்திரவோலை :** வேந்தர் வேந்தே! வணக்கம். அரசர் பலர் தங்களைக் கண்டு அடிவணங்கித் திறை செலுத்த வந்துள்ளனர்.

**குலோத்துங்கன் :** காவல! அவர்களை உடனே அழைத்து வருக !

[சிற்றரசர் திறைப் பொருளுடன் வருதல்]

**சிற்றரசர் :** நானிலம் புகழும் வேந்தர் பெருமானே! வணக்கம். தங்கள் கட்டளைப் படியே நாங்கள் செலுத்த வேண்டிய திறைப் பொருள்களைத் தங்கள் திருவடிக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்துள்ளோம். ஏற்றருள வேண்டுகின்றோம்.

**தென்னவன் :** குவலயம் போற்றும் கொற்றவனே ! இரத்தின மாலைகளையும், சிறந்த பொன் ஆபரணங்களையும், நவமணிகள் பதித்துச் செய்யப் பெற்ற பதக்கங்களையும் திறைப் பொருள்களாகக் கொண்டு வந்துள்ளேன். மேலும் ஒட்டகத் திரளும் குதிரைப் படையும் வெளியே

காத்திருக்கின்றன. இவற்றை என் காணிக்கையாக ஏற்றுக் கருணைபுரிய வேண்டும்.

**சேரன் :** அரசே! இவை இரத்தினக் குவியல்கள்; இவை பொன் குவியல்கள்; இவை ஒளி மிக்க மகரக் குழைகள்; இவை அரசமாதர் அணியும் அழகிய நெற்றிப் பட்டங்கள். இவற்றுடன் களிறும் பிடியும் நிறைந்த யானைப் படையும் தங்கட்குத் திறையாகச் செலுத்து கின்றேன். இவற்றை ஏற்று இன்னருள் புரிய வேண்டும்.

[அரசர் பலரும் திறை செலுத்துகின்றனர்]

**குலோத்துங்கன் :** வேந்தர்களே! மிக்க மகிழ்ச்சி. உங்கள் அன்புடைமையைப் பெரிதும் பாராட்டுகின்றேன். அமைச்சரே! இவர்களைத் தவிர நமக்குத் திறை செலுத் தாதவரும் உளரோ?

**திருமந்திரவோலை :** அரசர்க்கரசே! கடக நாட் டரசர் முதலாக எல்லா நாட்டரசர்களும் தாங்கள் செலுத்த வேண்டிய திறைப் பொருளைச் செலுத்தி விட்டனர். ஆனால்......

**குலோத்துங்கன் :** ஆனால் என்ன?

**திருமந்திரவோலை :** வடகலிங்க நாட்டுத் தலைவ னாகிய அனந்தபத்மன் மட்டும் இருமுறையாகத் திறை செலுத்தவில்லை.

**குலோத்துங்கன் :** என்ன? அனந்தபத்மன் திறை செலுத்த வில்லையா! என்ன ஆணவம் அவனுக்கு! அமைச்சரே! இன்றே புறப்படட்டும் நம் படை. அவன் வலிமை உடைய மலைகளைக் காவலாகப் பெற்றிருப்பதால் அகந்தை கொண்டான் போலும்! அவனுடைய செருக்கை யும் அவன் நிலையென நம்பியுள்ள மலையரணையும் துகளாக்க நம் மதயானைப் படை புறப்படட்டும். செருக் குற்ற அவனைச் சிறை செய்து என் முன் நிறுத்துங்கள்.

**கருணாகரத் தொண்டைமான் :** வேந்தர் பெரு மானே! தங்கள் கட்டளையைத் தலைமேற் கொள் கின்றேன். இப்பொழுதே புறப்பட்டுச் சென்று கடல்

சூழ்ந்த கலிங்க நாட்டை அழித்து அனந்தபத்மனைச் சிறை செய்து வருகின்றேன். எனக்கு விடையருளுக.

**குலோத்துங்கன் :** அங்ஙனமே ஆகுக. (எழுந்திருத்தல்.)

**அவையினர் :** குலோத்துங்க மன்னர் வாழ்க! படைத்தலைவர் கருணாகரத் தொண்டைமான் வாழ்க! வெற்றி பெறுக!

[அவை கலைகிறது]

## காட்சி 2

**இடம் :** கலிங்க வேந்தன் அரசவை.

**உறுப்பினர் :** அனந்தபத்மன், எங்கராயன், படைத் தலைவன், அவையினர், குடிமக்கள்.

**காலம் :** பிற்பகல்.

**காவலன் :** (விரைந்து வந்து) கலிங்க நாட்டின் காவலனே! வணக்கம். நம் நாட்டுக் குடிமக்கள் பெருங் கூட்டமாய்க் கண்ணீர் விட்டுக் கதறி நம் தலை வாயிலில் கூடியிருக்கின்றனர். தங்களை விரைந்து காணவேண்டுமாம்.

**அனந்தபத்மன் :** (துணுக்குற்று) உடனே அவர்களை உள்ளே வரவிடுக.

[குடிமக்கள் வருகின்றனர்]

**குடிமக்கள் :** வேந்தே அபயம்! எங்களை ஆதரித்துக் காத்தல் வேண்டும். குலோத்துங்கனது கடல் போன்ற சேனை கருணாகரத் தொண்டைமான் தலைமையில் நம் நாட்டை நாற்புறமும் வளைத்துக் கொண்டது. மதில்கள் இடிந்தொழிந்தன. நாடு நகரங்களெல்லாம் எரிகின்றன. நாங்கள் வீடிழந்தோம்; பொருளிழந்தோம்; உயிரையும் இழக்காமல் ஓடிவந்தோம். நாங்கள் திறைகட்டுமாறு பலமுறை முறையிட்டோம். அவைகளைத் தாங்கள் பொருட்படுத்தவில்லை. இன்று அதன் விளைவை நாங்கள்

அநுபவிக்கின்றோம். எங்ஙனமேனும் எங்களைக் காத்தல் தங்கள் கடமையாம்.

[அனந்தபத்மன் அடிகளில் விழுந்து வணங்குகின்றனர்.]

**அனந்தபத்மன் :** (பெருஞ்சினங் கொண்டு கை யோடு கைபுடைத்து) ஆ! என்ன துணிவு அவனுக்கு! குலோத்துங்கன் வரவில்லையோ? அவன் படை தான் வந்ததோ! (சிரிக்கிறான்) அவனுக்கேயன்றி அவன் படைக்கே எளியவன் என்று என்னைக் கருதினான் போலும்? என்ன மதியீனம்? கலிங்க நாட்டைச் சூழ்ந்த காட்டரணும் மலையரணும் கடலரணும் அவன் கவனத் திற்கு வரவில்லையோ? கலிங்கத்தின் ஆற்றலைக் கருத் திழந்த கருணாகரனுக்குக் காட்டுகின்றேன்.

**எங்கராயன் :** அரசே! நான் கூறுவதனை அமைதி யுடன் சிந்திக்க வேண்டுகின்றேன். அரசர்கள் சீறி னாலும் அறவுரை கூறல் அமைச்சர் கடனன்றோ? தன் பகைவரை அழிப்பதற்குக் குலோத்துங்கன் படை போதாதோ? அவனே வருதல் வேண்டுமோ? அவன் படையின் ஆற்றலை உலகறியுமே! குலோத்துங்கன் படையால் பாண்டியர் ஐவரும் பட்டபாட்டினை அறி யீரோ! சேரர் சிதைந்த செய்தி நும் செவிப்படவில்லையோ! காந்தளூர்ச் சாலை, அளத்தி, நவிலை ஆகிய இடங்களை வென்றது அவன் படையன்றோ? கருணாகரத் தொண்டைமானை எளிதாகக் கருதல் வேண்டாம். அவ னோடு போர் புரியும்போது இதனை அறிவீர்கள். இன்று நான் கூறுவது தங்கட்குக் கசப்பாகத் தோன்றலாம்; பெருஞ்சினம் கொள்ளலாம். இன்று சீறினாலும் நாளை அவன் சேனை முன் நிற்கும் போது நான் கூறியதன் உண்மையை உணர்வீர்கள்.

**அனந்தபத்மன் :** ஆ! ஆ! என் வார்த்தையை மறுத்துப் பேச இமையவரும் நடுங்குவரே! உன்னைத் தவிர வேறு யாராவது இவ் வார்த்தை கூறியிருப்பின் இந் நேரம் அவர் தலை மண்ணில் உருண்டிருக்கும். பேதையே, பிழைத்துப் போ. என் தோள் வலியும் வாள் வலியும்

உணர்ந்திருந்தும் இங்ஙனம் கூறினே. இளஞ்சிங்கக் குட்டியை எதிர்த்து யானே உயிர் பிழைத்தலும் உண்டோ? படைத்தலேவரே! இப்பொழுதே நம் நால்வகைப் படையும் புறப்படட்டும். போர்! கடும் போர்! கலிங்க நாட்டின் மானத்தைக் காக்கும் போர். இதுவே என் முடிவு. புறப்படட்டும் படை!

[அவை கலேகிறது]

## காட்சி 3

**இடம் :** போர்க்களம்.

**உறுப்பினர் :** புண்பட்ட வீரன் ஒருவன், சோழப் படை வீரர் இருவர். மாற்றுருக் கொண்ட கலிங்க வீரர்.

**காலம் :** மாலே.

[சோழர் படையைச் சார்ந்த ஒரு வீரன் மார்பில் பகைவர் எறிந்த வேல் பாயப் பெற்றுக் குற்றுயிராய்க் கிடக்கின்ருன்.]

**புண்பட்ட வீரன் :** ஆ! ஐயோ! அம்மா! வலிதாங்க முடியவில்லேயே! உயிர் துடிக்கின்றதே! நா வறள்கின்றதே! ஒருவாய் தண்ணீர் கொடுப்பவரில்லேயா?

[வீரர் இருவர் உரையாடிக் கொண்டு வருதல்]

**முருகன் :** வீரா! என்ன முனகல் சப்தம் கேட்கிறது? யாரோ புண்பட்ட வீரன் ஒருவன் உயிர் துடித்துக் கொண்டிருக்கிருன் போல் உள்ளது! அவன் யாராயிருந்தால் நமக்கென்ன! பாவம்! அவனுக்கு வேண்டிய உதவி செய்வது நம் கடமையன்ருே?

[இருவரும் வீரனே நெருங்குகின்றனர்]

**வீரன் :** யாரது! நம் படைவீரன் திண்ணன் போல் இருக்கிறதே! திண்ணு! உனக்கா இக்கதி நேர்ந்தது? ஒப்புயர்வற்ற வீரனுகிய உன் மார்பில் எங்ஙனம் இவ்வேல் பாய்ந்தது?

[வேலே மெதுவாக எடுக்கின்ருன்]

**திண்ணன் :** ஆ! ஒருவாய் தண்ணீர்! ஆ! தண்ணீர்!

[முருகன் தண்ணீர் கொண்டு வந்து தந்து புண்ணைக் கழுவிக் கட்டுகின்றான்]

**திண்ணன் :** அப்பா! இப்போது தான் உயிர் வந்தது. கலிங்கவீரன் ஒருவனைத் துரத்தி வந்தபோது மற்றொருவன் திடுமெனப் பாய்ந்து என் மார்பில் இவ் வேலைப் பாய்ச்சி விட்டான். அப்படியே மயங்கி இங்கு வீழ்ந்தேன். போர்க்கள நிகழ்ச்சி ஒன்றும் நானறியேன். போரின் முடிவு யாதாயிற்று? அனந்தபத்மன் சிறைப் பட்டானா? போர் நிகழ்ச்சியைக் கேட்டாலாவது நான் சற்று என் வலியை மறப்பேன்; ஆறுதல் பெறுவேன்.

**முருகன்:** திண்ணா! என்ன என்று கூறுவேன் இன்று கலிங்கர் பட்டபாட்டை? நானும் பல போர்க் களங்களுக்குச் சென்று போர் புரிந்துள்ளேன். இன்றைய போர் போல் கடுமையான போரை நான் கண்டதேயில்லை.

[கலிங்க வீரர் சிலர் பாணர்களைப்போல உருக்கொண்டு ஓடி ஒளியச் செல்கின்றனர்.]

**முருகன் :** வீரா! அதோ வருகிறதே அக்கூட்டத்தைக் கவனி. யார் அவர்கள்!

[வீரன் ஓடிச் சென்று அவர்களை வழிமறித்து அழைத்து வருகின்றான்.]

**முருகன் :** யாரையா நீங்கள்! உங்களைப் பார்த்தால் ஐயம் உண்டாகின்றதே.

**கலிங்க வீரர்கள் :** ஐயா! நாங்கள் தெலுங்கு நாட்டைச் சேர்ந்தவர்கள்! பாடிப் பிழைக்கும் பாணர்கள்! எங்கள் உருவத்தையும் கையில் உள்ள தாளங்களையும் பார்க்கும்போதே தெரியவில்லையா? தயவுசெய்து எங்களைத் துன்புறுத்தாதீர்கள்!

**வீரன் :** ஓ, நீங்கள் பாணர்களா? உங்கள் கையில் உள்ள இவை தாளங்களாகத் தோன்றவில்லையே! யானை

மணிகளைப் போலல்லவா உள்ளன! ஏ கோழைகளே! ஏனிந்த வேஷம்!

[சிரிக்கிருன்]

**திண்ணன் :** வீரா! வீணுக அவர்களைத் துன்புறுத் தாதே பாவம்?

**முருகன் :** திண்ணு! என்னவென்று சொல்வோம் கலிங்கர் வீரத்தை! நினைத்தாலும் நகைப்பு வருகின்றது. இவர்களைப்போலவே சில கலிங்க வீரர்கள் வில்லின் நாண் கயிற்றையே முப்புரி நூலாக அணிந்துகொண்டு, "நாங்கள் அந்தணர்கள்; கங்கை நீராட வந்தோம்," என்று கூறித் தப்பி ஓடினர். மற்றும் சிலர் இரத்தத்தில் துணிகளைத் தோய்த்து அணிந்துகொண்டு, "எங்களைப் பார்த்தாலே நாங்கள் புத்த மத சந்நியாசிகள் என்று தெரியவில்லையா," எனக் கூறி மறைந்தனர். அவர்களைப் போன்றவர்களே இவர்களும்.

**திண்ணன் :** எப்படியாவது இருக்கட்டும். தோற்ருேடுபவர்களைத் துன்புறுத்தல் தமிழர் பண்பாடன்று. அவர்கள் போகட்டும்! பாவம்! அனந்தபத்மன் கதை என்ன ஆயிற்று?

**முருகன் :** கோழைகளே! ஓடிப் பிழையுங்கள்! பாவம் உங்கள் வீரப் புகழைக் கேட்க உங்கள் மனைவியர் ஆவலுடன் காத்திருப்பரன்ருே? உம், ஓடுங்கள்!

[கலிங்க வீரர் ஓடி மறைகின்றனர்.]

**வீரன் :** திண்ணு! அனந்தபத்மன் மட்டும் எப்படியோ தப்பித்துக்கொண்டு ஓடி ஒரு மலைச் சிகரத்தில் ஒளிந்து கொண்டான். கருணுகரத் தொண்டைமான் எளிதாக விடுவாரா? அவன் ஓடி ஒளிந்த இடத்தை ஒற்றர்களால் அறிந்து மலையைச் சுற்றிக் காவலிட்டு விட்டார். நம் வீரர்கள் வேலாலும் வில்லாலும் வேலி கட்டிக் காவல்புரிந்து வருகின்றனர். எப்படியும் விடிவதற்குள் அவனைச் சிறை செய்வது உறுதி.

**திண்ணன் :** அப்பா! என் உள்ளம் குளிர்ந்தது.

இனி உயிர் துறப்பதில் எனக்குக் கவலையில்லை. வெற்றிச் செய்தியை அறிந்த யான் அமைதியுடன் உயிர் துறப்பேன். வாழ்க குலோத்துங்கன்! அவன் வெற்றி ஓங்குக!

[திரை விழுகிறது]

## காட்சி 4

இடம்: குலோத்துங்கன் அரசவை.

உறுப்பினர்கள்: குலோத்துங்கன், கருணாகரத் தொண்டைமான், சயங்கொண்டார், அனந்தபத்மன், அவையினர்.

காலம்: பிற்பகல்.

**காவலன்:** கலிங்கம் எறிந்த காவலனே! நம் படைத்தலைவர் கருணாகரத் தொண்டைமான் கலிங்க நாட்டை அழித்து வெற்றிப் புகழுடன் விரைந்து வருகிறார்.

[கருணாகரன் அவைக்களம் புகுதல்]

**அவையினர்:** வாழ்க குலோத்துங்கசோழ தேவர்! வாழ்க நம் படைத்தலைவர்.

**குலோத்துங்கன்:** வருக! வருக! மாவீரனே! உன் வெற்றிப் புகழ் கேட்டுப் பெருமிதம் கொள்கின்றோம்.

**கருணாகரன்:** மூவுலகம் புகழும் சோழர் பெருமானே! வணக்கம். தங்கள் ஆற்றல் அறியாது அவமதித்த அனந்தபத்மனின் செருக்கை அடக்கினோம். மேலும் தங்கள் வெற்றிக்கு அறிகுறியாகக் கலிங்க நாட்டில் வெற்றித் தூண் நாட்டி அளவற்ற யானைகளையும் பொற் குவியல்களையும் மற்றும் கணக்கற்ற பொருள்களையும் காணிக்கையாகக் கொணர்ந் துள்ளோம். அவற்றை ஏற்றருள வேண்டுகின்றோம்.

**குலோத்துங்கன்:** மிக்க மகிழ்ச்சி! உன் ஆற்றலைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

**காவலன்:** அரசே! வணக்கம். நம் புலவர் பெருமான் சயங்கொண்டார் வருகின்றார்.

[புலவர் வருதல்]

**குலோத்துங்கன் :** (எழுந்து நின்று) வருக ! வருக ! புலவர் மணியே ! நல்ல சமயத்தில் தாங்கள் வந்தீர்கள் ! இவ்வாசனத்தில் அமருங்கள் ! கலிங்கப் போரில் நம் படை பெருமித வெற்றியுற்றது. ஆதலால் நானும் தங்களைப்போல் இப்போது சயங்கொண்டான் என்ற பெயரைப் பெற்றேன்.

**சயங்கொண்டார் :** வெற்றி வீரரே! வாழ்க ! வாழ்க! உம் வெற்றிப் புகழைக் கேட்டே விரைந்து வந்தேன். சயங்கொண்டானைச் சயங்கொண்டான் பாடுதல் முறையன்றோ ? ஆதலால் போரில் ஆயிரத்திற்கு மேற்பட்ட யானையைக் கொன்ற தங்கள் கலிங்க வெற்றியைச் சிறப்பித்துப் பரணி பாட எண்ணியுள்ளேன்.

**குலோத்துங்கன் :** புலவர் திலகமே ! மிக்க மகிழ்ச்சி! நான் பெரும் பேறு பெற்றவனாகவே கருதுகின்றேன். புலவர்பாடும் புகழைத்தவிர உலகில் சிறந்த பேறுண்டோ? அமைச்சரே !

[அமைச்சர் குறிப்பறிந்து பல பரிசில்களை எடுத்துத் தருகிறார்]

புலவர் ஏறே ! இந்த அன்புக் காணிக்கையை ஏற்று என்னை வாழ்த்தியருள வேண்டுகின்றேன்.

**சயங்கொண்டார் :** வீராதி வீரரே ! உலகம் போற்றும் தலைவரே ? என்னே உம் தமிழ்ப்பற்று ! உம்மைப் போன்ற மன்னவர் உள்ளவரையில் எம்போன்ற புலவர்க்குக் குறைவேது? வாழ்க நும் புகழ் ! வளர்க நும் கொற்றம் ! வளம் மிக்க காவிரி மணலினும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்வீராக. வாழ்க குலோத்துங்கர் ! வாழ்க தமிழ் மொழி !

**அவையோர் :** வாழ்க ! வாழ்க !

[அவை கலைகிறது]

## அருஞ்சொல் விளக்கம்

கருணாகரத் தொண்டைமான் - பல்லவ அரசன், குலோத்துங்கன் படைத்தலைவன் ; திருமந்திர வோலை - அரசாங்க அலுவல்களைச் செய்யும் அதிகாரி ; பார்த்திபர் - அரசர் ; திரிபுவனச் சக்கரவர்த்தி - மூன்று உலகங்களையும் வென்று ஆளும் பேரரசன் ; அரியணை - சிங்காசனம் ; திறை-

கப்பம் ; நானிலம் - உலகம் ; குவலயம் - உலகம் ; நவமணிகள் - முத்து, பவளம், மரகதம், கோமேதகம், நீலம், வைடூரியம், வைரம், புஷ்பராகம், மாணிக்கம் ; திரள் - கூட்டம் ; மகரக்குழை - மீன் வடிவமாகச் செய்யப் பட்ட காதணி ; களிறு - ஆண் யானை ; பிடி - பெண் யானை ; கலிங்கம் - தற்போது ஒரிஸா என வழங்கப்படும் நாடு ; அரண் - காவல் ; மாற்றுன்-பகைவன் ; அபயம் - அடைக்கலம் ; சிதைந்த - அழிந்த ; இமையவர் - தேவர் ; நால்வகைப்படை - யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை ; பாணர்கள் - இசை பாடிப் பிழைக்கும் தொழிலினர் ; முப்புரிநூல் - பூணூல் ; பண்பாடு - நாகரிகம் ; எறிந்த - அழித்த ; பெரு மிதம் - பெருமை, செருக்கு ; பரணி - போரில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனின் வீரத்தைப் பாராட்டிப் பாடும் நூல் ; கொற்றம் - வெற்றி.

## வினாக்கள்

1. குலோத்துங்கன் பெருமைகள் யாவை ?
2. சிற்றரசர்கள் செலுத்திய திறைப்பொருள்கள் எவை ?
3. கலிங்கப் போருக்குக் காரணம் என்ன ?
4. கருணாகரத் தொண்டைமான்—குறிப்பு வரைக.
5. அனந்தபத்மன் திறை செலுத்தாமை யறிந்து குலோத்துங்கன் சினந்து கூறிய மொழிகளை எழுதுக.
6. எங்கராயன் கூறிய அறிவுரைகளை எழுதுக.
7. ‘ சிங்கக்குட்டியை எதிர்த்து யானை உயிர் பிழைத்தலும் உண்டோ ’—சந்தர்ப்பம் கூறுக.
8. கலிங்க வீரர்கள் எங்ஙனம் தப்பிச் சென்றனர் ?
9. கருணாகரத் தொண்டைமான் கலிங்கத்தை வென்று செய்த செயல் யாது ? கைப்பற்றிய பொருள்கள் யாவை ?
10. பரணி என்றால் என்ன ?
11. குறிப்பு வரைக : திருமந்திரவோலை, எங்கராயன், சயங்கொண் டார்.
12. சயங்கொண்டானைச் சயங்கொண்டார் பாடுதல் முறையன்றோ ? இடம் சுட்டி விளக்கம் தருக.

# செய்யுட் பகுதி

## I. கடவுள் வணக்கம்

### சிவபெருமான்

ஒன்றொ மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்று யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்னடி யோங்களுக்கே. (1)

—திருநாவுக்கரசர்

### திருமால்

தருதுயரம் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே !
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி அதுவேபோன் றிருந்தேனே. (2)

—குலசேகராழ்வார்

### கலைமகள்

வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை இன்பம் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின்(று) ஒளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொருள் ஆவாள். (3)

—பாரதியார்

## ஏசுநாதர்

நூல்வாய்ப் புகழ்மேல் உயர்ந்தோய்நீ ;
நோய்வாய் மருந்திற் கனிவோய்நீ ;
கோல்வாய் கோடா நீதிநெறி
கொண்டெவ் வுலகும் புரந்தோய்நீ ;
வேல்வாய்க் குருதி பாய்ந்திறப்ப
மெய்கொண் டாயோ ! இதையறியாக்
கால்வாய் இலேபோல் தியங்கியவென்
கருத்திற் குணர்வை உணர்த்தாயோ ! (4)

—வீரமா முனிவர்

## முகமது நபி

சிறந்தமெய்ப் பொருளை அழிவிலா மணியைத்
தெரிந்துமுக் காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்
பிறந்தபல் லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பென்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே. (5)

—உமறுப் புலவர்

## ஆசிரியர் குறிப்புக்கள்

1. **திருநாவுக்கரசர் :** இவர் நடு நாட்டில் உள்ள திருவாமூரில் பிறந்தவர். இவருடைய இயற் பெயர் மருள் நீக்கியார் என்பதாம். இவர் பக்திச் சுவை மிகுந்த பாடல்களைப் பாடியமையால் இறைவனால் திருநாவுக்கரசர் என்னும் பெயர் பெற்றார். காலம் : கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி. இவருடைய பாடல்கள் தேவாரம் என்னும் நூலில் அடங்கும். தெய்வத்திற்குரிய பூமாலை போன்ற பாமாலை என்பதே தேவாரம் என்பதன் பொருளாம். தே + ஆரம்.

2. **குலசேகராழ்வார் :** இவர் சேர நாட்டில் மகோதை என்னும் ஊரில் பிறந்தவர் ; சேர மன்னர் மரபில் தோன்றியவர் ; வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் கவி பாடும் சிறப்புப்பெற்றவர். இவர்தம் பாடல்கள் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. காலம் : 11-ஆம் நூற்றுண்டு.

3. **பாரதியார் :** இவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த எட்டையபுரத்தில் பிறந்தார் ; இளமையிலேயே கவிபாடும் திறமை பெற்றிருந்தமையால் பாரதி என்று பலராலும் பாராட்டப் பெற்ருர் ; எளிமையும் உணர்ச்சியும் மிக்க பாடல்களைப் பாடுவதில் இணையற்றவர் ; சகோதரத்துவம், சமத்துவம், சுதந்திரம் என்னும் பண்புகளைத் தமிழ் மக்களிடையே பரவச் செய்தமையால் இவர் தேசீய கவி என்று பாராட்டப் படுகிருர். இவருடையநூல்களில் **பாஞ்சாலி சபதம்** மிகவும் சிறந்ததாம். காலம் : 1882—1921.

4. **வீரமா முனிவர் :** இவர் இத்தாலி நாட்டில் பிறந்தவர்; இயற்பெயர் **ஜோசப் பெஸ்கி** என்பதாம்; ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்; நம் நாட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்து தமிழை நன்கு கற்றுப் புலமை பெற்ருர் ; தமிழில் உரை நடை எழுதும் பழக்கத்தை உண்டாக்கினர் ; முதன்முதலில் அகராதியை வெளியிட்டார். இவர் இயற்றிய நூல்களில் சிறந்தது **தேம்பாவணி** என்னும் காவியமாகும். அதிலுள்ள பாடல் ஒன்றே பாடமாக வந்துள்ளது; காலம்: 18-ஆம் நூற்றுண்டின் முற்பகுதி.

5. **உமறுப் புலவர் :** எட்டையபுரத்தில் சமஸ்தான வித்துவானுக விளங்கியவர் ; முகமதிய மதத்தைச் சார்ந்தவர் ; சீதக்காதியின் மந்திரியாகிய அப்துல் காஸிமால் ஆதரிக்கப்பட்டவர். இவர் இயற்றிய **சீருப் புராணம்** என்னும் முகமது நபியின் வரலாற்றைக் கூறும் நூல் மிகவும் சிறப்புடையதாகும். அதிலுள்ள ஒரு செய்யுள் பாடமாகத் தரப்பட்டுள்ளது. (சீரு - பெரியோரது புகழ்) காலம் : 17-ஆம் நூற்றுண்டு.

## அருஞ்சொல் விளக்கம்

1. ஈன்ருள் - தாய் ; எந்தை - என் தந்தை ; மூன்று உலகம் - சுவர்க்கம், பூமி, பாதலம் ; படைத்து - உண்டாக்கி ; ஏன்ருன் - இசைந்தவன் ; இமையவர் - தேவர்.

2. தடாயேல் - தடுக்க மாட்டாயாகில் ; சரண் - பாதம், அடைக்கலம் ; விரை - மணம் ; குழுவு - நிறைந்த ; பொழில் - சோலை ; வித்து

வக்கோடு - ஒரூர்; அம்மான் - பெருமையுடையவன்; அரிசினம் - மிக்க சினம், கொல்வது போன்ற கோபம்; குழவி - குழந்தை.

3. குலவு - விளங்குகின்ற; கள்ளம் - வஞ்சனை; வாசகம் - சொல்.

4. மருந்தின் கனிவோய் - மருந்தைப்போல் இரங்கி உதவுகின்றவன்; கோல் - செங்கோல்; கோடா - வளையாத; புரந்தோய் - காப்பாற்றியவனே; குருதி - இரத்தம்; இறப்ப - இறக்கும் பொருட்டு; மெய் - உடல்; கால் - காற்று; தியங்கிய - சூழன்ற; வாய் - ஏழாம் வேற்றுமை உருபு.

5. பதி - இடம்; மதி - அறிவு; உறைந்து - வசித்து.

## வினாக்கள்

1. திருப்பாதிரிப் புலியூர் இறைவன் இயல்புகளைத் திருநாவுக்கரசர் எங்ஙனம் குறிக்கிறார்?

2. குலசேகராழ்வார் தம்மைக் குழந்தைக்கு உவமையாகக் கூறியமை எங்ஙனம் பொருந்தும்?

3. கலைமகள் எவ்விடங்களில் இருப்பதாகப் பாரதியார் கூறுகிறார்?

4. ஏசுநாதரின் பெருமைகள் யாவை?

5. எத்தகையவர் மண்ணில் மதி மறந்தவராவர்?

6. முகமது நபியின் சிறப்புக்களை விளக்குக.

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக:**—படைத்துகந்தான், தோன்றாத் துணை, வித்துவக் கோட்டம்மான், உட்பொருள், மருந்திற் கனிவோய், பாய்ந்திறப்ப, இதையறியா, தியங்கிய வென், முக்காலம்.

II. **நினைவில் கொள்க:**—

1. தோன்றாத் துணை - தோன்றாத துணை. தோன்றாத என்னும் சொல் பெயரெச்சமாகும்; அஃது இல்லை என்ற (எதிர்மறைப்) பொருளில் வந்தது. இச்சொல்லின் இறுதி எழுத்து (ஈறு) கெட்டுத் தோன்றாத் துணை என வந்தது. எனவே தோன்றா என்னும் சொல் **ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாம்.** இப்பகுதியில் இது போன்ற சொற்களைக் கண்டறிக.

2. இமையவர் - தேவர்; கண் இமையாதவர் என்னும் காரணம் பற்றி இச்சொல் தேவரைக் குறிக்கிறது. இது போன்ற சொற்கள் **காரணப் பெயர்களாம்.**

III. இச்செய்யுட்களில் உள்ள பெயரெச்சம், வினையெச்சங்களை எடுத்தெழுதுக.

# II. தமிழ் மொழி

எடுப்பு

வெண்ணிலாவும் வானும் போலே
வீரனும்கூர் வாளும் போலே

மேல் எடுப்பு

வண்ணப்பூவும் மணமும் போலே
மகர யாழும் இசையும் போலே
கண்ணும்ஒளியும் போலே எனது
கன்னல் தமிழும் நானும் அல்லவோ ? (வெண்)

தொடுப்பு

வையகமே உய்யு மாறு
வாய்ந்த தமிழென் அரும் பேறு
துய்யதான சங்க மென்னும்
தொட்டிலில் வளர்த்த பிள்ளை
கையிலே வேலேந்தி (தம்)
கடலுலகாள் மூவேந்தர்
கருத்தேந்திக் காத்தார் அந்தக்
கன்னல்தமிழும் நானும்நல்ல (வெண்)

—பாரதிதாசன்

## ஆசிரியர் குறிப்பு

**பாரதிதாசன் :** இவரது இயற்பெயர் கனக சுப்புரத்தினம் என்பதாம். இவர் தற்காலத்தில் உள்ள சிறந்த புலவர்களில் ஒருவராவர். தற்சமயம் இவர் புதுவையில் வாழ்ந்து வருகிறார். இவர் இயற்றிய கவிதைகளும் நூல்களும் பற்பலவாம். இவருடைய பாடல்கள் யாவும் சீர்திருத்த நோக்கம் வாய்ந்தவை. ஆகையால் இவரைப் புரட்சிக் கவிஞர் என்று மக்கள் கொண்டாடுகின்றனர்.

## அருஞ்சொல் விளக்கம்

வண்ணம் - அழகு ; மகரயாழ் - மீன் வடிவமாகச் செய்யப்பட்ட யாழ் ; கன்னல் - கரும்பு ; வையகம் - உலகம் ; உய்யுமாறு - பிழைக்குமாறு ; பேறு - பாக்கியம் ; துய்யதான - தூய்மையுடைய ; மூவேந்தர் - சேர, சோழ, பாண்டியர்.

## வினுக்கள்

1. தமிழுக்கும் தமிழனுக்கும் உள்ள தொடர்பை ஆசிரியர் எங்ஙனம் விளக்குகிருர் ?

2. தமிழின் பெருமைகளே எழுதுக.

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக :**—வெண்ணிலா, அரும்பேறு, மூவேந்தர், கருத்தேந்தி.

II. நிலவும் வானும், பூவும் மணமும், யாழும் இசையும், கண்ணும் ஒளியும் ஆகியவைகள் ஒன்றை விட்டு ஒன்றைப் பிரிக்க முடியாத தொடர்புடையன. இங்ஙனம் பிரிக்க முடியாத தொடர்புடைய வேறு சிலவற்றை எழுதுக.

III. வையகம் - பொருள்கள் வைக்கப்பட்ட இடமாதலின் பூமி வையகம் எனப் பெயர் பெற்றது. ஒரு காரணம் கருதி இடப்பட்ட இப்பெயர் காரணப் பெயராம்.

காரணப் பெயருக்கு வேறு சில உதாரணங்கள் தருக.



# III. இயற்கை இன்பம்

## முழுநிலா

நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலாவென்று காட்டுகின்ருய் ஒளிமு கத்தைக்
கோலமுழு தும்காட்டி விட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்!
சொக்கவெள்ளிப் பாற்குடமோ! அமுத ஊற்ருே!
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ! (1)

அந்தியிரு ளால்கருகும் உலகு கண்டேன்;
அவ்வாறே வான்கண்டேன்; திசைகள் கண்டேன்
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?
பெருஞ்சிரிப்பின் ஒளிமுத்தோ நிலவே நீதான்!
சிந்தாமல் சிதறாமல் அழகை யெல்லாம்
சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி
இந்தாவென் றேஇயற்கை அன்னை வானில்
எழில்வாழ்வைச் சித்திரித்த வண்ணம் தானோ! (2)

உனைக்காணும் போதினிலே என்னுள் ளத்தில்
ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு
நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை
நித்திய தரித்திரராய் உழைத்து ழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிதுகூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின்நிலவே உனைக்காணும் இன்பந் தானோ! (3)

—பாரதிதாசன்

## அருஞ்சொல் விளக்கம்

1. வான் - ஆகாயம்; கோலம் - அழகு; கொள்ளை - மிகுதி; சொக்கவெள்ளி - கலப்பில்லாத வெள்ளி; பரிதி - சூரியன்; கனல் - வெப்பம்; பிழம்பு - தொகுதி.

2. அந்தி - மாலைக்காலம்; கருகும் - இருளடையும்; சேகரித்து - ஒன்று சேர்த்து; எழில் - அழகு; வண்ணம் - அழகு, நிறம்.

3. நித்தியம் - எப்பொழுதும்; தினைத்துணை - சிறிதளவு; பானை ஆர - பானை நிறைய; கவின் - அழகு.

## வினக்கள்

1. ஆசிரியர் முழு நிலாவை எவற்றிற்கு ஒப்பாகக் கூறுகிருர் ?

2. பெருஞ் சிரிப்பின் ஒளி முத்தோ—இக்கருத்தை விளக்குக.

3. இயற்கை அன்னே நமக்குப் புரிந்துள்ள உதவி யாது ?

4. முழு நிலாவைக் காண்பதால் ஆசிரியர் எத்தகைய இன்பத்தைப் பெறுவதாகக் கூறுகிருர் ?

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—நிலாவென்று, பாற்குடம், செம்பரிதி, குளிரடைந்த, காரிருள், உழைத்துழைத்து.

II. **சேர்த்தெழுதுக** :—அழகை + எல்லாம் ; குளிர் + ஏற்றி ; இந்தா + என்று ; என் + உளம் ; தினே + துணேயும் ; வெண்மை + சோறு.

III. **இத்தொடர்களின் பொருளே விளக்குக** :—ஒளிமுகம், உலகம் சாம், நித்திய தரித்திரர், வானச் சோலே, கவின் நிலவு, பாற்குடம்.

IV. **நினேவில் கொள்க** :—

(1) செம்பரிதி - இத்தொடர் செம்மை பரிதி என இரண்டு சொற்களாலானது. இவற்றுள் செம்மை என்பது பண்புப் பெயர். மை - பண்பு விகுதி. செம்பரிதி என்னும் தொடரில் பண்புப் பெயர் மை விகுதி கெட்டு (தொக்கு) வந்தது. இதுபோன்ற தொடர்களுக்குப் **பண்புத் தொகை** என்பது பெயர். காரிருள் என்பதும் பண்புத் தொகையே. இப் பாடல்களிலிருந்து இதற்கு வேறிரண்டு உதாரணங்கள் தருக.

(2) வான் ஆடை, வானச் சோலே - இவ்விரு தொடர்களேயும் கவனியுங்கள். இவற்றில் ஆகாயத்தை ஆடையாகவும் சோலேயாகவும் ஆசிரியர் **உருவகம்** செய்துள்ளார். உருவகமாவது இரு பொருள்களே ஒற்றுமைப் படுத்திக் கூறுவதாம்.

V. பாரதிதாசனேப் பற்றிக் குறிப்பு வரைக.

VI. முழுநிலாவைப் பற்றிய ஆசிரியர் கருத்துக்களேத் தொகுத்துப் பதினெட்டு வரிகளில் எழுதுக.

# IV. அறவுரை

## 1. திருக்குறள்

### கடவுள் வாழ்த்து

மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (1)

### நீத்தார் பெருமை

செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (2)

### அறன் வலியுறுத்தல்

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (3)

### இல்வாழ்க்கை

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. (4)

### புதல்வரைப் பெறுதல்

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். (5)

### அன்புடைமை

அறத்திற்கே அன்புசார்(பு) என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. (6)

### விருந்தோம்பல்

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. (7)

### இனியவை கூறல்

இனிய உளவாக இன்னுத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (8)

### செய்ந்நன்றி அறிதல்

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. (9)

### நடுவு நிலைமை

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். (10)

### அடக்கமுடைமை

யாகாவார் ஆயினும் நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (11)

### ஒழுக்கமுடைமை

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலா தார். (12)

### பொறையுடைமை

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. (13)

### வெஃகாமை

இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம் வென்ற
புன்மையில் காட்சி யவர். (14)

### புறங்கூறுமை

கண்நின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்இன்று பின்னேக்காச் சொல். (15)

பயனில சொல்லாமை

சொல்லுக சொல்லின் பயனுடைய ; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். (16)

தீவினையச்சம்

தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். (17)

ஒப்புரவு அறிதல்

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்(கு) ஒல்கார்
கடனறி காட்சி யவர். (18)

ஈகை

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் ; அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். (19)

புகழ்

புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன். (20)

கூடா ஒழுக்கம்

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். (21)

கள்ளாமை

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். (22)

வாய்மை

தன்நெஞ்சு அறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். (23)

### வெகுளாமை

நகையும் உவகையும் கொல்லும் ; சினத்தின்
பகையும் உளவோ பிற. (24)

### இன்னு செய்யாமை

இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். (25)

### இறைமாட்சி

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப் படும். (26)

### கல்வி

கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு ;
மாடல்ல மற்றை யவை. (27)

### கல்லாமை

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்ருரோ(டு) ஏனை யவர். (28)

### கேள்வி

கற்றிலன் ஆயினும் கேட்க ; அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்ரும் துணை. (29)

### அறிவுடைமை

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (30)

சென்ற இடத்தாற் செலவிடா தீ(து)ஒரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு. (31)

### குற்றங்கடிதல்

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். (32)

### பெரியாரைத் துணைக்கோடல்

இடிக்கும் துணையாரை ஆள்வாரை ஆரே
கெடுக்கும் தகைமை யவர். (33)

### சிற்றினஞ் சேராமை

மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்(கு)
இனநலம் ஏமாப் புடைத்து. (34)

### தெரிந்து செயல்வகை

எண்ணித் துணிக கருமம் ; துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு. (35)

### வலியறிதல்

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். (36)

### காலமறிதல்

ஞாலம் கருதினும் கைகூடும் ; காலம்
கருதி இடத்தாற் செயின். (37)

### இடன் அறிதல்

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின். (38)

### தெரிந்து தெளிதல்

குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். (39)

### தெரிந்து வினையாடல்

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. (40)

சுற்றம் தழாஅல்

சுற்றத்தால் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். (41)

பொச்சாவாமை

அச்சம் உடையார்க்(கு) அரணில்லை ; ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. (42)

செங்கோன்மை

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. (43)

கொடுங்கோன்மை

அல்லற்பட்(டு) ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. (44)

வெருவந்த செய்யாமை

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். (45)

ஊக்கமுடைமை

சிதைவிடத்(து) ஒல்கார் உரவோர் ; புதையம்பிற்
பட்டுப்பா(டு) ஊன்றும் களிறு. (46)

மடியின்மை

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய(து) எல்லாம் ஒருங்கு. (47)

ஆள்வினையுடைமை

தெய்வத்தான் ஆகா(து) எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (48)

### இடுக்கண் அழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக ; அதனை
அடுத்தூர்வ(து) அஃதொப்ப தில். (49)

### அமைச்சு

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல(து) அமைச்சு. (50)

### சொல் வன்மை

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து. (51)

### வினைத் தூய்மை

சலத்தால் பொருள்செய் தேமார்த்தல் பசுமண்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. (52)

### வினைத் திட்பம்

துன்பம் உறவரினுஞ் செய்க ; துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. (53)

### வினை செயல் வகை

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். (54)

### குறிப்பறிதல்

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ(டு) ஒப்பக் கொளல். (55)

### அவையறிதல்

அவையறிந்(து) ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். (56)

நாடு

பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்(கு)
இறையொருங்கு நேர்வது நாடு. (57)

படை மாட்சி

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. (58)

படைச் செருக்கு

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஒட்டன்றோ வன்க ணவர்க்கு. (59)

நட்பு

முகநக நட்பது நட்பன்று ; நெஞ்சத்(து)
அகநக நட்பது நட்பு. (60)

நட்பாராய்தல்

உள்ளற்க உள்ளம் சிறுகுவ ; கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு. (61)

பழமை

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். (62)

தீ நட்பு

அமரகத்(து) ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை. (63)

கூடா நட்பு

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். (64)

குடிமை

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். (65)

மானம்

குன்றின் அனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். (66)

பெருமை

பெருமை யுடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை யுடைய செயல். (67)

சான்றாண்மை

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்(கு)
ஆழி யெனப்படு வார். (68)

குடிசெயல் வகை

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். (69)

உழவு

இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். (70)

## ஆசிரியர் குறிப்பு

திருவள்ளுவர்: இவர் மயிலாப்பூரில் பிறந்தனரென்பர். இவர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். வெகு காலத்திற்கு முன்பு தோன்றிய இவரது வாழ்க்கை வரலாற்றைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. இவர் இயற்றிய உலகப் பொது நூலாம் திருக்குறளிலிருந்து இவர் அரசர்க்கு அந்தரங்க ஆலோசனை கூறும் அரும்பணியை மேற்கொண்டிருந்தனர் என்று கூறலாம். ‘வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு’ எனப் பாரதியார், திருவள்ளுவர் தோன்றியமையால் தமிழ் நாடு அடைந்த பெருமையைப் பாராட்டுகிறார்.

திருக்குறள் : திரு + குறள் = மேன்மை பொருந்திய குறள் வெண் பாக்களாலாகிய நூல். இஃது அறம், பொருள், இன்பம் என முப்பால்களை யுடையது. அதிகாரத்துக்குப் பத்துக் குறள்களாக 133 அதிகாரங்களையும் 1330 குறட்பாக்களையும் உடையது. ‘அணுவைத் துளைத்து எழுகடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்’ என்பதால் இதன் பெருமை விளங்கும். இது லத்தீன், ஜெர்மன், பிரெஞ்சு, ஆங்கிலம் முதலிய பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. திருக்குறளின் கருத்துக்களை எடுத்தாளாத புலவர் இலர்.

## அருஞ்சொல் விளக்கம்

1. மலர் - அன்பர் உள்ளத் தாமரை ; மாண் அடி சேர்தல்-பெருமை பொருந்திய திருவடிகளை நினைத்தல் ; நிலம் - மோட்ச உலகம்.

3. மாசு-குற்றம், மாசு + இலன் = மாசிலன் ; ஆதல்-ஆகக் கடவன்; அனைத்து - அவ்வளவே ; ஆகுல நீர - ஆரவாரத் தன்மையுடையன.

4. அன்பு : இல்வாழ்க்கையின் பண்பு ; அறம் : இல்வாழ்க்கையின் பயன்.

5. மகன் + கு = மகற்கு ; அவை - சபை ; முந்தி இருப்ப - அறிவால் முற்பட்டு இருக்க.

6. சார்பு - துணை ; மறத்துக்கும் - பாவத்தைப் போக்குதற்கும் ; அஃது - அவ்வன்பு.

7. விருந்தோம்பல்-புதியராய் வந்தவரைப் போற்றுதல் ; குழையும்-வாடும் ; அனிச்சம் - ஒரு மலர் ; திரிந்து-வேறுபட்டு ; விருந்து - புதுமை ; பண்பாகு பெயராய் விருந்தினரைக் குறித்தது.

8. இன்னாத - துன்பம் தரும் சொற்கள் ; கவர்ந்தது + அற்று ; கவர்ந்தற்று - தின்றது போன்றது.

9. வையகம் - உலகம் ; செய்யாமற் செய்த உதவி - தாம்முன்பு ஓர் உதவியும் செய்யாதிருக்கும் போது பிறர் செய்த உதவி; ஆற்றல் - சமமாதல்.

10. இகந்து - நீங்கி ; ஆக்கம் - செல்வம் ; அன்றே - அப்போதே ; விடல் - விடுக ; நடு + இகந்து + ஆம் = நடுவிகந்தாம்.

11. யா - காக்கவேண்டுவன யாவற்றையும் ; இழுக்கு - குற்றம் ; சோகாப்பர் - துன்பப்படுவர்.

12. உலகம் - உயர்ந்தோர் ; ஒட்ட - பொருத்தமாக ; உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார் பலகற்றும் அறிவிலாதார் எனக் கூட்டுக.

13. இறப்பினை - மிகையை, குற்றத்தை ; பொறுத்தல் - பொறுக்கக் கடவன் ; அதனினும் - அங்ஙனம் பொறுத்தலினும்.

14. இலம் - வறியோம் ; வெஃகுதல் - (பிறர் பொருளை) விரும்பு தல் ; புலம் - ஐம்புலன்கள் (காணல், கேட்டல், சுவைத்தல், மோத்தல், தொடுதல்) ; காட்சி - அறிவு.

15. கண் நின்று - எதிரிலிருந்து ; கண்ணற : கண் + அற - தாட் சணியமின்றி ; பின் நோக்கா சொல் - பின்வரும் குற்றத்தை நோக்காத சொல்.

17. காதலன் ஆயின் - விரும்புவானாயின் ; எனைத்து ஒன்றும் - எவ்வளவு சிறிய தொன்றாயினும் ; பால் - பகுதி ; துன்னற்க - (பிறரிடம்) செய்யாதொழிக.

18. இடன் - செல்வம் ; ஒப்புரவு - உபகாரம் ; ஒல்கார் - தளர்ச்சியடை யார் ; காட்சி - இயல்பான அறிவு.

19. ஆற்றுவார் - தவசிகள் ; ஆற்றல் - வலிமை, பொறுத்திருத்தல் ; மாற்றுவார் - நீக்குபவர்.

20. புகழ்பட - புகழ் உண்டாக ; நோவார் - வெறுக்காதவராகி ; எவன் - எக்காரணம் பற்றி.

21. மழித்தல் - மயிரை நீக்குதல் ; நீட்டல் - மயிரை வளர்த்தல் ; பழித்தது - கூடாவொழுக்கத்தை.

22. ஆக்கம் - செல்வம் ; ஆவது போல - வளர்வது போல (தோன்றி) ; அளவு இறந்து - எல்லையைக் கடந்து.

23. அறிவது - அறிந்த ஒன்றை ; சுடும் - வருத்தும் (பயனாகிய துன் பத்தை அடைவிக்கும்.)

24. உவகை - மன மகிழ்ச்சி ; சினத்தின் - கோபத்தைக் காட்டிலும்.

25. ஒறுத்தல் - தண்டித்தல் ; நயம் - மகிழ்ச்சி ; விடல் - அவர் செய்த தீமையையும் தாம் செய்த நன்மையையும் மறத்தல்.

26. முறை செய்து - நீதி செலுத்தி ; இறை-கடவுள் ; வைக்கப்படும்- கருதப்படுவான்.

27. விழுச் செல்வம் - சிறப்புடைய செல்வம் ; மாடு - செல்வம் ; மற்றையவை - ஏனைய மணி பொன் முதலான செல்வங்கள்.

28. இலங்கு - விளங்கிய, மேம்பட்ட ; ஏனையவர் - கல்லாதவர் ; கற்றாருக்கும் கல்லார்க்கும் உள்ள வேற்றுமை மக்களுக்கும் விலங்குக்கும் உள்ள வேற்றுமை போன்றதாம்.

29. ஒற்கத்தின் - தளர்ச்சி நேர்ந்த போது ; ஊற்று ஆம் - பற்றுக் கோடு ஆகும்.

30. யார்யார் வாய் - எத்தகையவர் வாயிலும் ; காண்பது - காண வல்லது.

31. ஓரீஇ - நீக்கி ; உய்ப்பது - (மனத்தை) செலுத்துவது.

32. தினைத்துணை - தினையளவு, சிறிது ; பனைத்துணை - பனையளவு, பெரிது ; நாணுவார் - அஞ்சுபவர்.

33. இடிக்கும் துணையார் - (தீயன கண்டால்) நெருங்கிச் சொல்லும் துணையாந் தன்மையுடையோர் ; ஆள்வார் - போற்றும் அரசர் ; தகைமையவர் - பெருமையுடைய பகைவர்.

34. இன நலம்-கூடியிருப்போரின் நலம், (நற்குணமுடைய நண்பர்)

35. துணிக - தொடங்குக ; ஏமாப்பு - வலிமையாதல் ; கருமம் - செயல் ; இழுக்கு - குற்றம்.

36. ஊக்கம் - மன எழுச்சி ; ஊக்கி - வினையைத் தொடங்கி ; முனிந்தார் - கெட்டவர்.

37. ஞாலம் கருதினும் - உலகம் முழுவதும் ஆள நினைத்தாலும் ; கைகூடும் - வசப்படும்.

38. எஞ்சாமை - (பகைவரிடம் செய்யும் தொழில்களை) குறையாமல்; அஞ்சாமை - மனவுறுதி.

39. மிகை - மிக்கவற்றை ; நாடி - ஆராய்ந்து.

40. தேற்றம் -(செயலில்) மனங் கலங்காமை; அவாவின்மை - ஆசையின்மை ; உடையான் கட்டே - உடையவனிடத்திலே ; வினையாடல் - வினையை ஆளுதல்.

41. சுற்றம் தழாஅல் - சுற்றத்தாரைத் தன்னைவிட்டு நீங்காமல் அணைத்தல் ; சுற்றப்பட ஒழுகல் - தழுவி நடத்தல் (வாழ்தல்).

42. பொச்சாவாமை - தற்காத்தலினும் பகையழித்தலினும் சோர்வடையாமை ; அரண் - காடு, மலை, நீர், மதில் முதலிய காவல்கள் ; பொச்சாப்பு - மறதி.

43. உலகு - உலகத்தார் ; தழீஇ - தழுவி, அணைத்து ; கோல் ஓச்சும்- செங்கோல் செலுத்தும்.

44. அல்லல் - துன்பம் ; ஆற்றுது - பொறுக்க மாட்டாமல் ; படை - ஆயுதம்.

45. வெருவந்த செய்யாமை - அஞ்சத்தக்க காரியங்களைச் செய்யா

திருத்தல்; கண்ணிலன் (கண் + இலன்) தாட்சணியமில்லாதவன்; நீடின்றி - (நீடு + இன்றி) நெடுநாள் தங்காமல்.

46. களிறு - யானை; புதை அம்பு - கட்டாகிய அம்பு; பாடு - பெருமை; உரவோர் - மன எழுச்சியுடையோர்; சிதை விடத்து - (உயர்ச்சிக்கு) அழிவு வந்தபோது; ஒல்கார் - தளர்ச்சியடையார்.

47. மடி - சோம்பல்; அடி அளந்தான் - திரிவிக்கிரமன்; தாயது - கடந்த உலகங்கள்.

48. தெய்வத்தான் - விதிவகையால்; மெய்வருத்தக் கூலி - உடல் வருந்தப் பாடுபட்டதன் பயன்.

49. இடுக்கண் - துன்பம்; அடுத்து ஊர்வது - மேலும் மேலும் அழிக்க வல்லது.

50. தெரிதல் - ஆராய்ந்து அறிதல்; தேர்ந்து - முடியும் வகை அறிந்து; ஒரு தலையா(க) துணிவு பிறக்கும் வகையில்.

52. சலம் - தீய செயல்கள்; ஏமார்த்தல் - (ஏமம் + ஆர்த்தல்) பாதுகாப்பைச் செய்தல்; பசுமண் - (பசுமை + மண்) ஈரமண்; இரீஇ அற்று - காப்பைச் செய்ததுபோன்றது.

53. உற - மிகுதியாக; துணிவு ஆற்றி - மனங்கலங்காதவராய்.

54. எச்சம் - மிகுதியாக இருத்தல்; தெறும் - கெடுக்கும்.

56. அவையறிந்து - சபையின் தகுதியறிந்து; சொல்லின் தொகை - சொல்லின் கூட்டத்தை (வகையை).

57. பொறை - (பிற நாடுகளைச் சுமந்த) பாரம்; இறைவன் - அரசன்; இறை - வரிப்பணம்; ஒருங்கு நேர்வது - முழுவதையும் உடன்பட்டுக் கொடுத்தல்.

58. கூற்று - இயமன்; உடன்று - கோபித்து; ஆற்றல் - மனவலிமை.

59. வன்கணவர் - வீரர், அஞ்சாமையுடையவர்; ஒட்டு அன்றோ - தோல்வி அன்றோ?

61. உள்ளம் - ஊக்கம்; ஆற்று அறுப்பார் - கைவிடுவோர்.

62. பழமை - நண்பர் பழையராம் தன்மைபற்றி அவர் செய்த குற்றங்களைப் பொறுத்தல்; அழிவந்த - அழிவு தரத்தக்க கேடுகள்; அன்பு + அறார் - அன்பறார், அறார் - ஒழியார்; வழிவந்த - பழமையாய் உண்டான; கேண்மை - நட்பு.

63. அமர் - போர்; ஆற்று அறுக்கும் - போர்க்களத்தில் தள்ளிவிட்டுச் செல்லும்; மா அன்னர் - குதிரை போன்றவர்; தமரின் - உறவைக் காட்டிலும்.

64. ஒன்ஞர்கண் - பகைவரிடம் ; வில்வணக்கம் - வில்லின் வளைவு.
65. இழுக்கார் - விலகமாட்டார்.
66. குன்றுவ - தாழ்வதற்குக் காரணமான செயல்களை ; குன்றி - குன்றிமணி ; குன்றுவர் - தாழ்வர்.
67. ஆற்றின் - (செய்யவேண்டும்) முறைப்படி ; ஆற்றுவர் - (முடிவு பெற) செய்வர்.
68. சான்ருண்மைக்கு - சால்புடைமையாகிய கடலுக்கு; ஆழி - கரை; ஊழி பெயரினும் - காலம் மாறுபட்டாலும்; பெயரார் - வேறுபடார்.
69. செய்வல் - செய்யக் கடவேன் ; மடி தற்று - உடையை இறுக உடுத்திக்கொண்டு ; முந்துறும் - முன்னே வந்து நிற்கும்.
70. இலம் - வறியோம் ; அசைஇ - சோம்பி ; நகும் - சிரிப்பாள்.

### பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—செயற்கரிய, நடுவிகந்தாம், பசியாற்றல், உய்ப்பதறிவு, அவாவின்மை, கூற்றுடன்று, குணநாடி, குன்றியனைய, அன்பருர், கண்ணிலன்.

II. **சேர்த்தெழுதுக** :—பயன் + உடைய, அறிவு + இலாதார், நன்மை + நயம், தினை + துணை, மெய் + பொருள், அகத்தது + உணர் வான், பொறை + ஒருங்கு, இ + மூன்று.

III. **எதிர்ப்பதங்கள் தருக** :—இனிய, கற்ருேர், அறம், நன்று, பொறுத்தல், சொல்லுக, அஞ்சாமை, குணம், பகை, பெருமை.

IV. இப்பகுதியிலுள்ள குறட்பாக்களுக்கு வாரத்துக்கு ஐந்து வீதம் பொழிப்புரை எழுதி எல்லாப் பாக்களையும் உரையையும் நன்கு மனப் பாடம் செய்க. இவை வாழ்க்கைக்குத் துணை புரிவனவாம்.

## 2. நாலடியார்

### அறத்தின் பயன்

உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்(கு)—அறப்பயனும்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். (1)

### முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்

பல்லாவு ளுய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. (2)

### முறைகள் பலவேனும் அறநெறி ஒன்றே

ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகு மறநெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு. (3)

### பெரியோர், சிறியோர் நட்பின் திறம்

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. (4)

### கற்றறிந்தவரே உயர்ந்தோர்

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர் ;
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும். (5)

### நற்குடிப் பிறந்தோர் இயல்பு

ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்(கு)
ஒல்கார் குடிப்பிறந் தார். (6)

நல்லோரைச் சார்ந்தோர் நலம் பெறுவர்

பாலோ டளாயநீர் பர்லாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்ருதாம்—தேரிற்
சிறியார் சிறுமையுந் தோன்ருதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. (7)

அறிவுடையோர் அடங்கி யிருப்பர்

கற்றறிந்த நாவினர் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி. (8)

## ஆசிரியர் குறிப்பு

**சமண முனிவர்கள் :** முற்காலத்திற் சமண முனிவர் எண்ணுயிரவர் கொடிய பஞ்சத்தால் வருந்திப் பாண்டிய நாடடைந்தனர் ; அவர்கள் பாண்டிய மன்னனுல் ஆதரிக்கப்பட்டு இனிது வாழ்ந்தனர்; பஞ்சம் நீங்கி நாடு வளம்பெற்ற பின் தத்தம் நாடு செல்ல விரும்பினர்; ஆனுல் அரசன் அவர்களுக்கு விடை தராமல் காலம் தாழ்த்தனன். அதனுல் அவர்கள் ஒரு நாள் இரவு ஒவ்வொரு வெண்பாவைப் பாடித் தம் இருப்பிடத்தில் வைத்துவிட்டு ஒருவரும் அறியாமல் சென்றுவிட்டனர். பொழுது விடிந்த பின் அரசன் செய்தி அறிந்து அப்பாடல்களை வைகையாற்றில் எறிந்து விடுமாறு உத்தரவிட்டான். அவற்றில் நானூறு பாடல்கள் வெள்ளத்தை எதிர்த்து நாலடி சென்றன. அவ்வற்றை எடுத்து வேந்தன் பதுமனுரிடம் கொடுத்து ஒரு நூலாகத் தொகுப்பித்தான் என்பது வரலாறு. காலம் : கடைச் சங்க காலம் (கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்ருண்டு) ஒன்பதாம் நூற்ருண்டு எனவும் சிலர் கருதுகின்றனர்.

நாலடியார் : நாலடி வெண்பாக்களாலாகிய நூல். நாலடி நானூறு, வேளாண் வேதம் என்பன மறு பெயர்கள்.

## அருஞ்சொல் விளக்கம்

1. உறக்கும் துணையது-சிறிய அளவினதாகிய; ஈண்டி - வளர்ந்து; இறப்ப - மிகுதியாக ; பயத்தல் - தருதல் ; ஆங்கு - போல ; தக்கார் - தகுதியுடையவர் ; வான் - ஆகாயம் ; போர்த்துவிடும் - மறைத்துவிடும்.

2. குழ - இளமை ; கோடல் - கொள் + தல் ; கிழவனை - உரிமை யுடையவனை ; பழவினை - முற்பிறப்பிற் செய்த வினை.

3. ஆ - பசு ; கொளல் - கொள்க.

4. கேண்மை - நட்பு ; நந்தும் - வளரும் ; மதியம் - சந்திரன் ; வைகலும் - நாள்தோறும் ; தொடர்பு - நட்பு.

5. களர்நிலம் - பயனற்ற உவர் நிலம் ; விழுமிதா(க) - மேலாக ; வைக்கப்படும் - வைக்கவேண்டும்.

6. புடை - பக்கம் ; அம்கண் - அழகிய இடத்தை யுடைய ; மாஞாலம் - பெரிய உலகம் ; செல்லாமை - வறுமை; செல்வன் - நன்ருக ; ஒப்புரவு - உதவி ; ஒல்கார் - தளர்ச்சியடையார்.

7. அளாய - கலந்த ; தேரின் - ஆராய்ந்தால்.

8. சோர்வு அஞ்சி - குற்றம் உண்டாகும் எனப் பயந்து ; பகர்வர் - கூறுவர் ; கலகலக்கும் - ஒலிக்குறிப்பு.

## விஞக்கள்

1. ஆலம் வித்து எக்கருத்தை விளக்க வந்தது ?
2. பழவினை, செய்தவரைத் தவருமல் வந்தடையும் என்பதற்குத் தரப்பட்டுள்ள உவமை யாது ?
3. பால்போல் ஒரு தன்மைத்தாகும்—எது ? கருத்தை நன்கு விளக்குக.
4. எத்தகையவர் தொடர்பு சிறந்தது? ஏன்? உவமையை விளக்குக.
5. உப்பினுல் விளக்கப்படும் உயர் கருத்து யாது ?
6. நற்குடிப் பிறந்தோர் எதற்கு ஒப்பாவர் ? எங்ஙனம் ?
7. பாலோடளாய நீர் பாலாகும்—உவமேயத்தை விளக்குக.

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—வித்தீண்டி, பால்வேறுருவினவல்லவாம், கற்றறிந்தோரை, ஒப்புரவிற் கொல்கார், பாலோடளாய, பழவினை, பச்சோலை.

II. **சேர்த்தெழுதுக** :—குழ + கன்று; தன் + செய்த ; அம் + கண்; செவ்வன் + நேர் ; அறம் + நெறி ; சோர்வு + அஞ்சி.

III. **நினைவிற்கொள்க** :—பயந்தாஅங்கு—இங்கு பயந்த + ஆங்கு என்னும் இருசொற்கள் சேர்ந்து வந்தன. ‘ தா ’ என்னும் நெட்டெழுத்து இயல்பாக உள்ள இரண்டு மாத்திரைகளுக்கு மேலாக ஒரு

மாத்திரை ஒலிக்கிறது. இங்ஙனம் உயிரெழுத்து நீண்டு ஒலிப்பதற்கு உயிர் **அளபெடை** என்பது பெயர்; ஆ என்னும் நெட்டெழுத்து அளபெடுத்தபோது அதன் இனமாகிய 'அ' என்னும் குற்றெழுத்து அடையாளமாக வந்தது. இவ்வாறே விளக்குறூஉம் என்னும் இடத்திலும் 'றூ' என்னும் நெட்டெழுத்து அளபெடுத்து அதன் இனமாகிய உ என்னும் குற்றெழுத்தை அடையாளமாகப் பெற்றுவந்தமை காண்க.

IV. கலகலக்கும்—இத்தொடர் ஒலியைக் குறிக்கிறது. இத்தொடரிலுள்ள கல கல என்னும் இரண்டும் ஒன்ருகச் சேர்ந்தே பொருள்படும். பிரித்தால் பொருள்படாது. இதற்கு **இரட்டைக் கிளவி** என்பது பெயர். வேறு சில உதாரணங்கள் தருக.

## 3. நீதிநெறி விளக்கம்

### கல்வியின் சிறப்பு

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்;
புறங்கடை நல்லிசையும் நாட்டும்;—உறுங்கவலொன்(று)
உற்றுழியும் கைகொடுக்கும்; கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. (1)

### தற்பெருமை கொள்ளற்க

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்ருல்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (2)

### புகழை அடையும் வழி

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல். (3)

### செல்வர் கடமை

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்(டு)
ஊரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. (4)

### ஊழையும் முயற்சியால் வெல்லலாம்

உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே சாலுங் கரி. (5)

### பகை சிறிதென எள்ளலாகாது

சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது. (6)

### நன்மை செய்யும் மொழியே இன்மொழியாம்

இனியவ ரென்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும் [பச்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்
சிங்கி குளிர்ந்துங் கொலும். (7)

### வறுமையிற் செம்மை

நல்லா ரொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்தும் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். (8)

## ஆசிரியர் குறிப்பு

**குமர குருபர சுவாமிகள் :** பாண்டிய நாட்டில் ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரில் வேளாளமரபில் தோன்றியவர். சண்முக சிகாமணிக் கவிராயரும் சிவகாமி அம்மையாரும் இவர்தம் பெற்றோராவர். இவர் ஐந்து வயதுவரையில் பேசும் திறமை பெறவில்லை; திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் வல்லமை பெற்றார். இவர் திருமலை நாயக்கரின் வேண்டுகோளின்படி நீதிநெறிவிளக்கம் என்னும் இந்நூலைப் பாடினார். காலம் : பதினேழாம் நூற்றாண்டு.

நீதிநெறி விளக்கம் : ஒழுக்க வழிகளை விளக்கிக் காட்டும் நூல்.

## அருஞ்சொல் விளக்கம்

1. பயக்கும் - கொடுக்கும்; புறங்கடை - தலைவாயிலில்; இசை புகழ்; உறும் கவல் - மிக்க கவலை; உற்றுழி - நேர்ந்தபோது; ஊங்கு - மேலான பொருள்.

2. வியப்பிப்பான்-பெருமைப்படுத்திக் கொள்வதற்காக; சொரிந்து-பெய்து; நயவாமை - விரும்பாமை; தற்புகழ்தல் - தன் + புகழ்தல்.

3. சுட்டு - மதிப்பு; யாண்டும் - எப்பொழுதும்; புறம் காத்து - வெளிவிடாமல் காப்பாற்றி; தாழ்ச்சி - பணிவான சொற்கள்.

4. கவளம் - ஒரு பிடி உணவு; தூங்கும் - அசையும்; களிறு - ஆண்யானைகள்; உய்யும் - பிழைக்கும்; ஆரும் கிளை - நிறைந்த சுற்றத்தினர்; அயின்று - உண்டு.

5. உலையா - வருந்துதலில்லாத; களைகண் - பற்றுக்கோடு; ஊழ் - முன்வினைப்பயன்; வலி - வலிமை; பால்முளை - ஊழ்வினையாகிய முளை; மறலி - இயமன்; கால்முளை - மிருகண்டுவின் புதல்வனாகிய மார்க்கண்டேயன்; கரி - சாட்சி.

6. ஓம்புதல் - (பகைவரிடமிருந்து) பாதுகாத்தல்; காண்பு + அரிது-காண்பரிது; தேற்றார் - தெளியாதவர்; கயம் - குளம்.

7. சிங்கி, கடு - விஷம்; மெய் பொடிப்ப - உடல் சிலிர்க்கும்படி - வெய்து - வெம்மையுடையது.

8. பொறிய - புள்ளிகளையுடைய; புலி ஏறு - ஆண்புலி; புனம் - கொல்லை; பைங்கூழ் - பசுமையான பயிர்; நல்கூர்தல் - ஏழையாதல்; ஒருப்படார் - உடன்படார்.

## வினாக்கள்

1. கல்வியின் சிறப்புக்கள் யாவை ?

2. தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்று—இவ்வுவமையை விளக்குக.

3. பிறர் நம்மைப் புகழ நாம் கடைப்பிடிக்க வேண்டுவன எவை ?

4. செல்வர் கடமை யாது ? அதனை விளக்க வந்த உவமை யாது ?

5. மறலி உயிர்குடித்த கான் மூளை யார் ? இவரது வாழ்க்கை உணர்த்தும் நீதி யாது ?

6. தவளை குதிப்பினும் யானை நிழல் காண்பதரிது—உவமேயத்தை விளக்குக.

7. சிங்கி குளிர்ந்தும் கொலும்—இதனால் அறியப்படும் உண்மை யாது ?

8. 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ ?'—இப்பழமொழி உணர்த்தும் நீதியை விளக்குக.

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக** :—நல்லிசை, சிற்றுயிர், தற்புகழ்தல், நன்னீர், நோற்பதொன்றுண்டு, கிளையோடயின்று.

II. **சேர்த்தெழுதுக** :—உலகு + அறிய, நன்மை + ஆறு, புலி + ஏறு, பசுமை + கூழ், செம்மை + கண்.

III. **பொருள் தருக** :—களிறு, கயம், கடு, புனம், பைங்கூழ், மறலி, கரி.

IV. **நினைவில் கொள்க** :—பெரும் **சுட்டு வேண்டுவான்** நோற்பது ஒன்று உண்டு.

இவ்வாக்கியத்தில் 'வேண்டுவான்' என்னும் சொல் வேண்டுதல் என்னும் செயலைக் குறிக்காமல் அச்செயலையுடைய ஒரு பொருளின் பெயரைக் (ஒருவனை) குறிக்கிறது. எனவே இத்தகைய சொற்கள் **வினையாலணையும் பெயர்களாம்**. இங்ஙனமே தேற்றார், நின்றார் என்னும் சொற்களும் செயலைக் குறிக்காமல் அச்செயலையுடைய பொருளின் பெயரைக் குறித்தல் காண்க. வேறு சில உதாரணங்கள் தருக.

# V. கதை




## 1. நளவெண்பா

### நளன் காணகத்தில் பாழ் மண்டபம் காணல்

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகம்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபம்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபம்கண்டான் வந்து. (1)

### பாழ் மண்டபத்தில் தங்குதல்

'மூரி இரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரும் இடம்மற்றுத் தானில்லை—சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்துயிலப்
போதராய்,' என்ருன் புலர்ந்து. (2)

### நளன் தமயந்தியைப் பிரிந்து செல்லக் கருதுதல்

காரிகைதன் வெந்துயரம் காணுமல் நீத்தந்தக்
கூரிருளில் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோர் ஆடை
அரிதற்(கு) அவன்நினைந்தான் ஆங்கு. (3)

### கலி வாளாய் மருங்கிருத்தல்

எண்ணிய எண்ணம் முடிப்ப இகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து. (4)

### நளன் ஆடையைத் துணித்தல்

ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றுந்தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான் அரிந்திட்(டு) அவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து. (5)

### பிரிந்து செல்லும்போது நளன் மனநிலை

போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோல ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். (6)

### தெய்வங்களை வேண்டல்

‘தீக்கா னகத்துறையும் தெய்வங்காள்! வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளில் கைவிட்டின்(று)
ஏதிலன்போல் போகின்றேன் யான்.’ (7)

### சூரியன் தோற்றம்

தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென்(று) அழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம். (8)

### நளன் நண்டுகளை நோக்கிக் கூறல்

காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ ஓடி
ஒளிக்கின்ற தென்னோ உரை. (9)

### நளன் கடலை நோக்கிக் கூறல்

போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்றும் என்போல ஆர்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொல் இன்று. (10)

### நளன் அயோத்தி நகரடைதல்

முன்னீர் மடவார் முறுவல் திரள்குவிப்ப
நன்னீர் அயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்கும் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கும் நன்னாட் டரசு. (11)

—புகழேந்திப் புலவர்

## ஆசிரியர் குறிப்பு

**நளவெண்பா :** இது நளனைப் பற்றிப் பாடிய வெண்பாக்களினால் ஆகிய நூல் எனப் பொருள்படும். ஆசிரியர் புகழேந்திப் புலவர். இவர் செங்கற்பட்டுக்கு அடுத்த பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர்; மள்ளுவ நாட்டை ஆண்டுவந்த சந்திரன் சுவர்க்கி என்னும் அரசரால்

ஆதரிக்கப்பெற்றவர். 'வெண்பாவிற் புகழேந்தி' என்பது இவருடைய புகழை நன்கு விளக்கும். காலம்: பன்னிரண்டாம் நூற்றுண்டு.

## அருஞ்சொல் விளக்கம்

1. புகலிடம் - அடைக்கலமாக அடையும் இடம்; வெம்மை + கானகம் - வெங்கானகம்; கானகம் - காடு; வேலே - பொழுது; வெண்குடை - அரசனின் சிங்காதனத்தில் அமைக்கப்பெற்ற வெண் கொற்றக் குடை; வெண்மை + குடை - வெண்குடை; நிழல் + கீழ் - நிழற்கீழ்.

2. மூரி - பெரிய; மூண்டது - மிகுந்தது; சாரும் - அடையும்; மற்று - வேறு; சோர்கூந்தல் - அவிழ்ந்த தலே மயிர்; போதராய் - வருவாய்; புலர்ந்து - மனம் வாடி.

3. காரிகை - பெண், தமயந்தி; வெம்மை + துயரம் - வெந்துயரம்; கூர் இருள் - மிக்க இருள்; கூர் - மிகுதிப் பொருள் தரும் உரிச்சொல்; அரிதற்கு - அறுத்தற்கு.

4. இகல் - போர்; கண்ணியது - கருதியது; காய் - கோபிக்கின்ற, வருத்துகின்ற; கலி - கலி புருடன்; பண் - இராகம்; கேள் - உறவு; தேன் + மொழி - தேமொழி (இனிய சொல்); கிளர் - விளங்குகின்ற; மருங்கு - பக்கம்.

5. ஒற்றைத் துகில் - ஓர் ஆடை; முதலோடும் - அடியோடும்; திகைத்து - மதி மயங்கி.

6. ஒரு கால் - ஒரு முறை; மீளும் - திரும்புவான்; ஆயர் - இடையர்; அடுபால் - காய்ச்சப்பெற்ற பால்; தோயல் - தயிர்; காலன் - இயமன்; வடிவு - உருவம்; வேலான் - வேற்படையையுடைய நளன்.

7. தீக்கானகம் - கொடிய காடு; வீமன் - தமயந்தியின் தந்தை; கோக்காதலி - அரச குமாரி; குறிக்கொண்மின் - பாதுகாப்பீர்களாக; கருமை + இருள் - காரிருள் (மிக்க இருள்); ஏதிலன் - அயலான்.

8. தையல் - பெண், தமயந்தி; தரியாது - பொருமல்; சிறகு - இறக்கை; வயிறு அலேத்து - வயிற்றில் அடித்துக்கொண்டு; வெய்யோன் - சூரியன்; வாவு - தாவிச் செல்கின்ற; பரி - குதிரை; கோழிக்குலம் - கோழிகளின் கூட்டம்.

9. பாதகன் - பாவி; நாதம் - ஒலி; ஆழி - கடல்; அலவன் - நண்டு.

10. இரங்கி - ஒலித்து, இரக்கம் கொண்டு; நாவாய் - ஓடம், நாக்கும் வாயும்; குழற - தடுமாற; தீவாய் - தீயில்; அரவு - பாம்பு; ஆர்கலி - நிறைந்த ஓசையை உடைய கடல்; மாது - பெண், தமயந்தி.

11. முன்னீர் - கடல், ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூன்று நீர் கலக்கப்பெற்றது (காரணப் பெயர்); மடவார் - மாதர்; முறுவல் திரள் - பற்களின் கூட்டம்போன்ற முத்துக்கள்; நன்மை + நீர் - நன்னீர்; பொன்நீர் - பொன்போன்ற தன்மையுடைய; முருகு - வாசனை; உடைக்கும் - பரவச் செய்கின்ற; மொய்ம் மலர் - இதழ்கள் நெருக்கமாக உள்ள தாமரை; தும்பி - வண்டு; அருகு - பக்கம்; உடைக்கும் - மலரச் செய்யும்.

## வினாக்கள்

1. நளன் பாழ் மண்டபத்தில் தங்க எண்ணியது ஏன்?
2. இருவர்க்கும் ஓர் உயிர்போல் எய்தியது எது? எங்ஙனம்?
3. நளன் ஆடையை அரிந்தமையை ஆசிரியர் எங்ஙனம் விளக்குகிறார்?
4. தோயல் கடைவார்தம் கை போல ஆயிற்று—எது? எவ்வாறு?
5. நளன் தெய்வங்களிடம் யாது வேண்டினன்?
6. கோழிகள் கூவியமைக்குப் புகழேந்தியார் கூறும்காரணம் யாது?
7. ஓடி ஒளிந்த நண்டினைக் கண்டு நளன் கூறியது யாது?
8. நளனுக்கும் கடலுக்கும் உள்ள ஒப்புமைகளை விளக்குக.
9. விதர்ப்ப நாட்டின் வளம் எத்தகையது?

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக**:—எங்காம், நிழற்கீழ், முற்றிருள், நீத்தந்த, தேமொழி, மீண்டேகும், விழுந்திரங்கி, அரவகற்றும், முருகுடைக்கும்.

II. **சேர்த்தெழுதுக**:—மருங்கு + இருந்தான்; ஒன்று + துகில்; போய் + ஒரு; வீமன் + தன்; வயிறு + அலைத்து; பரி + தேர்; இரவு + அகற்றி; மூன்று + நீர்; அருகு + உடைக்கும்.

III. காதலியைக் குறிக்கொண்மின், தோயல் கடைவார் - இவ்விரண்டில் முதல் தொடரில் இரண்டாம் வேற்றுமை உருபு வெளிப்படையாக உள்ளது. இவ்வாறு வேற்றுமை உருபு வெளிப்படையாக வரும் தொடர் **வேற்றுமை விரி** எனப்படும். இத்தொடர் இரண்டாம் வேற்றுமை விரியாம்.

இரண்டாம் தொடர் தோயலைக் கடைவார் என்று பொருள்படுகிறது. இங்கு இரண்டாம் வேற்றுமை உருபாகிய ஐ மறைந்துள்ளது. இவ்வாறு வேற்றுமை உருபு மறைந்து வருவது **வேற்றுமைத் தொகை**யாம். இஃது இரண்டாம் வேற்றுமைத் தொகையாம்.

மற்ற வேற்றுமை உருபுகளும் வெளிப்படையாகவோ மறைந்தோ வந்த விடங்களில் இவ்வாறே கொள்க.



'தீய சகுனி கெலித்திட்டான்'

## 2. பாஞ்சாலி சபதம்

### தருமர் சூதாட்டத்தில் சகதேவனை இழத்தல்

எப்பொழு தும்பிர மத்திலே—சிந்தை
ஏற்றி உலகமொ ராடல்போல்—எண்ணித்
தப்பின்றி இன்பங்கள் துய்த்திடும்—வகை
தானுணர்ந் தான்சக தேவனும்—எங்கும்
ஒப்பில் புலவனை ஆட்டத்தில்—வைத்தல்
உன்னித் தருமன் பணயமென்—றங்குச்
செப்பினன் ; சாயை உருட்டினர்—அங்குத்
தீய சகுனி கெலித்திட்டான். (1)

### சகுனி கூறியது

நகுலனை வைத்து மிழந்திட்டான் ;—அங்கு
நள்ளிருட் கண்ணொரு சிற்றொளி—வந்து
புகுவது போலவன் புந்தியில்—என்ன [ணம்
புன்மைசெய் தோம்? என எண்ணினன்—அவ்வெண்
மிகுவதன் முன்பு சகுனியும்—' ஐய,
வேறொரு தாயிற் பிறந்தவர்—வைக்கத்
தகுவரென் றிந்தச் சிறுவரை—வைத்துத்
தாயத்தி லேஇழந் திட்டனை ; (2)

' திண்ணிய வீமனும் பார்த்தனும்—குந்தி
தேவியின் மக்க ளெனையொத்தே—நின்னிற்
கண்ணிய மிக்கவ ரென்றவர்—தமைக்
காட்டுதற் கஞ்சினை போலும்நீ,'—என்று
புண்ணிய மிக்க தருமனை—அந்தப்
புல்லன் வினவிய போதினில்—தர்மன்
துண்ணென வெஞ்சின மெய்தியே—' அட !
சூதி லரசிழந் தேகினும், (3)

### தருமன் மறுமொழி

‘எங்களி லொற்றுமை தீர்ந்திடோம் ; ஐவர்
எண்ணத்தில், ஆவியி லொன்றுகாண் ;—இவர்
பங்க முற்றேபிரி வெய்துவார்—என்று
பாதகச் சிந்தனை கொள்கிறாய் ;—அட,
சிங்க மறவர் தமக்குள்ளே—வில்லுத்
தேர்ச்சியி லேநிக ரற்றவன் ;—எண்ணில்
இங்குப் புவித்தல மேழையும்—விலை
யீடெனக் கொள்ளத் தகாதவன் ; (4)

### பார்த்தனின் பண்புகள்

‘கண்ணனுக் காருயிர்த் தோழனும்—எங்கள்
கண்ணிலுஞ் சால இனியவன் ;
வண்ணமுந் திண்மையும் சோதியும்—பெற்று
வானத் தமரரைப் போன்றவன் ;—அவன்
எண்ணரு நற்குணஞ் சான்றவன் ;—புகழ்
ஏறும் விஜயன் பணயங்காண் !—பொய்யிற்
பண்ணிய காயை உருட்டுவாய்’—என்று
பார்த்திவன் விம்மி உரைத்திட்டான். (5)

### பார்த்தனை இழத்தல்

மாயத்தை யேஉரு வாக்கிய—அந்த
மாமனு நெஞ்சில் மகிழ்வுற்றே—கெட்ட
தாயத்தைக் கையினிற் பற்றினன் ;—பின்பு
சாற்றி விருத்தமங் கொன்றையே—கையில்
தாய முருட்டி விழுத்தினன் ;—அவன்
சாற்றிய தேவந்து வீழ்ந்ததால்,—வெறும்
ஈயத்தைப் பொன்னென்று காட்டுவார்—மன்னர்
இப்புவி மீதுள ராமன்றோ ? (6)

### தருமனின் மனநிலை

கொக்கரித் தார்த்து முழங்கியே—களி
கூடிச் சகுனியுஞ் சொல்லுவான்,—'எட்டுத்
திக்கனைத் தும்வென்ற பார்த்தனை—வென்று
தீர்த்தனம் வீமனைக் கூறெ,'ன்ருன்,—தர்மன்
தக்கது செய்தல் மறந்தனன்,—உளஞ்
சார்ந்திடு வெஞ்சின வெள்ளத்தில்—எங்கும்
அக்கரை இக்கரை காண்கிலன்;—அறத்
தண்ண லிதனை உரைக்கின்ருன். (7)

### வீமனின் இயல்புகள்

'ஐவர் தமக்கொர் தலைவனை,—எங்கள்
ஆட்சிக்கு வேர்வலி அஃதினை,—ஒரு
தெய்வ முன்னேநின் றெதிர்ப்பினும்—நின்று
சீறி அடிக்குந் திறலனை,—நெடுங்
கைவளர் யானை பலவற்றின் வலி
காட்டும் பெரும்புகழ் வீமனை,—உங்கள்
பொய்வளர் சூதினில் வைத்திட்டேன்—வென்று
போ!'என் றுரைத்தனன் பொங்கியே. (8)

### வீமனை வென்ற கௌரவர் மகிழ்ச்சி

போரினில் யானை விழக்கண்ட—பல
பூதங்கள் நாய்நரி காகங்கள்—புலை
ஓரி கழுகென் றிவையெலாம்—தம
துள்ளங் களிகொண்டு விம்மல்போல்,—மிகச்
சீரிய வீமனைச் சூதினில்—அந்தத்
தீயர் விழுந்திடக் காணலும்—நின்று
மார்பிலுந் தோளிலுங் கொட்டினர்;—களி
மண்டிக் குதித்தெழுந் தாடுவார். (9)

**தருமன் தன்னைத்தானே பணயம் வைத்திழத்தல்**

மன்னவர், தம்மை மறந்துபோய்,—வெறி
வாய்ந்த திருடரை யொத்தனர் ; அங்குச்
சின்னச் சகுனி சிரிப்புடன்—இன்னும்
செப்புக பந்தயம் வேறென்றான் ;—இவன்
தன்னை மறந்தவ னாதலால்—தன்னைத்
தான்பண யமென வைத்தனன் ;—பின்பு
முன்னைக் கதையன்றி வேறுண்டோ ?—அந்த
மோசச் சகுனி கெலித்தனன். (10)

—பாரதியார்

## அருஞ்சொல் விளக்கம்

**பாஞ்சாலி சபதம்:** பாஞ்சால நாட்டரசன் துருபதன் மகள் திரௌபதி யாவள். அவள் பாண்டவரை மணந்தாள். பாண்டவரில் மூத்தவரான தருமர் துரியோதனனுடன் சூதாடி நாடு நகரங்களையும் தம்பியரையும் தம்மையும் மனைவியையும் இழந்தார். அப்போது துரியோதனன் திரௌபதியைச் சபைக்கு இழுத்துவரச் செய்து அவமதித்த போது அவள் செய்த சபத மொழிகளின் வரலாற்றை இந்நூல் கூறுகிறது.

1. உன்னி - நினைத்து ; பணயம் - பந்தயம்.
2. புந்தி - புத்தி ; புன்மை - அற்பச் செயல் ; தாயத்தில் - சூதாட்டத்தில்.
3. திண்ணிய - வலிய ; துண்ணென - திடீரென.
4. பங்கம் - அழிவு ; பாதகம் - பாவமான ; மறவர் - போர் வீரர்.
5. வண்ணம் - நிறம், அழகு ; சோதி - ஒளி, புகழ் ; அமரர் - தேவர் ; சான்றவன் - நிறைந்தவன் ; பார்த்திவன் - அரசன், தருமன்.
6. விருத்தம் - எண்ணிக்கை.
7. கொக்கரித்து - ஆர்த்து, ஆரவாரித்து ; அறத்து அண்ணல் - தருமன்.
8. வேர் வலி - வேர் போன்ற வலிமை.
9. புலை - மாமிசம் தின்னும் ; ஓரி - முது நரி ; மண்டி - நிறைந்து.
10. செப்புக - கூறுக.

## வினுக்கள்

1. பாஞ்சாலி சபதம்—பெயர்க் காரணம் தருக.

2. சகதேவன் தன்மைகள் யாவை?

3. நள்ளிருட்கண் ஒரு சிற்ருெளி வந்து புகுவதுபோல்—உவமையை விளக்குக.

4. தருமன் நகுலனை இழந்தபின் சகுனி யாது கூறினன்?

5. ‘ஐவர் எண்ணத்தில் ஆவியிலொன்று 'காண்’—சந்தர்ப்பம் கூறி விளக்குக.

6. அருச்சுனன் இயல்புகளாகத் தருமன் கூறியன யாவை?

7. வீமனின் இயல்புகள் யாவை?

8. தருமன் வீமனை இழந்தபின் துரியோதனுதியர் பெற்ற மகிழ்ச்சிக்குத் தரப்பட்டுள்ள உவமையை விளக்குக.

9. தருமன் வீமனைப் பணயம் வைக்கவும், தன்னையே வைத்திழக்கவும் காரணங்கள் யாவை?

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக**:—சிற்ருெளி, என்றறிந்த, வெஞ்சினம், பங்கமுற்றே, ஆருயிர், வானத்தமரரை, நின்றெதிர்ப்பினும், திக்கனைத்தும்.

II. **சேர்த்தெழுதுக**:—காட்டுதற்கு + அஞ்சினை; பிரிவு + எய்துவார்; எண் + அரும்; தெய்வம் + முன்னே; மண்டி + குதித்து; இருள் + கண் + ஒரு; வேறு + ஒரு.

III. சிங்க மறவர் - சிங்கம் போன்ற மறவர் என்று பொருள்படும். இங்குப் போன்ற என்னும் உவம உருபு தொக்கி நிற்கிறது. ஆகையால் இஃது **உவமத் தொகை** எனப்படும். இதுபோன்ற வேறு இரண்டு உதாரணங்கள் தருக.

IV. இப்பகுதியில் வந்துள்ள வினையாலணையும் பெயர்களில் நான்கை எடுத்தெழுதுக.

# VI. பல்சுவை



## 1. விடுதலைக்கு உழைத்த வீரர்கள்

### காந்தி யடிகள்

சொல்லுவது எல்லார்க்கும் சுலப மாகும் ;
சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம் ;
எல்லையின்றி நீதிகளை எழுது வார்கள் ;
எழுதியது பிறருக்கே தமக்கென் றெண்ணுர் ;
தொல்லுலகில் நாமறிந்த தலைவர் தம்முள்,
சொன்னதுபோல் செயல்முயன்ருர் இவரைப் போல
இல்லையெனும் மோகனதாஸ் கரம்சந்த் காந்தி
இந்தியத்தாய் உலகினுக்கே ஈந்த செல்வம். (1)



வ. உ. சிதம்பரம் பிள்ளை

கள்ளமற்றுக் கலகலத்த பேச்சுக் கேட்கும்;
கறுப்பெனினும் சிரிப்புமுகம் கருணை காட்டும்;
குள்ளமென்னும் ஒருருவம் இருகை கூப்பிக்
குண்டெடுத்துக் கடைந்ததெனக் குலுங்க நிற்கும்;
வெள்ளையன்றி வேறுநிறம் அறியா ஆடை
வேதாந்த சித்தாந்த ஒளியே வீசும்;
கொள்ளைகொள்ளை சிறையிருந்த குறிகள் தோன்றும்
குலவுபிள்ளைச் சிதம்பரத்தை நினைவு கூர்ந்தால். (2)



## பாரதியார்

அச்சமிகும் பேடிமையின் அடிமை வாழ்வில்
அடங்கியிருந் தறம்மறந்த தமிழர் நாட்டைப்
பச்சைமரத் தாணியெனப் பதியும் சொல்லால்
பாட்டிசைத்துப் பாலர்களும் நிமிர்ந்து நின்று,
‘ நிச்சயமெந் தாய்நாட்டின் அடிமை வாழ்வை
நீக்காமல் விடுவதில்லை, யெனமுன் வந்து,’
துச்சமெனச் சுகத்தையெல்லாம் துறந்து நிற்கத்
தூண்டியது பாரதியின் சொல்லே யாகும். (3)

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

## ஆசிரியர் குறிப்பு

**வெ. ராமலிங்கம் பிள்ளை** - இவர் தற்போது வாழ்ந்து வரும் சிறந்த புலவர்; நம் இராச்சியத்தின் அரசவைக் கவிஞராக விளங்கியவர்; நாட்டுப்பற்றை ஊட்டும் வகையில் எளிய பல பாடல்கள் இயற்றியுள்ளார். இவர் சேலம் மாவட்டத்தில் நாமக்கல்லில் பிறந்தமையால் நாமக்கல் கவிஞர் என்று வழங்கப்படுகிறார்.

## அருஞ்சொல் விளக்கம்

1. தொல்லுலகு : தொன்மை + உலகு ; ஈந்த - தந்த.
2. வேதாந்தம் - வேத + அந்தம் ; அந்தம் - முடிவு ; சித்தாந்தம் -

கொள்கை; கொள்ளை கொள்ளை - மிகப் பலவாகிய; அறியா - அறியாத; குலவு - விளங்கும்.

3. பேடிமை - ஆண்மையற்ற தன்மை; துச்சம் - அற்பம்.

### விஞக்கள்

1. காந்தியடிகளின் போற்றத்தக்க பண்பு யாது?

2. வ. உ. சிதம்பரனுரைப் பற்றி நினைத்தால் எவை மனக்கண் முன் நிற்கும்.

3. பாரதியார் பாக்களின் சிறப்பை விளக்குக.

### பயிற்சி

I. **சேர்த்தெழுதுக :**—சொல்லுவது + எல்லார்க்கும்; அச்சம் + மிகும்; மரம் + ஆணி; பாட்டு + இசைத்து; சொல்லே + ஆகும்.

II. கொள்ளை கொள்ளை—இத்தொடரில் ஒரே சொல் இரு முறை தொடர்ந்து (அடுக்கி) வந்தது. இதில் உள்ள சொற்களைத் தனித்தனியே பிரித்தாலும் அவை பொருள்படுகின்றன. இங்ஙனம் வருவது அடுக்குத் தொடர் எனப்படும். இதுபோன்று வேறு உதாரணங்கள் தருக.

III. அறிந்த, இசைத்து, நிமிர்ந்து, மறந்த, அறியா, துறந்து—இச்சொற்களில் பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவற்றைப் பிரித்தெழுதுக.

## 2. தனிப்பாடல்கள்

### கடவுளரின் கலக்கம்

கம்பமத கடகளிற்ருன் தில்லை வாழும்
கணபதிதன் பெருவயிற்றைக் கண்டு வாடி
உம்பரெல்லாம் விழித்திருந்தார்; அயில்வேல் செங்கை
உடையவறு முகவனுங்கண் ணீரா ருனன்;
பம்புசுடர்க் கண்ணனுமோ நஞ்சுண் டான்; மால்
பயமடைந்தான்; உமையுமுடல் பாதி யானுள்;
அம்புவியைப் படைத்திடுவ தவமே என்று
அயனுமன்னம் இறங்காமல் அலைகின் ருனே. (1)

—காளமேகப் புலவர்

### சீதக்காதியின் ஈகைச் சிறப்பு

ஓர்தட்டி லேபொன்னும் ஓர்தட்டி லேநெல்லும்ஒக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலத்தி லேதங்கள் காரியப்பேர்
ஆர்தட்டி னும்தட்டு வாராம லேஅன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே. (2)

—படிக்காசுப் புலவர்

### புலவரின் சாதுரியம்

ஒருபாதி மால்கொள மற்ருெருபாதி உமையவள்கொண்(டு)
இருபாதி யாலும் இறந்தான் புராரி இருநதியோ
பெருவா ரிதியில்சர்ப் பம்பிலத் தில்பிறை வானில்கற்ப
தருவான போச! கொடையுன்கை ஒடென்கை தந்தனனே.
(3)

—பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்

### காளத்தி வள்ளலின் கொடைச் சிறப்பு

நீளத் திரிந்துழன்ருய் நீங்கா நிழல்போல
நாளக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீஎங்கே நான்எங்கே
இன்றைக்கே சற்றே இரு. (4)

—பழம் பாடல்

### மேகத்தை வேண்டுதல்

காரேஉன் நீரைஎல்லாம் கள்ளன் கவர்ந்தானே
நீரே உதவாய் நெறியாமோ—நேரேதான்
வாரிஉண்டு வாரிமொண்டு வாரிஉண்டு வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய். (5)

—வேதநாயகம் பிள்ளை

## ஆசிரியர் குறிப்பு

**காளமேகப் புலவர் :** இவரது இயற்பெயர் வரதர் என்பது. இவர் திருவானைக்காவில் வாழ்ந்தவர். நீருண்ட மேகம் விரைந்து மழை பொழிவதுபோல் கவிபாடும் ஆற்றலுடையவர். ஆதலால் 'காளமேகம்' எனப் பெயர் பெற்றார். இவர் நகைச்சுவை தோன்றவும் இருபொருள் படவும் பாடுவதில் வல்லவர் ; எண்ணியவுடன் பாடவல்லவர் ; எனவே ஆசுகவி எனப்படுவார். காலம் 16-ஆம் நூற்றாண்டு.

**படிக்காசுப் புலவர் :** தொண்டை நாட்டிலுள்ள பொன் விளைந்த களத்தூரில் பிறந்தவர் ; சிதம்பரத்தில் பஞ்சாக்கரப்படியில் சிவகாமி அம்மையின் அருளால் ஐந்து பொற்காசுகளைப்பெற்றமையால் இப்பெயர் பெற்றார். இவர் சீதக்காதியால் ஆதரிக்கப் பெற்றவர். காலம் : 17-ஆம் நூற்றாண்டு.

**பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் :** இவர் தொண்டை நாட்டினர் ; பலப்பல தனிப் பாடல்களைப் பாடியுள்ளார். காலம் 18-ஆம் நூற்றாண்டு.

**வேதநாயகம் பிள்ளை :** இவர் மாயூரத்தில் முனிசீப்பாக இருந்தவர் ; தமிழில் பற்றும் தமிழ்ப் புலவரிடம் பெருமதிப்பும் கொண்டவர் ; கிறித்தவ மதத்தினர். காலம் : 19-ஆம் நூற்றாண்டு.

## அருஞ்சொல் விளக்கம்

1. கம்பம் - கட்டுத்தறி; கடகளிறு - மதத்தையுடைய ஆண் யானை; தில்லை - சிதம்பரம் ; உம்பர் - தேவர் ; அயில் - கூர்மை ; கண்ணீராறு - கண் + ஈராறு, கண் + நீர் + ஆறு ; பம்பு - விளங்குகின்ற ; சுடர்க்கண்ணன் - நெருப்புக் கண்ணையுடைய சிவபெருமான் ; நஞ்சு - ஆலகால விஷம் ; பயமடைந்தான் - அச்சமடைந்தான், பாற்கடலை அடைந்தான் ; உடல் பாதியானாள் - உடல் இளைத்தாள், சிவபெருமான் உடலில் பாதிப் பகுதியைப் பெற்றாள் ; புவி - பூமி ; அவம் - வீண் ; அயன் - பிரமன் ; அன்னம் இறங்காமல் - உணவு ஏற்காமல், அன்ன வாகனத்தை விட்டு இறங்காமல்.

2. காரியப்பேர் - காரியஸ்தர் ; ஆர் - யார் என்பதன் மரூஉ ; சீதக்காதி - ஷேக் அப்துல் காதர் மரக்காயர் என்ற பெயருடன் காயல்பட்டினத்தில் வாழ்ந்த வள்ளல் ; வரோதயன் - வரத்தால் உதித்தவன் ; வர + உதயன்.

3. மால் - திருமால் ; புராரி - முப்புரங்களை எரித்த சிவபெருமான் ; இருநதி - கங்கை, பெரிய நதி ; வாரிதி - கடல் ; பிலம் - பாம்பின் புற்று ; பிறை - பிறைச் சந்திரன் ; கற்ப தரு - கற்பக மரம் ; போச - போச மன்னனைப் போல் கொடையில் சிறந்தவனே.

4. நீள - நீண்ட நாட்களாக ; நல்குரவு - வறுமை ; நின்றை - திரு நின்றையூர் ; உழன்றாய் - அலைந்தாய், வருந்தினாய்.

5. கார் - மேகம் ; உதவாய் - வழங்காமலிருக்கிறாய்; நெறி - முறை; வாரி - கடல், நீர், அள்ளி ; பேரி - முரசு, இடி.

## வினாக்கள்

1. கணபதியின் பெருவயிற்றைக் கண்டு யார் யார் எவ்வெந் நிலையை அடைந்தார்கள் ?

2. சீதக்காதியின் கொடைச் சிறப்பை விளக்குக.

3. இரு பாதியாலும் இறந்தான் புராரி—இவ்வாறு கூறுதல் எங்ஙனம் பொருந்தும் ?

4. சிவபெருமான் தமக்கு எதனை அளித்ததாகப் புலவர் கூறுகிறார்? அதற்குக் காரணம் என்ன ?

5. 'நீ எங்கே நான் எங்கே' சந்தர்ப்பம் கூறி விளக்குக.

6. வேதநாயகர் மேகத்தை வேண்டுவது யாது ?

7. வாரி உண்டு வாரி மொண்டு வாரி உண்டு—பொருளை விளக்குக.

## பயிற்சி

I. **பிரித்து எழுதுக :** செங்கை, ஈராறுணன், நஞ்சுண்டான், வரோதயன், புராரி, கடகளிறு, விழித்திருந்தார், திரிந்துழன்றாய்.

II. நீங்கா நிழல்—நீங்காத என்னும் சொல் எதிர்மறைப் பெயரெச்சம். அஃது இங்கு 'த' என்னும் இறுதி எழுத்து (ஈறு) கெட்டு வந்தமையால் **ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாகும்.**

III. அன்னம் - அன்னப் பறவை, சோறு ; பயம் - அச்சம், பால், வாரி - கடல், அள்ளி—இவ்வாறு ஒரு சொல் இரு பொருள்பட வருதல் உண்டு. இவற்றைப் போல் இரு பொருள் தரும் வேறு சில சொற்கள் தருக.

---



# MOOVAR TAMIL VACHAKAM

**BOOK III FOR FORM III**

GENERAL COURSE

By
Vidwan G. VILVAPATHY
Vidwan M. S. VENKATACHARI
&
T. R. SRINIVASAN, B. A., B. T.

***Price Rs. 1/2-***

---

*Copies can be had at :*
**54, SWAMI NAICKEN STREET**
**CHINTADRIPET, MADRAS-2**